بسم الله الرحمن الرحيم

# أحكام الميراث

## في الإسلام في ضوء الكتاب والسنة

# இஸ்லாமில் சொத்துரிமை சட்டங்கள்

## குர்ஆன், சுன்னா வெளிச்சத்தில்

வாரிசுகள், பங்குகள் மற்றும் பங்கிடும் முறைகளை ஆதாரங்களுடனும் உதாரணங்களுடனும் தெளிவாக, இலகுவாக விவரிக்கின்ற நூல்.

ஆசிரியர்

**ஷைக் எம்.ஜே.எம்.அரபாத் கரீம் நளீமி** M.A.,

துணை ஆசிரியர் மற்றும் மேலாய்வாளர்

**உமர் ஷரீஃப் இப்னு அப்துஸ் ஸலாம்**

دار الهدى
DARUL HUDA
إن هدى الله هو الهدى
அல்லாஹ்வின் நேர்வழியே உண்மையான நேர்வழி (இஸ்லாமிய) ஞானசுடர்

# துஆ

என்னைப் பத்து மாதங்கள்
சுமந்து பெற்றெடுத்து,
பராமரித்து போஷித்த என்
அன்புத் **தாய் ஸித்தி நழீரா**
அவர்களுக்காகவும் எனக்கு
அறிவூட்டிய அறிவுத் தந்தை
**ஹாஜி நளீம்** அவர்களுக்காகவும்
அல்லாஹ்விடம் அவனது
அருளையும் அன்பையும்
மன்னிப்பையும் மறுமையின்
நற்பாக்கியங்களையும் வேண்டி
துஆ கேட்கிறேன்.

மேலும், அ. ஆ.
பாடங்களைச் சொல்லித் தந்து,
நல்லொழுக்கங்களுடன் வளர்த்து,
என்னை மனிதனாக்கிவிட்ட
எனதருமைத் **தந்தை**
**ஏ.ஸீ.எம். ஜிப்ரி** அவர்களின்
வாழ்க்கையிலும் உடல்
ஆரோக்கியத்திலும் அல்லாஹ்
பரக்கத் -அருள்வளம்
செய்யவேண்டும், அவர்களின்
ஈமானையும், நல்லமல்களையும்
அதிகப்படுத்தவேண்டும்
என்று துஆ கேட்கிறேன்.

- ஆசிரியர்

# உள்ளடக்கம்

# பதிப்புரை

எல்லா புகழும் அல்லாஹ்விற்கே! நாம் அவனையே எல்லா நேரங்களிலும் எல்லா நிலைகளிலும் போற்றிப் புகழ்ந்து, வணங்கி, அவனிடமே பிரார்த்திக்கிறோம். அவன்தான் வணக்கத்திற்குரியவன்; அவனைத் தவிர வணக்கத்திற்குரியவன் வேறு யாரும் அறவே இல்லை.

அல்லாஹ்வுடைய ஸலவாத்தும் ஸலாமும் அவனுடைய தூதர் முஹம்மதின் மீதும் அவருடைய குடும்பத்தார் மற்றும் தோழர்கள் மீதும் நிலவட்டும். அவர் அல்லாஹ்வால் அனுப்பப்பட்ட அவனுடைய உண்மையான இறுதி தூதராவார்.

இஸ்லாமிய மார்க்கம் மனித வாழ்க்கைக்கு வழிகாட்டி, அதன் மூலமாக சமூகத்தில் அமைதி, நீதம், பரஸ்பர அன்பு நிலவுவதற்கு மிகப்பெரிய வழியை ஏற்படுத்தியிருக்கிறது. அந்த அடிப்படையில்தான் இஸ்லாமிய மார்க்கத்தில் கொடுக்கப்பட்ட நீதமான சட்டங்களில் சொத்துரிமை சட்டங்களும் அமையப் பெற்றிருக்கின்றன.

இந்த சொத்துரிமை சட்டங்களின் முக்கியத்துவத்தையும் நன்மைகளையும் இன்னும் இவற்றில் அமைந்திருக்கின்ற நீதியையும் நடுநிலையையும் இந்த நூலில் பல அறிஞர்கள் மிகத்தெளிவாக குறிப்பிட்டிருக்கிறார்கள். ஆகவே, அவற்றைப் பற்றி இந்த பதிப்புரையில் எழுதவேண்டிய அவசியம் இல்லை.

இஸ்லாமிய சொத்துரிமை குறித்து ஒரு நூலை வெளியிட வேண்டும் என்று நாங்கள் ஆசைப்பட்டு கொண்டிருந்தபோது, ஷைக் அரபாத்

கரீம் அவர்களின் அறிமுகம் மற்றும் சந்திப்பு எங்களுக்கு கிடைத்தது. ஷைக் அவர்கள் தாங்கள் எழுதியிருந்த நூல்களை காண்பித்தபோது அவற்றில் இந்த தலைப்பில் ஒரு நூல் இடம்பெற்றிருந்தது எங்களுக்கு மகிழ்ச்சியை கொடுத்தது. அல்ஹம்து லில்லாஹ்!

ஷைக் அவர்கள் இந்தத் துறையில் சிறப்புத் திறமை உள்ளவர்களாக இருக்கின்ற காரணத்தால் இஸ்லாமிய சொத்துரிமை சட்டங்களை மிக அழகாக, எல்லோரும் புரிகின்ற முறையில் எழுதி இருக்கிறார்கள்.

நூலை வெளியிடுவதில் எங்களின் பணி சுமைகளால் காலதாமதம் ஏற்பட்டாலும் ஷைக் அவர்கள் மிக பொறுமை காத்து எங்களை ஆர்வமூட்டிக் கொண்டே இருந்தார்கள். அல்லாஹ்வின் அருளால் தாருல் ஹுதாவில் அவர்களின் நூல் மேற்பார்வை செய்யப்பட்டு, மூல ஆதாரங்களோடு ஒப்பாய்வு செய்யப்பட்டு, சொத்துரிமையில் பிரபலமான அஸ்ஸிராஜி ஃபில் மீராஸ் என்ற நூலிலிருந்து தேவையான விளக்கங்கள், உதாரணங்கள் சேர்க்கப்பட்டு, அரபி மூலத்துடன் நீங்கள் பார்க்கின்ற இந்த அமைப்பில் இப்போது வெளிவருவதற்கு அல்லாஹ் உதவி செய்தான். அவன்தான் துணை நின்றான். அல்ஹம்து லில்லாஹ்.

இந்நூலை எழுதிய ஷைக் அவர்களுக்கும் அவர்களின் பெற்றோருக்கும் அவர்களின் ஆசிரியர் பெருமக்களுக்கும் இன்னும் இந்நூலை வாசிக்கின்ற முஸ்லிம் சகோதர சகோதரிகள் அனைவருக்கும் எங்களுக்கும் அல்லாஹு தஆலா தன்னுடைய மாபெரும் அருளை, கருணையை என்றென்றும் பொழிவானாக! ஆமீன்!

அல்லாஹ்வே! எங்களிடமிருந்து ஏற்றுக் கொள்வாயாக! நிச்சயமாக நீ நன்கு செவியுறுபவன்! மிகவும் அறிந்தவன்!

எங்களை பொறுத்தருள்வாயாக! நீ மகா பிழைப்பொறுப்பாளன்! பாவங்களை மன்னிப்பவன்!

*உமர் ஷரீஃப் இப்னு அப்துஸ் ஸலாம்*
குர்ஆன், சுன்னா பணியாளர்
தாருல் ஹுதா, சென்னை.

# தாருல் ஹுதா
## ஓர் அறிமுகம்

எல்லாப் புகழும் அகிலங்களின் இறைவன் அல்லாஹ் ஒருவனுக்கே! இறையருளும் ஈடேற்றமும் நபி முஹம்மது ﷺ அவர்களுக்கும், அவர்களது குடும்பத்தார், தோழர்கள், அவர்களைப் பின்பற்றும் அனைவருக்கும் உண்டாகட்டும்!

இஸ்லாமியச் சகோதர சகோதரிகளே!

அஸ்ஸலாமு அலைக்கும்
வரஹ்மத்துல்லாஹி வபரகாத்துஹு

தாருல் ஹுதாவை அறிமுகம் செய்வதன் வாயிலாக உங்களைச் சந்திப்பதில் பெரிதும் மகிழ்ச்சி அடைகிறோம். இதில் தாருல் ஹுதாவின் நோக்கத்தையும் அதன் பணிகளையும் விவரிப்பதுடன் அதன் இன்றைய தேவையையும் தங்கள் முன் வைக்கிறோம்.

அல்லாஹு தஆலா கூறுகிறான்:

நம்பிக்கை கொண்ட ஆண்களும், நம்பிக்கை கொண்ட பெண்களும் (தங்களுக்குள்) ஒருவருக்கொருவர் உற்ற துணைவர்களாவர். அவர்கள், (ஒருவர் மற்றவரை) நன்மை செய்யும்படித் தூண்டியும், பாவம் செய்யாது தடுத்தும், தொழுகையைக் கடைப்பிடித்து, ஸகாத்து கொடுத்தும் வருவார்கள். அல்லாஹ்வுக்கும், அவனுடைய

தூதருக்கும் கட்டுப்பட்டு நடப்பார்கள். இத்தகையவர்களுக்கு அதிசீக்கிரத்தில் அல்லாஹ் அருள் புரிவான். நிச்சயமாக, அல்லாஹ் மிகைத்தவனாகவும், ஞானமுடையவனாகவும் இருக்கின்றான்."

(அத்தவ்பா 9:71)

(நம்பிக்கையாளர்களே!) உங்களில் ஒரு கூட்டத்தார் (மனிதர்களை) சிறந்ததின் பக்கம் அழைத்து நன்மையைச் செய்யும்படி ஏவி பாவமான காரியங்களிலிருந்து அவர்களை விலக்கிக் கொண்டும் இருக்கட்டும். இத்தகையவர்கள்தாம் வெற்றி பெற்றவர்கள்.

(ஆலு இம்ரான் 3:104)

நபி ﷺ அவர்கள் கூறினார்கள்: உங்களில் யாராவது ஒரு தவறைக் கண்டால் அதை தமது கரத்தால் மாற்றட்டும். அதுவும் இயலாவிட்டால் தமது நாவால் மாற்றட்டும் அதுவும் இயலாவிட்டால் உள்ளத்தால் (வெறுத்து விலகி விடட்டும்). இது ஈமானின் (நம்பிக்கையின்) குறைந்தபட்ச அளவாகும். (ஸஹீஹ் முஸ்லிம்)

மேலும் கூறினார்கள்: நம்பிக்கையாளர்கள் தங்களிடையே நேசம் கொள்வதற்கும், கருணை காட்டுவதற்கும், அன்பு செலுத்துவதற்கும் உதாரணம் ஓர் உடலைப் போல. உடலில் ஏதேனும் ஓர் உறுப்பு பாதிக்கப்பட்டால் அனைத்து உறுப்புகளும் காய்ச்சல் மற்றும் தூக்கமின்மையால் முறையிடுகின்றன. (ஸஹீஹுல் புகாரி)

இன்று நமது சமுதாயத்தில் சிறியவர் முதல் பெரியோர் வரை பெரும்பாலோர் சரியான மார்க்க ஞானத்திற்கும் முறையான வழிகாட்டலுக்கும் அதிகம் தேவை உள்ளவர்களாக இருப்பதை பார்க்கிறோம். ஆகவே, மேற்கூறப்பட்ட இறை வசனங்கள் மற்றும் நபி மொழிக்கு இணங்க சமுதாய சீர்திருத்தப் பணியில் ஈடுபடுவது மார்க்கக் கடமை என்பதை உணர்ந்து அல்குர்ஆன் மற்றும் நபிவழியின் அடிப்படையில் அந்த உயர்ந்த பணியை நிறைவேற்றி இறை திருப்தியை அடைய வேண்டும் என்ற தூய எண்ணத்தில் தொடங்கப்பட்டதுதான் 'தாருல் ஹுதா'.

## தாருல் ஹுதாவின் பணிகளும் தொண்டுகளும்

### அழைத்தல்:

இதுவே இஸ்லாமின் அடிப்படையாகும். உலகில் இப்பணி இறைத் தூதர்கள் வாயிலாக நிலை நிறுத்தப்பட்டது. இறுதி இறைத்தூதர் முஹம்மது ﷺ அவர்களுக்கு பின் அவர்களுடைய சமுதாயத்தினர் அனைவரின் மீதும் இப்பணி கடமையாக்கப்பட்டது. மேன்மைமிகு குர்ஆனும் சிறப்புமிகு நபிமொழியும் இதன் அவசியத்தை வலியுறுத்துகின்றன. எனவே இயன்ற அளவு அனைத்து வழிகளிலும் மனித சமுதாயத்திற்கு இஸ்லாமை அறிமுகப்படுத்துவதும் அதன் உயர்வுகளை விளக்கிச் சொல்லி அதன் பக்கம் அழைப்பதும் தாருல் ஹுதாவின் முதல் பணியாகும்.

### கற்பித்தல்:

இஸ்லாமை அறிய விரும்பும் சிறுவர்கள், வாலிபர்கள், முதியவர்கள், ஆண்கள், பெண்கள் என அனைவருக்கும் மேன்மைமிகு குர்ஆன் சிறப்புமிகு நபிமொழிகளை அவரவர் தகுதிக்கேற்ப கற்றுத்தருவது தாருல் ஹுதாவின் இரண்டாவது பணியாகும்.

### நூல் வெளியிடுதல்:

மேன்மைமிகு குர்ஆன் சிறப்புமிகு நபிமொழி இரண்டையும் அடிப்படையாகக் கொண்டு சமுதாயப் பேரறிஞர்களால் அரபி மொழியில் எழுதப்பட்ட நூல்களை தமிழிலும் ஏனைய உலக மொழிகளிலும் மொழியாக்கம் செய்து, அந்நூற்களைச் சலுகை விலையில் மக்களுக்கு வழங்குவது தாருல் ஹுதாவின் மூன்றாவது பணியாகும்.

### உதவுதல்:

அல்லாஹு தஆலாவே அனைவரின் துன்பங்களை நிவர்த்தி செய்பவன். மிகப்பெரிய வள்ளலாகிய அல்லாஹ் தன் சார்பாக உலகில் ஏழை எளியோரின் துயர் துடைக்கும் வள்ளல் பெருமக்களுக்கு பெரும் வெகுமதிகளை ஈருலகிலும் வழங்குவதாக

வாக்களித்துள்ளான். பிறர் துன்பங்களில் பங்கு பெறுவதும் பிறர் தேவைகளை நிறைவேற்ற இயன்றவரை உதவுவதும் முஸ்லிம்களுடைய அடிப்படை பண்புகளாகும்.

இந்த உன்னத பணிக்காக "பைத்துல்மால்" (பொது நிதி) ஏற்பாடு செய்து இரக்க சிந்தனையும் மார்க்கப் பற்றும் கொண்ட வள்ளல் பெருமக்களிடமிருந்து கடமையான உபரியான தர்மங்களை பெற்று அவற்றை தேவையுடையவர்களுக்கு வழங்குதல் தாருல் ஹுதாவின் நான்காவது பணியாகும்.

இந்தப் பணிகள் மட்டுமின்றி இஸ்லாம் முழுமையாக ஒவ்வொருவரின் வாழ்விலும் வரவேண்டும் என்பதற்காகவும் மனித சமுதாயம் நல்லுறவும் அன்பும் கருணையும் சமூகப் புரிந்துணர்வு ஏற்பட வேண்டும் என்பதற்காகவும் இயன்றவரை அல்லாஹ்வுக்காக தொண்டாற்ற வேண்டும் என்பது தாருல் ஹுதாவின் குறிக்கோளாகும்.

இப்பணிகள் அனைத்தும் தொய்வின்றி தொடர்ந்து சிறப்பாக, திறம்பட நடைபெறவும், அவற்றை அல்லாஹ் அங்கீகரிக்கவும் தாங்கள் துஆ செய்யும்படி அன்புடன் கேட்டுக் கொள்வதுடன், தங்களால் இயன்றவரை இப்பணிகளில் பங்குபெறுமாறும் அழைக்கிறோம்.

அல்லாஹ்வே! உன்னையே வணங்குகிறோம்! உன்னிடமே உதவி தேடுகிறோம்!

அல்லாஹ்வே! எங்களை மன்னிப்பாயாக! எங்களிடமிருந்து ஏற்றுக் கொள்வாயாக! நிச்சயமாக நீதான் நன்கறிந்தவன், நன்கு செவியுறுபவன்!

-------------------

# வாழ்த்துரை

அஷ்ஷைய்க் **எம்.ஜே.எம். அரபாத் கரீம் (நளீமி)** அவர்களால் எழுதப்பட்ட “இஸ்லாமிய சொத்துரிமைச் சட்டம்” என்ற இந்நூலுக்கு வாழ்த்துரை வழங்குவதில் பெருமகிழ்ச்சியடைகிறேன்.

இஸ்லாமிய ஷரீஆவின் சிறப்பம்சம் என்னவெனில், அது மனித வாழ்வின் அனைத்துத் துறைகளையும் உள்ளடக்கியதாக விளங்குவதாகும். இந்த வகையில் இஸ்லாமிய ஷரீஆ அனைத்துத் துறைகளுக்கும் ஓர் ஆத்மீகப் பரிமாணத்தை வழங்குகின்றது.

பொதுவாக உலக வழக்கில் அன்றாட வாழ்வின் ஒரு விவகாரமாகக் கருதப்படுகின்ற சொத்துப் பங்கீடு, சொத்துரிமை பற்றிய விஷயங்களை இஸ்லாம் இறை கட்டளையின் மூலமாக மிக நுணுக்கமாக வரையறுத்து, மிகத் தெளிவாகவும் விரிவாகவும் விளக்கியுள்ளது.

இஸ்லாமிய சொத்துரிமை தொடர்பான விதிமுறைகளை பேணாமல் விட்டது முஸ்லிம் சமூகத்தில் சொத்துப் பங்கீடு தொடர்பாக பல்வேறு பிரச்சினைகளைத் தோற்றுவித்துள்ளது. இதற்கு அடிப்படைக் காரணம் இஸ்லாமிய சொத்துரிமை பற்றிய சரியான தெளிவின்மையாகும். எனவே, இது தொடர்பான அறிவு மக்களுக்கு வழங்கப்படுதல் மிக அவசியமாகும்.

இஸ்லாமிய சொத்துரிமைச் சட்டம் மிக நுட்பமான பல சட்ட விதிகளை உள்ளடக்கியுள்ளது. குடும்ப அங்கத்தவர்கள் அனைவரையும் ஏதோ ஒரு வகையில் அது உள்ளடக்குகின்றது. இஸ்லாமிய சொத்துரிமைச்

சட்டம் தொடர்பான விளக்கங்களை அனைவரும் புரிந்து கொள்ளும் வகையில் விவரிக்கின்ற இந்நூல் சமூகத்தின் அறிவு ரீதியான ஒரு முக்கிய தேவையைப் பூர்த்தி செய்கின்றது. அல்லாஹ் அவரது இந்த முயற்சியை அங்கீகரிப்பானாக!

கலாநிதி **M.A.M. சுக்ரி**
பணிப்பாளர் - ஜாமிஆ நளீமிய்யா.

# சிறப்புரை

பண்டைக் காலம் தொட்டே ஒவ்வொரு சமூகத்திலும் இறந்தவர் விட்டுச் செல்லும் சொத்துக்களை ஏதோ ஓர் அமைப்பில் அவரின் வாரிசுகள் மத்தியில் பகிர்ந்தளிக்கும் வழக்கம் இருந்து வந்துள்ளதை பார்க்க முடிகிறது.

ஆரம்பகால உரோமர்கள், கிரேக்கர்கள் சில வகையான சொத்துரிமைச் சட்டங்களைக் கடைப்பிடித்து வந்துள்ளனர். யூதர்கள் மரணித்தவர்களுக்கு ஆண் குழந்தை (மகன்) இருக்கும் நிலையில் அவரின் பெண் குழந்தைகளுக்கோ, மனைவிக்கோ குடும்பச் சொத்தில் எத்தகைய பாகத்தையும் கொடுப்பதில்லை. மேலும் மூத்த சகோதரருக்கு, இளைய சகோதரர்கள் இருவருக்குரிய பங்கு கொடுக்கப்பட வேண்டும் என்பது யூதர்களின் சட்டமாகும். மரணித்தவருக்கு மகன் இல்லாதபட்சத்தில் மகளின் மகனுக்குச் சொத்து வழங்கப்படும். அவரும் இல்லாத நிலையில் மரணித்தவரின் மகளுக்குக் கொடுக்கப்படும்.

மரணித்தவருக்கு மனைவி மக்கள் எவரும் இல்லாதிருந்தால் அவரின் தந்தைக்கும் அடுத்து பாட்டனுக்கும் சொத்து வழங்கப்படும். இவை யூதர்கள் மத்தியில் காணப்படும் சொத்துரிமையுடன் தொடர்பான சில சட்டங்களாகும்.

இஸ்லாமின் வருகைக்கு முன்னர் ஜாஹிலிய்யா கால மக்கள் மத்தியிலும் குடும்பச் சொத்துக்களைப் பகிர்ந்தளிப்பதில் ஒருவகை ஒழுங்கு கடைப்பிடிக்கப்பட்டது. அவர்கள் குடும்பத்திலுள்ள

வீரமுள்ள வளர்ந்த ஆண் பிள்ளைகளுக்கு மாத்திரமே மரணித்தவரின் சொத்தைப் பகிர்ந்தளித்தனர். பெண்களுக்கும், சிறுவர்களுக்கும் எத்தகைய பாகத்தையும் கொடுக்கவில்லை. இஸ்லாமின் வருகைக்குப் பின்னர் இந்நிலை சிறிது காலம் தொடர்ந்தது. பின்னர் மதீனாவில் வைத்து இறங்கிய அல்குர்ஆன் வசனங்களைத் தொடர்ந்து பெண்களுக்கும், சிறுவர்களுக்கும் கூட சொத்தில் பங்கு கொடுக்கும் அமைப்புத் தோன்றியது.

இஸ்லாமிற்கு முன்னர், ஒருவரின் வளர்ப்பு மகன் அவரின் சொந்த மகனாகக் கருதப்பட்டு குடும்பச் சொத்திலும் பங்கு பெறும் நிலை இருந்தது. நபி ﷺ அவர்களின் வளர்ப்பு மகனான ஸைத் இப்னு ஹாரிஸாவும் நபி ﷺ அவர்களின் சொந்த மகனாகவே கருதப்பட்டார். ஆனால், இஸ்லாம் அந்நிலையை மாற்றியது. வளர்ப்பு மகன் சொந்த மகனல்ல எனப் பிரகடனப்படுத்தியது. இதனால் வளர்ப்புப் பிள்ளைக்கு குடும்பச் சொத்தில் பங்கில்லை என்பது விளக்கப்பட்டது. இதுவே இஸ்லாமின் முடிவாக அமைந்தது.

அல்குர்ஆன் சொத்துரிமைச் சட்டங்களை விரிவாகவும் நுணுக்கமாகவும் விளக்கி உள்ளதைக் காணலாம். இந்த துறை சார்ந்த சட்டங்களை விளக்கியது போன்று தெளிவாக வேறெந்த அம்சத்துடனும் தொடர்பான சட்டதிட்டங்களையும் அல்குர்ஆன் விளக்கியுள்ளதாகத் தெரியவில்லை என அறிஞர்கள் கூறுகின்றனர்.

அல்குர்ஆன் பெரும்பாலும் எந்தவோர் அம்சம் தொடர்பான சட்டங்களையும் சுருக்கமாகவும் பொதுப்படையாகவுமே குறிப்பிடும். ஆனால், அது சொத்துரிமைச் சட்டங்களை நீண்ட பெரும் வசனங்களில் மிக விரிவாக விளக்கியுள்ளதைக் காண முடிகின்றது. இது ஒன்றே அல்குர்ஆன் இத்துறைக்கு வழங்கியுள்ள முக்கியத்துவத்தை விளங்கப் போதுமான சான்றாகும்.

இந்தளவு தூரம் இஸ்லாமிய ஷரீஆவில் முக்கியத்துவம் பெறும் அம்சமாக சொத்துரிமை தொடர்பான சட்டங்கள் இருந்த போதிலும் முஸ்லிம்கள் இது தொடர்பில் அக்கறையற்றவர்களாகவும்,

அறிவில்லாதவர்களாகவும் இருப்பது வேதனைக்குரியதாகும். இந்நாட்டில் கடந்த இரண்டு நூற்றாண்டுகளுக்கு மேலாக முஸ்லிம் தனியார் சட்டம் அமலில் இருந்து வருகின்றது. அச்சட்டம் விவாகம், விவாகரத்து முதலான அம்சங்களுடன் தொடர்புபட்ட இஸ்லாமிய சட்டங்களை உள்ளடக்கியிருப்பதோடு, இஸ்லாமிய சொத்துரிமைச் சட்டங்களையும் அடக்கியுள்ளது.

ஒரு முஸ்லிம் தனது இறுதி உயிலை எழுதாத நிலையில் மரணமடைந்தால் அவர் விட்டுச் செல்லும் சொத்துக்கள் இஸ்லாமிய சொத்துரிமைச் சட்டங்களின் அடிப்படையிலேயே அவரது வாரிசுகள் மத்தியில் பகிர்ந்தளிக்கப்பட வேண்டும் என இலங்கையில் அமுலில் உள்ள சட்டம் சொல்கின்றது. ஆனால், முஸ்லிம்களில் பெரும் பான்மையினர் இது பற்றி அறியாதவர்களாக இருப்பது மட்டுமன்றி, குடும்பச் சொத்துக்களைப் பகிர்ந்தளிப்பதிலும் ஷரீஆ சட்டங்களை பொருட்படுத்தாமல் நடந்து கொள்கின்றனர்.

1992ம் ஆண்டு இஸ்லாமிய சொத்துரிமைச் சட்டம் தொடர்பான ஒரு சிறு நூலை எழுதும் வாய்ப்பு எனக்குக் கிட்டியது. தேசிய கல்வி நிறுவனத்தின் தொலைக் கல்வி வழியாக இஸ்லாம், பாட ஆசிரியர்களைப் பயிற்றுவிக்கும் நிகழ்ச்சித் திட்டத்துக்காக இந்நூல் என்னால் எழுதப்பட்டது. இதனை ஓரளவு விரிவுபடுத்தி அச்சிட்டு வெளியிட வேண்டும் என்று நான் உத்தேசித்திருந்த போதிலும் அதற்கான சந்தர்ப்பம் எனக்குக் கிடைக்கவில்லை.

இந்நிலையில் ஜாமிஆ நளீமிய்யாவின் பட்டதாரியும், விரிவுரையாளருமான அஷ்ஷைஷய்க் அரபாத் கரீம், இந்த தலைப்பில் இந்நூலை ஆக்கியுள்ளார். இச்சிறு நூல் சொத்துரிமை தொடர்பான போதுமான விளக்கங்களை உள்ளடக்கியுள்ளது. குறிப்பாக, சொத்துரிமைச் சட்டங்களை வெறுமனே கோட்பாட்டு ரீதியாக மட்டும் விளக்காமல் செய்முறை விளக்கங்களோடு கூடியதாக அமைந்துள்ளமை இந்நூலின் குறிப்பிடத்தக்க சிறப்பம்சமாகும்.

“இஸ்லாமில் பெண்களுக்கு உரிய இடம் வழங்கப்படுவதில்லை. குறிப்பாக சொத்துரிமையில் அவர்களுக்கு பாரபட்சம்

காண்பிக்கப்படுகிறது" என்பது இஸ்லாமின் எதிரிகளும் இஸ்லாத்தை அரைகுறையாக புரிந்தவர்களும் முன்வைக்கின்ற ஒரு குற்றச்சாட்டாகும். இஸ்லாமிய சொத்துரிமைச் சட்டத்தில் பல்வேறு நிலைகளில் ஒரு பெண் பெறக்கூடிய பங்குகளைப் பற்றி விளக்கி, குறித்த குற்றச்சாட்டு எவ்வளவு தூரம் போலியானதும் அர்த்தமற்றதும் ஆகும் என்பதை இந்நூலின் 6ஆவது அத்தியாயம் ஆழமாக விளக்குகிறது.

மொத்தத்தில் முஸ்லிம் சமூகத்தின் கவன ஈர்ப்பைப் பெற வேண்டிய ஒரு சன்மார்க்கக் கடமையைப் பற்றி விழிப்புணர்வை ஏற்படுத்தும் நோக்கத்தோடு எழுதப்பட்ட இந்நூல், இக்கடமையை நிறைவேற்றுவதற்குத் தேவையான அறிவையும் வழிகாட்டல்களையும் கோட்பாட்டு ரீதியாகவும் செய்முறையோடு கூடியதாகவும் தருகிறது.

சகோதரர் அரபாத் கரீம் அவர்களுடைய இக்காத்திரமான (-வலுவான, முக்கியமான) அறிவுப் பங்களிப்பை நான் பாராட்டுகிறேன். இவரது எழுத்துப் பணி தொடர வேண்டும் என்று ஆசிக்கின்றேன். இவரது அறிவாற்றலின் மூலம் தீனும், உம்மாவும் பயன்பெற அல்லாஹ்வைப் பிரார்த்திக்கின்றேன்.

அஷ்ஷெய்க் **A.C. அகார் முஹம்மத்**
பிரதிப் பணிப்பாளர்
ஜாமிஆ நளீமிய்யா

# அணிந்துரை

இது வாரிசுரிமைச் சட்டத்தை விளக்கும் நூல். முஸ்லிம் சமூகத்தில் மிகவும் புறக்கணிக்கப்பட்ட சட்டமாகக் காணப்படுவது இந்த சட்டமே. வெகு சொற்பத் தொகையினரே இதனை நடைமுறையில் கொண்டுவர முயல்கிறார்கள். முஸ்லிம் சமூகத்தில் பெருந்தொகையினருக்கு இச்சட்டம் பற்றிய அறிவோ, அதன் முக்கியத்துவம் பற்றிய தெளிவோ கிடையாது. இத்தகைய சூழ்நிலையில் இச்சட்டத்தை சாதாரண முஸ்லிம்களும் விளங்கிக் கொள்ளக்கூடிய வகையில் ஒரு நூலாக வெளியிடுவது பாராட்டத்தக்க செயலாகும்.

சகோதரர் அரபாத் அவர்கள் நூலுக்கான அணிந்துரையொன்றை எழுதிக் கேட்டபோது இந்த சந்தர்ப்பத்தை பயன்படுத்தி குடும்ப வாழ்வோடு சம்பந்தப்பட்ட சில உண்மைகளை விளக்குவது பொருத்தமெனக் கருதி இங்கு அதனைத் தருகிறோம்.

முஸ்லிம் சமூகத்தில் குடும்ப வாழ்வோடு சம்பந்தப்பட்ட பல பிரச்சினைகளை அடையாளம் காணமுடிகிறது. அப்பிரச்சினைகளில் முதன்மையான ஒன்றை இங்கே குறிப்பிட்டுக் காட்டி, அதன் வழியாக குடும்ப வாழ்வு பற்றிய சில உண்மைகளைச் சுட்டிக் காட்டுவோம்.

பெண் வீட்டார் மணமகனுக்கு சீதனம் கொடுத்தல் என்ற பெயரில் தனது பிள்ளையை ஏற்றுக்கொண்டதற்காக ஒரு கூலியைக் கொடுக்கின்றனர். அதனை மாப்பிள்ளை வீட்டார் ஒரு ஷரத்தாக வைத்தே திருமணம் பேசுகிறார்கள். எவ்வளவு பணமாக, வீடாக, தோட்டமாக, வாகனமாகத் தர வேண்டும் என்பதை அவர்களே

நிர்ணயிக்கிறார்கள். சீதனத்திற்கெதிரான பிரச்சாரங்களின் காரணமாக ஓரளவு அது குறையத் துவங்கியுள்ளது. எனினும், அப்படி சீதனம் வாங்காத பலரும் கூட எவ்வளவு நகை பெண்ணுக்குப் போடுவார்கள் என்பதை அறிந்து கொள்வதில் கவனமாக இருக்கிறார்கள்.

சில பகுதிகளில், சீதனம் மிகவும் கடுமையான, தீவிர அமைப்பைப் பெற்றுக் காணப்படுகிறது. ஏனைய பகுதிகளிலும் அதன் வீரியம் இன்னும் குறையவில்லை. இப்படி இருந்தும் சீதனம் மிகப் பெரியதொரு தீமையாகவே காணப்படுகிறது. அது முஸ்லிம் சமூக வாழ்வில் பல மோசமான பாதிப்புகளை ஏற்படுத்தியுள்ளது. அவற்றைக் கீழ்வருமாறு தரலாம்

1. வசதியற்ற இளம் பெண்கள் தமது வயது மிகக் கூடிச் செல்லும் வரையில் திருமணமின்றி வாழ்கின்றனர். இது அவர்களைத் தீமைக்கு இட்டுச் செல்லும் நிலையை ஏற்படுத்துகிறது. அவ்வாறே, பல சகோதரிகளைக் கொண்டுள்ள ஒரு ஆணும் வயது போகும் வரைத் திருமணம் முடிக்க இயலாதவனாகிறான். அவனையும் இது தவறான வழியில் இச்சையைத் தீர்த்துக் கொள்ளும் நிலைக்கு இட்டுச் செல்கிறது.

2. பல பெண் பிள்ளைகளை வளர்க்கின்ற தந்தையோ, பல சகோதரிகளை பராமரிக்கின்ற சகோதரனோ இதே சிந்தனையாகவே திரிகிறார்கள். அவர்கள் எந்த பொது சமூகப் பணிகளிலும் ஈடுபட இது தடையாக அமைந்து விடுகிறது. ஹராம், ஹலால் பார்த்து சம்பாதிப்பதும் இந்நிலையில் முடியாது போகிறது.

3. முஸ்லிம் சமூகத்தின் பெரும்பாலானவர்களுடைய வாழ்வு, வீடு கட்டல், திருமணம் முடித்தல், திருமணம் செய்து வைத்தல் என்பவற்றோடு நின்று விடுகிறது. குடும்ப வாழ்வு இதனால் சுமக்க முடியாத பாரமாகி சமூகப் பணிகளுக்கு உழைக்கும் வாய்ப்பைக் குறைத்துள்ளது.

4. சீதனத்தின் காரணமாக மணமகன், மணமகள் தேர்வு செய்வதிலும் பல குளறுபடிகள் தோன்றுகின்றன. தேர்வு செய்வதிலும் பணமே முன்நிற்கிறது. எனவே பொருத்தமற்றவர்கள் இணையவும்

காரணமாகிறது. இது குடும்ப வாழ்வு சுமுகமாகச் செல்ல தடையாக உள்ளது.

இப்பெரும் சமூகத் தீமைக்கு என்ன தீர்வு எனப் பலரும் சிந்திக்கத் தலைப்பட்டுள்ளனர். இங்கே சொத்துரிமைச் சட்டத்தோடு இணைத்து சிந்திக்கையில் இப்பகுதியில் தோன்றும் சில கருத்துக்களை கீழே தருகிறோம்.

சொத்துரிமை ஒரு பொருளாதாரப் பங்கீட்டுக்கான சாசனம். ஒருவர் இறந்ததும், அவரது சொத்துக்கள் பிரிந்து பலருக்கு மத்தியில் சிதறுகிறது. இவ்வாறு சிதறும்போது அது வருமான மறு பங்கீட்டின் தோற்றத்தைப் பெறுகிறது. வறுமையை ஒழிப்பதிலும் இது ஒரு பங்களிப்பை செய்ய முடிகிறது. சொத்துரிமைக்கு உட்படுபவர்கள் கீழ்வருமாறு அமைகிறார்கள்.

1. **أب** தந்தை
2. **أب الأب** தந்தையின் தந்தை
3. **زوج** கணவன்
4, 5. **الإخوة والأخوات لِأم** தாய்வழி சகோதரன், தாய்வழி சகோதரி
6. **زوجة** மனைவி
7. **بنت** மகள்
8. **بنت الإبن** மகனின் மகள்
   (அப்படியே எவ்வளவு தூரம் கீழ்நோக்கிச் சென்றாலும் சரி)
9. **الأخوات لِأب وأم** உடன் பிறந்த சகோதரிகள்
10. **الأخوات لِأب** தந்தைவழி சகோதரிகள்
11. **أم** தாய்
12. **جدة** பாட்டி (தந்தையின் தாய், தாயின் தாய்)

இவ்வாறு குறிப்பிட்ட நபரின் சொத்து பல வகையில் பிரிகிறது.

குறிப்பிட்ட ஒருவரின் சகோதரனுக்கு நேரடியாகவோ தாய் தந்தைவழியாகவோ சொத்து செல்கிறது. குறிப்பிட்ட ஒரு நபரின் சொத்து அவரது மனைவி அல்லது கணவன் வழியாக வெளியிலுள்ள

ஒரு குடும்பத்திற்குப் போய்ச் சேர்கிறது. குறிப்பிட்ட ஒரு நபர் மரணித்து, அவருக்குப் பிள்ளைகள் இல்லாதபோது மனைவிக்கு அவரது சொத்தில் கால்வாசி சென்றுவிடுகிறது. இப்போது அந்த சொத்து இன்னொரு குடும்பத்திற்குரியதாகிறது. இவரிடமிருந்து அவரது சகோதரனும் சகோதரியும் சொத்தைப் பெறுகிறார்கள். அப்போது அந்த சகோதரனும் சகோதரியும் வசதியுள்ளவர்களாக மாறும் நிலைமை ஏற்படுகிறது. தாயும் தந்தையும் பிள்ளைகளின் சொத்தை எந்நிலையிலும் பெறுகிறார்கள். இந்நிலையில் குறிப்பிட்ட நபரின் சகோதர, சகோதரிகள் தாய், தந்தைவழியாக சொத்தைப் பெறுகிறார்கள். இவ்வாறு குடும்பத்தில் காணப்படும் வறுமை நிலையை ஒழிப்பதில் சொத்துரிமை ஓர் ஆக்கப்பூர்வமான பங்களிப்பைச் செய்கிறது. இந்நிலையில் திருமணமும் இலகுவாகிறது.

இதனை இரண்டு வகையில் நாம் நோக்கலாம்.

1. ஆண்களுக்கு சொத்துரிமை உரிய முறையில் கிடைக்கப் பெற்றால் அவன் திருமணம் முடிக்கும்போது மணப்பெண்ணிடம் கை நீட்ட வேண்டிய நியாயம் இல்லாமல் போகிறது.

2. ஒரு பெண்ணைத் திருமண முடித்துக் கொடுக்கும்போது அப்பெண் மணமகனுக்கு சீதனமாக எதுவும் கொடுக்காது விட்டாலும் அவளிடம் சொத்து, வசதி வாய்ப்புகள் உள்ளனவா எனப் பார்ப்பது தவிர்க்க முடியாத சமூக யதார்த்தம். எதையும் பார்க்காமல் மார்க்க அடிப்படையை மட்டுமே பார்த்து திருமண முடிப்பவர்கள் வெகு சொற்பம். மார்க்க உணர்வோடு செல்வ நிலை, அழகு, அந்தஸ்து இவற்றில் ஏதாவதொன்றையோ பலவற்றையோ பலரும் பார்ப்பார்கள்.

இக்கருத்தை இறைத்தூதர் ﷺ சமூகத்திலும் நாம் பார்க்க முடிகிறது. சொத்துரிமை சம்பந்தமான ஒரு பிரச்சினையை இறைத்தூதர் ﷺ அவர்களிடம் பேச வந்த ஒரு பெண் கூறுகிறார்:

“அல்லாஹ்வின் தூதரே! இவர்கள் இருவரும் கஃஃதுப்னு குபய்யிஷுடைய இரு பெண்கள். அவர்களது தந்தை உங்களுடன்

உஹதுக்கு வந்தபோது கொலையுண்டார். இப்பெண்களின் தந்தையின் சகோதரர் அவர்களது செல்வங்களை எடுத்துக் கொண்டார். அவர்களுக்கு எந்த செல்வத்தையும் விட்டு வைக்கவில்லை. செல்வமில்லாமல் அவர்களைத் திருமணம் முடித்து வைக்க முடியாது.”

இந்த சமூக யதார்த்தத்தைப் புரிந்து கொள்ளும்போது பெண்கள் சொத்துடையவர்களாக இருத்தல் அவசியம் என்பது தெளிவாகிறது.

அல்குர்ஆன் பெண்களுக்கு அவளது எல்லா நிலைகளிலும் சொத்துரிமையில் பங்கு கொடுக்கிறது. மனைவி, தாய், சகோதரி, மகள், மகனின் மகள் போன்ற நிலைகளில் அவள் சொத்துரிமை பெறுகிறாள். இந்நிலையில் அவளது திருமணமும் இலேசாக முடியக் காரணமாக அமைகிறது.

சீதனம் வாங்குவதற்கு அனுமதியுண்டு என இதனைப் பிழையாகப் புரிந்து கொள்ளக் கூடாது. எந்த விதத்திலும் சீதனம் பெறுவது ஹராம் -தடுக்கப்பட்ட செயல் என்பதில் சந்தேகமேயில்லை. செல்வத்தை விரும்பும் தனிமனிதர்கள் பற்றிய சமூக யதார்த்தத்தையே இங்கு குறிப்பிட முற்பட்டோம்.

அல்குர்ஆன் மற்றும் ஸுன்னாவின் வழிகாட்டலை ஆழ்ந்து படிக்கும்போது அது, குடும்பத்திற்குள் பொருளாதார உத்தரவாத நிலை ஒன்றை ஏற்படுத்த முனைவதை பார்க்க முடியும். அதாவது, பொருளாதார ரீதியான கூட்டுப் பொறுப்பொன்றை அது கட்டமைக்கிறது.

ஸூரா பகராவின் 233வது வசனம் மனைவிக்கு செலவழிப்பது பற்றிக் கூறுகிறது. அதன் இறுதிப் பகுதியில் இவ்வாறு வருகிறது.

وَعَلَى الْوَارِثِ مِثْلُ ذَٰلِكَ ۗ

"வாரிசாக வருபவருக்கு அதுபோன்ற கடமையுள்ளது".

அதாவது குடும்பச் சொத்தைப் பெறுபவர்கள் அதைப் பெறுவதற்கு

முன்பே செலவழிப்பதற்கும் கடமைப்படுகிறார்கள். பரஸ்பரம் சொத்துரிமை பெறுபவர்கள் என்ற அக்குடும்பத்தினர் தமது குடும்ப பொருளாதார நிலையை ஒழுங்குபடுத்தக் கடமைப்படுகிறார் என்பதே அல்குர்ஆன் இங்கு விளக்க வருகிறது. ஸுன்னா இக்கருத்தை நன்கு விளக்கிக் கூறுகிறது.

அல்குர்ஆன் கட்டமைக்க விரும்பும் இக்குடும்பப் பொருளாதார ஒழுங்கு பற்றிய அறிவோ நடைமுறையோ நமது சமூகத்தில் காணப்படவில்லை. அல்குர்ஆனும் ஸுன்னாவும் விளக்கும் இப்பொருளாதாரக் கட்டமைப்பு உருவாக்கப்படுவதன் வழியாகவும் சீதனம் மற்றும் வரதட்சணை என்ற பிரச்சினைக்கான தீர்வையும் வாழ வழியின்றி வாடும் பெண்களுக்கான தீர்வையும் ஓரளவு பெற முடியும். இதனைக் கீழ்வருமாறு விளக்க முடியும்.

1. ஒரு பெண்ணின் திருமணம் என்பது தந்தைக்கான முதல் பொறுப்பு. என்றாலும், அது அவரோடு நின்று விடுவதில்லை. ஏற்கனவே குறிப்பிட்டவாறு சொத்துரிமையைப் பரஸ்பரம் பகிர்ந்து கொள்ளும் அனைவருடைய பொறுப்பாக அது மாறுகிறது. இந்நிலையில் பெண்ணைத் திருமணம் முடித்துக் கொடுப்பது இலகுவாகிறது.

2. இவ்வாறே ஓர் ஆண் திருமணம் முடிக்கும்போது அவன் வசதியில்லாதவனாக இருப்பின் அவனுக்கான வசதிகளை குடும்ப பொருளாதார கூட்டமைப்பு ஏற்படுத்திக் கொடுக்க முனையும். இப்போது வசதியின்மையின் காரணமாக சீதனம் வாங்க முற்படுதல் என்ற நிலைமை இல்லாது போகிறது.

இங்கு நாம் கவனிக்க வேண்டிய ஒரு முக்கிய விஷயம் என்னவெனில், வறுமை காரணமாக அல்லது தேவையின் காரணமாக சீதனம் வாங்குதல் என்ற நிலையை ஒழிக்கவே மேற்கூறிய வழிமுறைகள் உதவமுடியும். ஆனால், சீதனம் வாங்குதல் என்பது வறுமை காரணமாக மட்டுமன்றி உயர்ந்த தொழில் செய்வோர், நல்ல வருமானம் உடையவர்களும் சீதனம் வாங்குகிறார்கள்.

இந்த வகையில், டாக்டராக, பொறியியலாளராக, விரிவுரையாளராக இருப்பவர்கள் பெரும் சீதனம் வாங்குகிறார்கள். இது தொழிலில் உயர்வு, சமூக அந்தஸ்திற்கேற்ப பெறப்படும் சீதனம். இதற்கு வறுமை காரணமன்று. ஒருவகை இதய வன்மமே காரணம்.

திருமணம் என்பதை தனது மகனை பிற ஒருவருக்கு முழுமையாகக் கொடுப்பது போலவும், அதனை சும்மா கொடுத்தால் தன் மகனால் பிறர் பிரயோசனம் பெறுவது போலவும் ஒரு மன எண்ணம். எனவே, இவ்வளவு நாம் கஷ்டப்பட்டு உருவாக்கிய அந்த மகனுக்கான விலையை வாங்கிக் கொள்ள வேண்டுமென்ற வன்மம் உள்ளத்தில் தோன்றுகிறது.

அத்தோடு இவ்வளவு உயர்ந்த தனது மகனை 'சும்மா' கொடுத்தால் நாம் நம்மை மதிக்காத ஒரு அவமான நடத்தை எனவும் கருதப்படுகிறது. அதன் விளைவே சீதனம். இது பெண்ணை மதிக்காத அவளைப் பெறுமதியற்றவளாகக் காணும் சமூக மனப்பாங்கைக் காட்டுகிறது. அதற்குத் தீர்வாக அமைவது இஸ்லாமிய சட்ட சிந்தனை பற்றிய தெளிவும் இறை நம்பிக்கை, மறுமை நம்பிக்கையோடு கூடிய ஆன்மீகப் பக்குவமும், சமூக அபிப்பிராயத்தின் அழுத்தமுமே ஆகும்.

எவ்வாறாயினும் சொத்துரிமையை நடைமுறைப்படுத்துவதற்கும் சீதன ஒழிப்புக்கும் இடையே தொடர்புள்ளது தெளிவாகிறது. செலவினம் பற்றி இஸ்லாமிய சட்ட ஒழுங்கும் இதனோடு இணைத்து நோக்கப்படும்போது அது நல்லதொரு பங்களிப்பைச் செய்யும் என்பதில் சந்தேகமில்லை.

இறுதியாக இது பற்றி கீழ்வரும் அபிப்பிராயங்களை நாம் முன்வைக்க முடியும்.

1. சொத்துரிமை பற்றிய இஸ்லாமிய சட்டமும், செலவினம் பற்றிய சட்ட ஒழுங்கும் சமூகத்திற்கு மத்தியில் மிகப் பரவலாக விளக்கப்பட வேண்டும். இவ்விரு சட்டப் பகுதிகளும் குடும்பத்தின் நெருங்கிய உறவுக்குக் காரணமாக அமையும்.

செலவினம் பற்றிய சட்ட ஒழுங்கு படிப்படியாக சேமிப்பு, முதலீடு வகையில் அமைந்த 'குடும்ப நிதியம்' தோன்ற வழியமைக்கும். அப்போது பெரியளவில் குடும்பப் பொருளாதார சிக்கல்களைத் தீர்க்க முடியும்.

2. சீதனம் ஒரு பாவகரமான செயல், ஹராமான நடத்தை என்ற கருத்தை சமூக அபிப்பிராயமாக மாற்றுதல் வேண்டும். விடாது, தொடர் பிரச்சாரமாக அதனைக் கொண்டு செல்ல வேண்டும்.

3. திருமணம் என்பது ஒரு விழாவன்று. எதிர்கால சந்ததியொன்றைக் கட்டியெழுப்பும் பொறுப்பு மிக்கதொரு நடவடிக்கை. ஆணும் பெண்ணும் அங்கே இச்சையைத் தீர்த்துக் கொள்ளுதல் என்ற அடிப்படையில் இணையவில்லை. இருவரும் ஒரு பெரும் அமானிதத்தை சுமக்கிறார்கள் என்ற இக்கருத்துக்கள் திருமணம் முடிக்க இருப்பவர்களுக்கு ஒரு பாடமாகப் படிப்பிக்கப்பட வேண்டும். இது திருமணத்தை விழாவாகவும் கேளிக்கையாகவும் பார்க்கும் போக்கைக் குறைத்து அதி முக்கிய நிகழ்வாக நோக்கும் போக்கை அதிகப்படுத்தும். அப்போது வீண் ஆடம்பரமும் கேளிக்கைகளும் திருமண நிகழ்வில் குறைவதோடு சீதனம் பற்றிய எண்ணமும் குறைய வழியேற்படும்.

4. திருமண ஒழுங்கு ஏற்படுதல், குடும்ப வாழ்வு சீர்படக் காரணமாக அமைகிறது. திருமணம் என்ற ஆரம்பமே கோணலாக அமைந்தால் முழு குடும்ப வாழ்வுமே கோணலாகப் போகிறது. இப்பின்னணியில் இப்பகுதியில் சமூகத்தின் கவனம் ஈர்க்கப்பட வேண்டுமென்பது தெளிவாகிறது.

இந்த நூலுக்கான அணிந்துரையொன்றைக் கேட்டபோது அவசரமாக எழுதிய கருத்துக்கள் இவை. உண்மையில் குடும்ப வாழ்வுக்கான அல்லாஹ்வின் சட்டங்கள் மிக ஆழ்ந்து ஆராயப்பட வேண்டும். ஒரு சிறுபான்மை சமூகத்தில் அது எவ்வாறு நடைமுறைப்படுத்தப்படலாம் என்பதும் ஆராயப்பட வேண்டும்.

இஸ்லாமிய சட்டங்களையும் நவீன காலப் பிரச்சினைகளையும்

ஆழப் புரிந்தோருக்கே இந்த ஆய்வுகளில் ஈடுபட முடியும். இப்பின்னணியில் நளீமீக்கள் ஒரு நல்ல பங்களிப்பைச் செய்ய முடியும். அந்த வகையிலேயே இந்நூல் வெளிவருகிறது. இன்னும் பல ஆய்வுகளில் ஈடுபடவும் அல்லாஹ் நூலாசிரியருக்கு அருள்புரிவானாக.

உஸ்தாத் **M.A.M. மன்ஸூர் நளீமி** (B.A.)
பணிப்பாளர்
மிஷ்காத் நிறுவனம்

# முன்னுரை

நீ மிகவும் தூய்மையானவன், நீ எங்களுக்குக் கற்றுத் தந்ததைத் தவிர வேறு எந்த அறிவும் எங்களுக்கில்லை. நீயோ ஆழ்ந்த அறிவும் ஞானமும் உள்ளவன்.

அல்லாஹு தஆலா உருவாக்கிய சொத்துரிமைச் சட்டம் குறித்த ஒரு நூலை எழுதுவதற்கு அவனே அருள்பாளித்தமைக்கு அவனை போற்றிப் புகழ்கிறேன். அல்ஹம்துலில்லாஹ்.

முஸ்லிம் சமூகத்தில் காணப்படும் பல்வேறு பிரச்சினைகளுக்கு இஸ்லாமிய சட்டங்கள் மற்றும் போதனைகளுக்கேற்ப தனிமனித, குடும்ப, சமூக வாழ்வு அமையாமல் இருப்பதை பிரதான காரணியாகக் குறிப்பிட முடியும்.

இஸ்லாம் வணக்க வழிபாடுகளோடு மட்டும் தொடர்பான மார்க்கம் என்று கருதி, குடும்பம், பொருளாதாரம், சமூக வாழ்வு போன்ற ஏனைய வாழ்வியல் அம்சங்களை மார்க்கத்தோடு தொடர்பற்றவைகளாக நோக்கும் நிலை இன்னமும் எதிர்பார்த்தளவு நமது சமூகத்தில் குறையவில்லை. இஸ்லாத்தை அரைகுறையாகப் புரிந்திருக்கும் நிலையை முற்றாக நீக்குவதற்கு இஸ்லாமிய ரீதியான அறிவை வழங்குவது இன்றைய காலத்து முதன்மை வேலைத் திட்டமாக அமைய வேண்டியுள்ளது. தெளிந்த சிந்தனையும், கூரிய அறிவும் வழிகேட்டிலிருந்து காப்பதோடு ஆரோக்கியமான சமூக வாழ்வுக்கும் வழிவகுக்கிறது.

இந்த வகையில் நமது சமூகத்தில் அந்நியமாகிப்போன, ஏறத்தாழ மொத்தமாக புறக்கணிக்கப்பட்ட இறை சட்டமாகிய சொத்துரிமை குறித்து விழிப்புணர்வையும் தெளிவையும் ஏற்படுத்துவதன் வழியாக அது தொடர்பான பூரண அறிவைப் பெற்று, அன்றாட வாழ்வில் பின்பற்றி வாழும் நிலையை தோற்றுவிக்க வேண்டும் என்ற உயர்ந்த நோக்கோடு இந்நூல் எழுதப்பட்டுள்ளது.

முஸ்லிம் தனியார் சட்டத்தின் பிரதான இடம் வகிக்கும் இஸ்லாமிய சொத்துரிமைச் சட்டத்தை விளக்கும் ஏராளமான நூல்கள் அரபு மொழியிலே வெளிவந்துள்ளன. பாரம்பரிய அமைப்பைப் பின்பற்றியும், நவீன நோக்கிலும், சமகால விமர்சனங்களுக்கு மறுப்பாகவும் அரபு மொழியில் தரமான ஆய்வுகள் மேற்கொள்ளப்படும் இதே வேளை, இத்துறையில் சமகால சவால்களை முறியடிக்கும் வகையில் தமிழ் மொழியில் போதியளவு நூற்கள் எழுதப்படவில்லை.

பாரம்பரிய அமைப்பை பின்பற்றி எழுதப்பட்டுள்ள நூற்களும் மிகவும் குறைவாகவே உள்ளன. இந்நூல் ஓரளவு இந்த இடைவெளியை அல்லாஹ்வின் அருளால் நிரப்பும் என நம்புகிறேன்.

இந்நூல் மூன்று பிரதான பகுதிகளை ஆராய்கிறது. முதலாவது, இஸ்லாமிய சொத்துரிமைச் சட்டத்தை பின்பற்றுவதன் அவசியம், சொத்துரிமை பாடத்தோடு தொடர்பான கலைச் சொற்கள், வாரிசுகள் ஒவ்வொருவரும் பெற்றுக் கொள்ளும் பங்குகள் என்பன தெளிவுபடுத்தப்பட்டுள்ளன. இரண்டாவது, மரணிப்பதற்கு முன்பு சொத்துக்களை பிள்ளைகளுக்கு பிரித்துக் கொடுப்பதோடு தொடர்பான இஸ்லாமிய ஷரீஆ நிலைப்பாடு விளக்கப்பட்டுள்ளது. இஸ்லாம் பெண்களுக்கு வழங்கியுள்ள சொத்துரிமை குறித்த நவீன குற்றச்சாட்டுகளுக்கு மறுப்பாக இஸ்லாமில் பெண்களின் சொத்துரிமையின் நீதியை விளக்கும் வகையில் இறுதி அத்தியாயம் அமைக்கப்பட்டுள்ளது.

தற்காலத்தில் எழுதப்பட்ட **ميراث المرأة وقضية المساواة** மீராஸுல்

மர்ஆ வகழிய்யதுல் முஸாவாத் என்ற நூலைத் தழுவி இப்பகுதி எழுதப்பட்டுள்ளது. ஜாமிஆ நளீமியாவின் வளம் மிக்க நூலகம் இந்நூலை ஆக்குவதில் பெரிதும் துணை நின்றதை இங்கு குறிப்பிடாமல் இருக்க முடியாது. ஜாமிஆ நளீமிய்யாவின் கௌரவத்துக்குரிய பணிப்பாளர் கலாநிதி எம்.ஏ.எம். சுக்ரி அவர்கள் இந்நூலுக்காக மனமுவந்தளித்த வாழ்த்துரைக்கு எனது மனமார்ந்த நன்றிகளை தெரிவித்துக் கொள்கிறேன்.

இந்நூலின் உள்ளடக்கம் தொடர்பான ஆலோசனைகளை வழங்கி, சிறப்புரையையும் எழுதிய ஜாமிஆ நளீமிய்யாவின் பிரதிப் பணிப்பாளர் கண்ணியத்துக்குரிய உஸ்தாத் ஏ.ஸீ. அகார் முஹம்மத் அவர்களுக்கும், இந்நூலை முழுமையாக சரிபார்த்து, நீண்டதோர் அணிந்துரையையும் வழங்கிய, எனது சிந்தனை வளர்ச்சியில் பெரிதும் பங்கெடுத்த எனது மதிப்பிற்குரிய உஸ்தாத் எம்.ஏ.எம். மன்ஸூர் அவர்களுக்கும் ஆழ்ந்த நன்றிகளை தெரிவித்துக் கொள்கிறேன்.

தமிழ் மொழியை செம்மைப்படுத்திய உஸ்தாத் எச்.ஐ. கைருல் பஷர் அவர்களை நன்றியுணர்வோடு நினைவுபடுத்துகிறேன். இந்நூலை தொடர்ந்து எழுதி முடிப்பதற்கு பூரண ஒத்துழைப்பு வழங்கிய அன்பு மனைவி சுமையா ஹம்ஸா அவர்களுக்கு அல்லாஹ் அருள் பாலிப்பானாக. இந்நூல் வெற்றிகரமாக வெளிவருவதற்கு பணத்தாலும், உழைப்பாலும் பங்களிப்புச் செய்தோருக்கு அல்லாஹு தஆலா நிறைவான கூலியை வழங்குவானாக. எனது இந்தப் பணிவான முயற்சியை அல்லாஹு தஆலா ஏற்று கிருபை செய்வானாக. இறை அருளை யாசிக்கும் அடியான்.

தென் இந்தியாவிலும் இஸ்லாம் கூறும் சொத்துரிமை பற்றிய விழிப்புணர்வை ஏற்படுத்திக் கொள்வதற்கு அல்லாஹு தஆலா அருள் பாலித்தான். இந்த வகையில் தாருல் ஹுதா நிறுவனத்தின் பணியாளர் முஃப்தி உமர் ஷரீஃப் அவர்களை நேரடியாக சந்தித்து கலந்துரையாடும் வாய்ப்புக் கிடைத்தது.

அரபு மொழியில் ஆழ்ந்த புலமையும் இஸ்லாமிய கலைகளில்

ஆழ்ந்த ஈடுபாடும் இஸ்லாமிய தஃவா பணியில் கூடிய கரிசனையும் அவர்களிடம் இருப்பதை அவதானிக்க முடிந்தது. அதற்கப்பால் மிக உயர்ந்த மனித விழுமியங்களையும் பெற்ற ஓர் அறிவாளுமையாகவும் இருப்பதை அவதானிக்க முடிந்தது.

இந்நிலையில் அறிவு ரீதியான தொடர்பை அவர்களோடு ஏற்படுத்திக் கொள்ள முடிந்ததோடு, என்னால் எழுதப்பட்டு இலங்கையில் வெளியிடப்பட்ட இஸ்லாமிய சொத்துரிமை சட்டம் என்ற நூலை தாருல் ஹுதாவின் மூலமாக வெளியிடுவதற்கு அவர்கள் எடுத்த தீர்மானத்தை நான் மனப்பூர்வமாக ஏற்றுக் கொண்டேன்.

இஸ்லாமின் நல்ல செய்தியை உலக மக்களுக்கு கொண்டு செல்வதற்கான தூய முயற்சியாக இதனைப் பார்க்கிறேன். மதிப்புக்கும் கண்ணியத்திற்குமுரிய ஷைக் முஃப்தி உமர் ஷரீஃப் அவர்களது அறிவிலும் பணியிலும் அல்லாஹ் பரகத் செய்து, அவர்களது இந்தப் பணிவான முயற்சியை அல்லாஹ் அங்கீகரித்து ஏற்றுக் கொள்வானாக!

அஷ்ஷைக் **எம்.ஜே.எம்.அரபாத் கரீம்** நளீமி M.A.

## பாடம் 1

# تَعْرِيْفٌ عَنِ الْـمِيرَاثِ فِي الْإِسْلَامِ

# இஸ்லாமில் சொத்துரிமை ஓர் அறிமுகம்

இஸ்லாம் ஒரு சம்பூரணமான வாழ்க்கைத் திட்டம். அது மனித வாழ்வின் அனைத்து துறைகளுக்கும் வழிகாட்டியுள்ளது. இந்த வகையில் பொருளீட்டல், செலவழிக்கும் வழிகள், நன்கொடை அளித்தல், செல்வப் பங்கீடு போன்ற பகுதிகள் மிகவும் விரிவாகவும் தெளிவாகவும் இஸ்லாமில் கூறப்பட்டுள்ளன. மனிதனுக்கு சட்டங்கள் எதுவும் வழங்கப்படாமல் தடுமாற்றத்தில் விடப்பட்டு அதன் விளைவாக தனிமனித, குடும்ப, சமூக வாழ்வு பாதிக்கப்படுவதற்கு இஸ்லாம் ஒருபோதும் வழியமைக்கவில்லை.

இஸ்லாம் பொதுவாக முழு வாழ்வுக்கும் வழிகாட்டி, வாழ்வின் அனைத்துத் துறைகளுக்குமான சட்டங்களை வழங்கிய போதிலும் குறிப்பிட்ட சில துறைகளுக்கு அதிக முக்கியத்துவம் செலுத்தி மிகவும் விரிவாக சட்டங்களை கூறியிருப்பதை பார்க்க முடியும். நம்பிக்கைகளோடு தொடர்பான விஷயங்கள், குடும்ப வாழ்வோடு தொடர்பான நிகாஹ் -திருமணம், தலாக் -விவாகரத்து, மீராஸ் -சொத்துரிமை போன்ற பகுதிகளுக்கு மிகவும் தெளிவாக, கருத்து வேறுபாடுகளுக்கு இடமளிக்காது சட்டங்களை விளக்கியுள்ளது. இறந்தவர் விட்டுச்செல்லும் குடும்பச் சொத்துக்களுக்கு மிகவும் தெளிவான சட்டங்கள் காணப்படவில்லையாயின் மிகப்பெரிய பிரச்சினைகள் தோன்றும்; உண்மையான வாரிசுகள் அநீதி

இழைக்கப்படுவார்கள். நபி ﷺ தூதராக அனுப்பப்படும்போது இருந்த ஜாஹிலிய்யா[1] சூழலிலும், இக்கால நவீன சமூகங்களிலும் இத்தகைய உண்மையை யதார்த்தமாகக் காணலாம்.

கணவன் அல்லது தந்தை விட்டுச்செல்லும் சொத்தில் பெண்களுக்கு உரிமை வழங்கப்படுவதில்லை. அனாதைகளும், ஏழைகளும் சொத்து வழங்கப்படாமல் தடுக்கப்படுகிறார்கள். ஆண்களும், பணமுள்ளவர்களும் குடும்பச் சொத்துக்களுக்கு ஏகபோக உரிமை கொண்டாடுகிறார்கள். பிறரது பிள்ளைகளை தத்தெடுத்து வளர்த்து அவர்களுக்கு குடும்பச் சொத்தில் உரிமை வழங்குகிறார்கள். இத்தகைய அநீதிகள் அன்றும் இருந்தன. இன்றும் இருக்கின்றன.

இஸ்லாமிற்கு முன் இருந்த ஜாஹிலிய்யா மக்கள் பெண் சமூகத்தை புறக்கணித்தனர். வறியவர்களும், அனாதைகளும் சமூகத்தில் தொடர்ந்து பலவீனர்களாக இருந்தார்கள். உடல் வலிமையும், பண பலமும் உள்ளோர் குடும்பச் சொத்துக்களை அபகரித்து இரக்கமற்ற முதலாளிகளாக வாழ்ந்து வந்தனர். சமூகத்தில் பெரிய பொருளாதார ஏற்றத்தாழ்வு காணப்பட்டது. சொத்துக்கள் அனைத்தும் குறிப்பிட்டதொரு சாராரிடம் குவியும் நிலை தோன்றியது. சமூகத்தில் ஒரு சாரார் மிகவும் வசதிகளோடு ஆடம்பரமாக வாழ, இன்னொரு சாரார் வறுமையில் வாழத் தலைப்பட்டார்கள்.

இத்தகைய மிக மோசமான சமூக ரீதியான அநீதிக்கு எதிராக உலக வரலாற்றில் இஸ்லாம் முதன்முதலாகக் குரல் எழுப்பியது. இறந்தவரின் சொத்தில் ஆண்களுக்கும் உரிமை இருப்பது போன்றே பெண்களுக்கும் உரிமை இருக்கின்றது என்பதை வலியுறுத்தியது. பலசாலிகள், பலவீனர்கள், ஏழை, பணக்காரர் என்ற வேறுபாடின்றி வாரிசுகள் அனைவருக்கும் இறந்தவர் சொத்தில் பங்கிருப்பதை உறுதி செய்தது. ஜாஹிலிய்யா சமூகம் தோற்றுவித்த அனைத்து வகை அநீதிகளுக்கும் எதிராக போர்க் கொடி தூக்கிய இஸ்லாம் சமூகரீதியான எல்லா அநியாயங்களையும் அழித்தொழிக்கும் நீதிமிக்க தீர்வுத் திட்டத்தை முன்வைத்தது. பெண்களுக்கு குடும்பச்

1. நபி ﷺ அவர்கள் அனுப்பப்படுவதற்கு முந்திய காலத்தை இது குறிக்கும்.

சொத்தில் உரிமை கிடையாது என்ற கருத்து மிகவும் செல்வாக்குப் பெற்று, பெண்கள் மிகப் பெரும் அநீதிக்கு உட்பட்டிருந்த காலத்தில் இஸ்லாம் சமூகநீதியை வலியுறுத்தியது. உலகில் நீதி, நியாயத்தைப் போதித்து அதனை நிலைநாட்டுவது இஸ்லாமின் அடிப்படை இலக்காக இருந்தது.

அன்றைய ஜாஹிலிய்யாவில் சொத்துக்களை பங்கிடுவதில் நீதியை ஏற்படுத்தியதின் மூலமாக இஸ்லாம் ஒரு புரட்சியைத் தோற்றுவித்தது. ஆண், பெண் ஆகிய இரு சாராருக்கும் குடும்பச் சொத்தில் பங்குண்டு என்ற உண்மையை அல்குர்ஆன் அதற்கே உரிய உயர்ந்த நடையில் முன்வைத்தது.

لِلرِّجَالِ نَصِيبٌ مِمَّا تَرَكَ الْوَالِدَانِ وَالْأَقْرَبُونَ وَلِلنِّسَاءِ نَصِيبٌ مِمَّا تَرَكَ الْوَالِدَانِ وَالْأَقْرَبُونَ مِمَّا قَلَّ مِنْهُ أَوْ كَثُرَ ۚ نَصِيبًا مَفْرُوضًا○

“பெற்றோர், உறவினர்கள் விட்டுச் செல்லும் சொத்தில் ஆண்களுக்குப் பங்குண்டு. மேலும் பெற்றோர், உறவினர்கள் விட்டுச் செல்லும் சொத்தில் பெண்களுக்கும் பங்குண்டு. அவர்கள் விட்டுச் செல்பவை குறைவானதாக அல்லது அதிகமானதாக இருந்தபோதிலும் கூட, கடமையான ஒரு பங்கு அவர்கள் ஒவ்வொருவருக்கும் உண்டு.”

(அல்குர்ஆன் 4 : 7)

இஸ்லாம் குடும்பச் சொத்து குறித்த தெளிவான கண்ணோட்ட மொன்றை முன்வைத்து, நீதியும், நியாயமுமிக்க குடும்ப வாழ்வொன்றை உருவாக்குவதற்குச் சிறந்த அடித்தளமிட்டுள்ளது. சொத்துரிமைச் சட்டங்கள் பற்றிய இஸ்லாமின் மிகச் சரியான கண்ணோட்டத்தை முஸ்லிம் சமூகத்துக்கு வழங்குவதன் மூலமாக சிறந்த சமூக வாழ்வொன்றைக் கட்டியெழுப்ப முடியும்.

## சொத்துரிமை வரைவிலக்கணமும் அதற்கான காரணங்களும் நிபந்தனைகளும்

இஸ்லாமிய குடும்ப வாழ்வில் பிரதான இடம் வகிக்கின்ற

சொத்துரிமையைக் குறிக்க இஸ்லாமிய ஷரீஅத் பின்வரும் சொற்களைப் பயன்படுத்தியுள்ளது.

### (i) علم الميراث இல்முல் மீராஸ்

மீராஸ் என்பதன் மொழிக் கருத்து குடும்பச் சொத்தாகும். எனவே குடும்பச் சொத்து பற்றிய அறிவு என இச்சட்டம் அழைக்கப்படுகிறது.

### (ii) علم الفرائض இல்முல் ஃபராயிழ்

ஃபரீழத் என்ற சொல்லின் பன்மை 'ஃபராயிழ்' ஆகும். ஃபரீழத் என்பது கடமையாக வரையறுக்கப்பட்டது போன்ற கருத்துக்களைக் குறிக்கின்றது. இந்த வகையில் இல்முல் ஃபராயிழ் என்பது வரையறுக்கப்பட்ட உரிமைகள் குறித்த அறிவு என்ற பொருளைத் தருகிறது.

### (iii) التركة அத்தரிகா

தரிகா என்பது விட்டுச் சென்றவை என்ற கருத்தைக் காட்டுகிறது. மரணித்தவர் விட்டுச்செல்லும் சொத்து என்பதை இது குறிக்கிறது.

இஸ்லாமிய சட்டக்கலையின் மிகவும் பிரதான பாடப் பிரிவாக அமைகின்ற சொத்துரிமைச் சட்டம் ஷரீஆ கண்ணோட்டத்தில் பின்வருமாறு வரைவிலக்கணப் படுத்தப்படுகிறது.

**“குடும்பச் சொத்தில் ஒவ்வொரு வாரிசுகளுக்கும் உரிய பங்குகளை வரையறுக்கும் சட்ட விதிகளைக் கொண்ட கலை”**

மேற்குறிப்பிட்ட வரைவிலக்கணத்திலிருந்து பின்வரும் உண்மைகளைப் புரிந்து கொள்ள முடியும்.

(i) குடும்பச் சொத்து என்பது ஒருவர் மரணித்தப் பின்னர் விட்டுச் செல்லும் சொத்துக்களைக் குறிக்கும். இந்த வகையில் உயிருடன் இருக்கும்போது உடமையாளியின் சொத்துக்களை குடும்பச் சொத்து என்று அழைப்பதில்லை. இறந்ததன் பிறகு அவர்

விட்டுச் செல்கின்றவைதான் குடும்பச் சொத்தாகும். எனவே இறந்தவரின் சொத்துக்களுக்குதான் சொத்துரிமைச் சட்டம் நடைமுறையாகிறது.

(ii) இறந்தவரின் வாரிசுகள் மிகச் சரியாக இனங்காணப்பட்டு அவர்களுக்குரிய பங்குகள் உரிய முறையில் பகிர்ந்தளிக்கப்பட வேண்டும் என்பதையும் இவ்வரைவிலக்கணம் உணர்த்துகிறது. எனவே, மரணித்தவர் விட்டுச் செல்லும் சொத்துக்குப் பூரண உரிமையுடையவர்களாக வாரிசுகள் மாறி விடுகிறார்கள்.

(iii) குடும்பச் சொத்து, வாரிசுகள், அவர்களில் ஒவ்வொருவருக்கும் உரிய பங்குகள், சொத்துரிமையோடு தொடர்பான நிபந்தனைகள், தகுதிகள் போன்ற அனைத்தையும் விவரிக்கின்ற சட்டவிதிகள் இக்கல்வியில் உள்ளடக்கப்பட்டுள்ளன.

-----------------------

**பாடம் 2**

أَهَمِيَّةُ عِلْمِ الْـمِيرَاثِ فِي الْإِسْلَامِ

# இஸ்லாமில் சொத்துரிமை கல்வியின் முக்கியத்துவம்

முஸ்லிம் தனியார் சட்டத்தின் பிரதான பகுதியாகக் காணப்படும் இஸ்லாமிய சொத்துரிமைச் சட்டத்தின் முக்கியத்துவத்தைப் புரிந்து கொள்வது முஸ்லிம்கள் ஒவ்வொருவர் மீதும் கடமையாகும். முஸ்லிம் சமுதாயத்தின் ஒவ்வொரு அங்கத்தவரின் வாழ்வோடு தொடர்புபடும் சட்டமாக இது காணப்படுகிறது. ஆரோக்கியமான குடும்ப வாழ்வுக்கும், பிரச்சினைகளற்ற சமூக வாழ்வுக்கும் வழிவகுக்கும் இஸ்லாமிய சொத்துரிமைச் சட்டத்தை நடைமுறைப்படுத்துவது சன்மார்க்கக் கடமையாகும்.

இஸ்லாம் மிகத் தெளிவாக மரணித்தவரின் சொத்துக்கள் பகிர்ந்தளிக்கப்படும் முறையை விளக்கியுள்ளது. ஆனால் முஸ்லிம் சமூகம் மிகப் பெரும்பாலும் இஸ்லாமிய சொத்துரிமைச் சட்டங்களின் அடிப்படையில் சொத்துக்களைப் பங்கீடு செய்வதில்லை. இந்த நாட்டில் முஸ்லிம் தனியார் சட்டத்தை அமுல்படுத்துவதற்குச் சகல உரிமைகளும் வழங்கப்பட்டிருந்தும், முஸ்லிம் சமூகம் அதனை நடைமுறைப்படுத்தாமல் புறக்கணித்து வாழுகின்ற நிலையை காண முடிகிறது.

இஸ்லாமிய சொத்துரிமைச் சட்டத்தின் முக்கியத்துவம் மற்றும் அதன் பாரதூரங்கள் குறித்த மிகச்சரியான அறிவை ஏற்படுத்துவது, அது

குறித்த விழிப்புணர்வை உண்டுபண்ணுவது, நமது சமூகத்தில் நீண்ட நெடுங்காலமாக இருந்துவரும் பிழையான சம்பிரதாயங்களைக் கலைந்தெறிவதற்கும், தூய இஸ்லாமிய நடைமுறைகளைக் குடும்ப வாழ்வில் அமுல்படுத்துவதற்கும் வழிகோலும் என்பதில் சந்தேகமில்லை.

சிலவேளை முஸ்லிம் சமூகம் இஸ்லாமிய ஷரீஅத் சொத்துரிமைச் சட்டத்திற்கு வழங்கிய முக்கியத்துவத்தின் அழுத்தத்தை புரிந்து கொள்ளாதிருத்தல், பிழையான நடைமுறைகளும், பிற மத சம்பிரதாயங்களும் அவர்களுக்கு மத்தியில் காணப்படுவதற்கு பிரதான காரணமாக இருக்கலாம்.

இந்த வகையில் சொத்துரிமையின் முக்கியத்துவத்தை, அதன் சட்டங்களை பின்பற்றுவதன் அவசியத்தை இஸ்லாமிய ஷரீஆவின் ஒளியில் இப்பகுதி விளக்குகிறது.

சொத்துரிமைச் சட்டத்தின் முக்கியத்துவத்தை இஸ்லாம் அதனை கற்றுக்கொள்வதன் அவசியம் குறித்து வலியுறுத்துவதிலிருந்து புரிந்து கொள்ள முடியும். நபி ﷺ அவர்கள் சொத்துரிமையைக் கற்று, அதனை பிறருக்குக் கற்றுக்கொடுக்குமாறு ஏவியது மாத்திரமன்றி, அது பற்றிய அறிவு முஸ்லிம் சமூகத்தில் முதலாவதாக மறக்கடிக் கப்படும் என்றும் முன்னெச்சரிக்கையும் செய்தார்கள்.

நபி ﷺ அவர்கள் கூறினார்கள்:

**عَنْ أَبِي هُرَيْرَةَ ﷺ قَالَ قَالَ رَسُولُ اللهِ ﷺ يَا أَبَا هُرَيْرَةَ تَعَلَّمُوا الْفَرَائِضَ وَعَلِّمُوهَا فَإِنَّهُ نِصْفُ الْعِلْمِ وَهُوَ يُنْسَى وَهُوَ أَوَّلُ شَيْءٍ يُنْزَعُ مِنْ أُمَّتِي**

“நீங்கள் ‘ஃபராயிழ்’ சொத்துரிமைச் சட்டங்களைக் கற்றுக் கொள்ளுங்கள். மேலும் அதனை கற்றுக் கொடுங்கள். ஏனெனில், அது அறிவின் அரைப் பகுதியாகும். அது மறந்துபோகக் கூடியதாகும். எனது சமூகத்திலிருந்து முதலாவது பிடுங்கியெடுக்கப்படக் கூடியதாகும்.”[2]

---

2. அறிவிப்பாளர்: அபூ ஹுரைரா ﷺ, நூல்: இப்னு மாஜா 2719.

பதினான்கு நூற்றாண்டுகளுக்கு முன் இறைத்தூதர் ﷺ அவர்கள் முஸ்லிம் சமூகம் எதிர்காலத்தில் சொத்துரிமைச் சட்டம் குறித்த அறிவின்மையால் அவர்களுக்கு மத்தியிலே சொத்தை மையமாகக் கொண்டு கருத்து வேறுபாடுகள், சண்டை சச்சரவுகள் ஏற்படும் அபாயம் குறித்தும் முன்னெச்சரிக்கை செய்தார்கள். இப்னு மஸ்ஊத் ؓ அவர்கள் அறிவிக்கும் பின்வரும் ஹதீஸ் நமக்கு இதனைத் தெளிவுபடுத்துகிறது.

நபி ﷺ அவர்கள் கூறினார்கள்:

**عَنْ عَبْدِ اللّٰهِ بْنِ مَسْعُودٍ ؓ قَالَ لِي رَسُولُ اللّٰهِ ﷺ تَعَلَّمُوا الْقُرْآنَ وَعَلِّمُوهُ النَّاسَ وَتَعَلَّمُوا الْفَرَائِضَ وَعَلِّمُوهَا النَّاسَ وَتَعَلَّمُوا الْعِلْمَ وَعَلِّمُوهُ النَّاسَ فَإِنِّي امْرُؤٌ مَقْبُوضٌ وَإِنَّ الْعِلْمَ سَيُقْبَضُ وَتَظْهَرُ الْفِتَنُ حَتَّى يَخْتَلِفَ الِاثْنَانِ فِي الْفَرِيضَةِ لَا يَجِدَانِ مَنْ يَفْصِلُ بَيْنَهُمَا**

“நீங்கள் அல்குர்ஆனைக் கற்றுக் கொள்ளுங்கள். அதை மக்களுக்குக் கற்றுக் கொடுங்கள். மேலும், சொத்துரிமை சட்டங்களைக் கற்றுக் கொள்ளுங்கள். அவற்றை மக்களுக்குக் கற்றுக் கொடுங்கள். இன்னும், கல்வியைக் கற்றுக் கொள்ளுங்கள். அதை மக்களுக்குக் கற்றுக் கொடுங்கள். ஏனெனில், நான் மரணித்து விடக்கூடிய ஒரு மனிதன்தான். கல்வி உயர்த்தப்பட்டுவிடும். குழப்பங்கள் பெருகிவிடும். இருவர் (வாரிசுகளின்) கடமையான பங்கில் கருத்துவேறுபாடு கொள்வார்கள். அவர்கள் தங்களுக்கு இடையில் தீர்ப்பளிக்கின்ற யாரையும் காண மாட்டார்கள்.”[3]

மேற்கூறிய இரு அறிவிப்புகளும் பல உண்மைகளை உணர்த்துகின்றன. அவற்றைப் பின்வருமாறு சுருக்கமாகக் குறிப்பிடலாம்:

3. அறிவிப்பாளர்: அப்துல்லாஹ் இப்னு மஸ்ஊத் ؓ, நூல்: தாரகுத்னி 4103

- சொத்துரிமைச் சட்டம் அறிவின் பாதி
- சொத்துரிமைப் பாடத்தைக் கற்குமாறும், கற்றுக் கொடுக்குமாறும் நபி ﷺ அவர்கள் தூண்டியுள்ளார்கள்.
- முஸ்லிம் சமூகத்தின் முதலாவது மறதிக்கு உள்ளாகும் மார்க்கச் சட்டம் சொத்துரிமைச் சட்டமாகும்.
- சொத்துரிமைச் சட்டம் சமூகத்தில் நடைமுறையாகாமல் புறக்கணிக்கப்படும்.
- சொத்துரிமை பற்றிய அறிவு காலப்போக்கில் மங்கிவிடும்.
- குடும்பச் சொத்தை மையமாகக் கொண்டு முஸ்லிம் சமூகத்தினுள் பிரச்சினைகள், கருத்து வேறுபாடுகள் தோன்றும்.
- சொத்துப் பிரச்சினைக்குத் தீர்வு கூறுபவர்கள் சமூகத்தில் அரிதாகவே காணப்படுவார்கள்.

இறைத்தூதரின் முன்னறிவிப்புக்களின் உண்மை நிலையை நமது சமூகத்திலே யதார்த்தமாக நாம் காண்கின்றோம். அல்லாஹ்வையும், மறுமையையும் விசுவாசித்த முஸ்லிம் சமூகம் சொத்துரிமை பற்றிய அறிவை பாதுகாத்து, அதன் சட்டங்களை குடும்ப வாழ்விலே நிலை நாட்டும் பொறுப்பை சுமந்திருக்கிறது.

அல்குர்ஆன் அதன் மிகத் தெளிவான வசனங்களின் வழியாக குடும்பச் சொத்துக்கள் பகிரப்படும் முறையை விளக்கியுள்ளது. மரணித்த ஒருவரின் சொத்துக்களை மையமாகக் கொண்டு பல்வேறுபட்ட பிரச்சினைகள் தோன்ற முடியும். குடும்பச் சொத்துக்களை பகிர்ந்தளிக்கும் பொறுப்பு வாரிசுகளுக்கு வழங்கப்படுமாயின் மனிதர்களின் மனோ இச்சை மேலோங்கி, அதன் விளைவாக வாரிசுகள் அநீதியிழைக்கப்படவும், அவர்களுக்கு மத்தியிலே சண்டை சச்சரவுகள் தோன்றவும், குடும்ப அங்கத்தவர்களுக்கு மத்தியிலே பிளவுகள் ஏற்படவும் வழிவகுக்கும். எனவேதான் குடும்பச் சொத்தின் உண்மையான உரிமையாளர்கள் பாதிக்கப்படாதிருக்கவும், குடும்ப ஐக்கியம் தொடர்ந்து பேணப்படவும் குடும்பச் சொத்துக்களை பங்குபோடும் பொறுப்பை அல்லாஹு தஆலா பொறுப்பேற்றான்.

இந்த வகையில் குடும்பச் சொத்தைப் பகிர்ந்தளிக்கும் முழு அதிகாரமும் இறைவனுக்கு மாத்திரமே உண்டு. அல்லாஹ்வின் இந்த அதிகாரத்தில் யாரும் தலையிடுவது, அவன் வகுத்த சட்டங்களுக்கு மாறாக கூட்டல், குறைத்தல் செய்வது அல்லாஹ்வின் சட்டமியற்றும் அதிகாரத்தில் பங்கெடுத்த ஷிர்க் -இணைவைத்தல் என்ற குற்றத்தைச் சேர்ந்ததாகும்.

ஸூரதுல் மாஇதாவிலே பின்வருமாறு அல்லாஹு தஆலா குறிப்பிடுகிறான்:

وَمَنْ لَمْ يَحْكُمْ بِمَا أَنْزَلَ اللّٰهُ فَأُولَئِكَ هُمُ الْكَافِرُونَ○

“யார் அல்லாஹு தஆலா இறக்கியதைக் கொண்டு தீர்ப்பு வழங்க வில்லையோ அவர்கள் காஃபிர்கள்” (அல்குர்ஆன் 5 : 44)

அல்லாஹு தஆலாவின் சட்டமியற்றும் அதிகாரத்தை மீறிச் செயல்படுதல் மிகப் பெரும் குற்றமாகும். இஸ்லாம் இறையதிகாரத்தில் வரம்புமீறுவதை இறை நிராகரிப்பாக, அநீதியாக, பெரும்பாவமாக கருதுகிறது. இத்தகைய மிகப்பெரும் குற்றத்திலிருந்து மிகவும் அவசரமாக முஸ்லிம் சமூகம் விடுதலை பெறவேண்டியுள்ளது. நீண்ட நெடுங்காலமாக நாம் வாழும் சமூகத்தில் சொத்துக்கள் பகிரப்படும் பிழையான நடைமுறையைத் தொடர்ந்து பின்பற்ற முடியும் என்று நினைப்பதும், அதற்கு அங்கீகாரமளிப்பதும் மிகப்பெரும் தவறாகும். தெளிவான இஸ்லாமிய சட்டமொன்றுக்கு மாறாக ஊர் அல்லது சமூகவழக்கு இருக்க முடியாது என்பது இமாம்கள் அனைவருடைய ஏகோபித்த முடிவாகும். இஸ்லாமிய ஷரீஅத்தின் தெளிவான சட்டத்துக்கு மாறாக ஊர் மரபு இருப்பின் உடனடியாக அது நிராகரிக்கப்பட்டு இஸ்லாமிய ஷரீஅத் சட்டம் நடைமுறைப்படுத்தப்பட வேண்டும் என்பதே இஸ்லாமிய சட்ட நிலைப்பாடாகும்.

மரணித்ததன் பிறகும் ஒருவரது சொத்துக்களுக்கு, உடமைகளுக்குத் தேவையான பாதுகாப்பு உத்தரவாதத்தை இஸ்லாம் அளித்துள்ளது. இஸ்லாம் முஸ்லிம்களுடைய வாழ்வில் எப்பகுதிக்கேனும் வழி

காட்டாமல் தடுமாற்றத்தில் விடவில்லை. மற்ற மதங்கள் மற்றும் பிற சமய கோட்பாடுகளிலிருந்து இஸ்லாம் இந்த வகையில் வேறுபடுகிறது. இறந்தவரின் சொத்துக்களுக்கும் சட்டம் வகுத்ததன் வழியாக இஸ்லாமின் சிறப்பம்சத்தைப் புரிந்துகொள்ள முடிகின்றது; வாழ்வின் அனைத்து பிரச்சினைகள் மற்றும் நிகழ்வுகளுக்கும் இஸ்லாமில் தீர்வு இருப்பதை அறியமுடிகிறது.

இஸ்லாமிய மார்க்கம் முஸ்லிம் சமூகத்திற்கு இறுதிவரை வழி காட்டுகிறது. இந்த வகையில் ஒரு முஸ்லிம் பிற மத கலாச்சாரங்களுக்குப் பின்னால் சென்று வழிதவறிவிடாமல் இருக்க குடும்பச் சொத்துக்கும் வழிகாட்டியது. அல்லாஹு தஆலா ஸூறதுந் நிஸாவின் இறுதி வசனத்தில் குடும்பச் சொத்துக்கள் பகிர்ந்தளிக்கப்படும் முறையை விளக்கிவிட்டு, இறுதியாக பின்வருமாறு கூறி முடிக்கிறான்.

يُبَيِّنُ اللّٰهُ لَكُمْ أَنْ تَضِلُّوا وَاللّٰهُ بِكُلِّ شَيْءٍ عَلِيمٌ ○

“நீங்கள் வழிதவறி விடாதிருப்பதற்காக அல்லாஹு தஆலா உங்களுக்கு தெளிவுபடுத்துகிறான். அல்லாஹு தஆலா அனைத்தையும் மிகவும் அறிந்தவனாக இருக்கிறான்.”

(அல்குர்ஆன் 4 : 176)

இங்கு அல்லாஹு தஆலா குடும்பச் சொத்துக்கள் தொடர்பான சட்டங்களை மிகவும் தெளிவாக விளக்கியதாகக் குறிப்பிடுகிறான். மனிதர்கள் தங்களது மனோஇச்சைகளுக்குக் கட்டுப்பட்டு சொத்துக்களில் பங்குபோட்டு வழிதவறிச் சென்றுவிடக் கூடாது என்பதற்காக அல்லாஹு தஆலாவே பொறுப்பேற்று கருத்து வேறுபாடுகளுக்கு இடம் வைக்காது மிகத் தெளிவாக விளக்கியுள்ளான்.

விரிந்த இஸ்லாமிய ஷரீஅத்தின் அனைத்துச் சட்டங்களையும் ஆழமாக கவனிக்கின்ற ஒருவர் அல்குர்ஆன் சொத்துரிமைச் சட்டத்தை விரிவாகவும் தெளிவாகவும் விளக்கியதுபோல் வேறு எந்தச் சட்டத்தையும் விளக்கவில்லை என்பதைப் புரிந்து கொள்வார்.

எண்ணிக்கைகளோடும் இலக்கங்களோடும் தொடர்புபட்ட சொத்துரிமைச் சட்டம் மிகவும் தெளிவாகவும், பெரும்பாலும் கருத்தொற்றுமைப்பட்டதாகவும் அமைந்திருக்கிறது. அதேவேளை அல்லாஹு தஆலா பகிர்ந்தளித்த இந்தப் பகுதி ஏனைய உலகியல் சட்டங்களைப் போன்று மிகவும் இறுக்கமான, வாசித்து விளங்க முடியாத, நடைமுறைச் சாத்தியமற்ற, ஒரு தரப்புக்கு மட்டும் சாதகமான அமைப்பில் அமையவில்லை. மாறாக ஸூரதுந் நிஸாவின் மூன்று வசனங்களுக்குள்ளால் முழு சொத்துரிமைச் சட்டத்தையும் மிகவும் எளிய, அல்குர்ஆனுக்கே உரிய உயர்ந்த நடையில் விளக்கியிருப்பதை கவனிக்க முடியும்.

விளங்குவதற்கு இலகுவாகவும், நடைமுறைச் சாத்தியமும், நீதித் தன்மையும் பெற்ற இஸ்லாமிய சொத்துரிமைச் சட்டத்தைப் புரிந்து, நடைமுறைப்படுத்த வேண்டும் என்பதே இஸ்லாமிய வழிகாட்டலாகும்.

மரணிப்பவர் விரும்பினாலும் விரும்பாவிட்டாலும் அவர் விட்டுச் செல்லும் சொத்தில் வாரிசுகளுக்குப் பங்கிருப்பதை இஸ்லாம் வலியுறுத்தியிருப்பதிலிருந்து அதன் முக்கியத்துவத்தைப் புரிந்து கொள்ள முடியும். ஒருவர் பெற்றுக்கொள்ளும் சொத்துக்களில் குடும்பச் சொத்து மாத்திரமே கட்டாயமாக வந்து சேரவேண்டிய சொத்து என இஸ்லாமிய சட்டத்துறை அறிஞர்கள் குறிப்பிடுகின்றனர்.

இஸ்லாமிய ஃபிக்ஹில் (-மார்க்க சட்டத் துறையில்) "பலவந்தமான சொத்து" அல்லது "நிர்ப்பந்தமான பிரதிநிதித்துவம்"[4] என்ற பெயர் கொண்டு இப்பகுதி அழைக்கப்படுகிறது. அதாவது மரணித்தவரின் சொத்துக்களுக்கு வாரிசுகள் கட்டாயமான பிரதிநிதிகளாக இருந்து சொத்துக்கு உரிமை கோர வேண்டும் என்பது அதன் பொருளாகும். இந்தளவுக்கு சொத்துரிமைச் சட்டத்துக்கு இஸ்லாமிய சட்டத்திலே பெரிய முக்கியத்துவமளிக்கப்பட்டுள்ளது.

அல்குர்ஆன் குடும்பச் சொத்தை "ஃபர்ழ்" என்ற சொற் பிரயோகத்தைக் கொண்டு அழைக்கிறது.

4. அஹ்காமுத் தரிகாத், வல் மவாரீஸ் - அபூ ஸஹ்ரா, பக்கம் : 07

لِلرِّجَالِ نَصِيبٌ مِمَّا تَرَكَ الْوَالِدَانِ وَالْأَقْرَبُونَ وَلِلنِّسَاءِ نَصِيبٌ مِمَّا تَرَكَ الْوَالِدَانِ وَالْأَقْرَبُونَ مِمَّا قَلَّ مِنْهُ أَوْ كَثُرَ نَصِيبًا مَفْرُوضًا○

இறந்துபோன பெற்றோர், உறவினர்கள் விட்டுச் சென்றவற்றில் ஆண்களுக்குப் பங்குண்டு. அவ்வாறே இறந்துபோன பெற்றோர், உறவினர்கள் விட்டுச் சென்றவற்றில் பெண்களுக்கும் பங்குண்டு. அவர்கள் விட்டுச் சென்றவை குறைவாகவோ, கூடுதலாகவோ இருப்பினும் சரியே இது அல்லாஹ்வினால் விதியாக்கப்பட்ட (ஃபர்ழாக்கப்பட்ட) பங்காகும். (அல்குர்ஆன் 4 : 7)

அல்லாஹு தஆலா ஸூறதுந் நிஸாவின் பதினோராவது வசனத்தில் பெற்றோர், பிள்ளைகளுக்கான குடும்பச் சொத்தில் காணப்படும் பங்குகளை விளக்கிவிட்டு பின்வருமாறு குறிப்பிடுகின்றான்:

فَرِيضَةً مِنَ اللَّهِ ۗ إِنَّ اللَّهَ كَانَ عَلِيمًا حَكِيمًا○

“இவை அல்லாஹ்வினால் உங்கள் மீது விதிக்கப்பட்ட கட்டாயக் கடமையாகும். நிச்சயமாக அல்லாஹ் நன்கறிந்தவனாகவும், மிக்க ஞானமுடையவனாகவும் இருக்கின்றான்.” (அல்குர்ஆன் 4 : 11)

அல்குர்ஆனிய சட்டங்களுக்கேற்ப சொத்துக்களை வாரிசுகளுக்கு மத்தியில் பங்கிடுவது ஒரு ஸுன்னத் -நபிவழி செயல்மட்டுல்ல. அதாவது, அதனை பின்பற்றுவதன் மூலம் நன்மை கிடைப்பதாகவும், பின்பற்றாதிருப்பது குற்றமில்லை என்ற ஸுன்னத்தான செயலாகவோ, அதனை பின்பற்றுவது விரும்பத்தக்கது என்ற முஸ்தஹப்பான செயலாகவோ அல்லது ஆகும் என்ற முபாஹான செயலாகவோ அல்குர்ஆன் குறிப்பிடவில்லை.

மாறாக கண்டிப்பாக அல்குர்ஆன் கூறிய அதே ஒழுங்கில் எந்தவித மாற்றமும் செய்யாமல் பின்பற்ற வேண்டிய ஃபர்ழான செயலென அல்குர்ஆன் குறிப்பிடுகின்றது. ஃபர்ழான ஐவேளைத் தொழுகைகளின் ரக்அத்துக்களை எவ்வாறு கூட்டல் குறைத்தலின்றி நிறைவேற்றுவது கடமையோ அவ்வாறே வாரிசுகள்

ஒவ்வொருவருக்கும் அல்குர்ஆன் வரையறுத்த பங்குகள் வழங்கப்படுவதும் கட்டாயக் கடமையாகும். ஃபர்ழான வணக்க வழிபாடுகளின் தரத்தில் வைத்து நோக்கப்படும் இஸ்லாமிய சொத்துரிமைச் சட்டத்துக்கு இஸ்லாமில் பெரிய முக்கியத்துவம் வழங்கப்பட்டுள்ளது.

தொழுகைகளை நிலைநாட்ட வேண்டும் என்று கூறும் அல்குர்ஆன் அதன் ரக்அத்துக்கள் பற்றி விரிவாக எதுவும் கூறவில்லை. ஸகாத் கடமையை நிறைவேற்றுமாறு வலியுறுத்தும் அல்குர்ஆன் ஸகாத் விதியாகும் பொருட்கள் குறித்து விரிவாகக் கூறவில்லை. அதே வேளை, சொத்துரிமைச் சட்டம் பின்பற்றப்படுதல் கடமை எனக்கூறும் அல்குர்ஆன், அதனை மிகவும் விரிவாகவும், தெளிவாகவும் ஒவ்வொருவருக்குமுரிய பங்குகளை வரையறுத்தும் கூறியுள்ளது. இந்தளவுக்கு முக்கியத்துவம் பெற்ற ஃபர்ழான சொத்துரிமைச் சட்டத்தை பின்பற்றி நடத்தல் அனைத்து முஸ்லிம்கள் மீதும் கடமையாகும்.

அல்குர்ஆன் சொத்துரிமைச் சட்டங்களை அல்லாஹ்வின் வஸிய்யத் எனக் குறிப்பிடுவதன் மூலம் அதன் முக்கியத்தவத்தை புரிந்து கொள்ள முடியும்.

يُوصِيكُمُ اللَّهُ فِي أَوْلَادِكُمْ ۖ لِلذَّكَرِ مِثْلُ حَظِّ الْأُنْثَيَيْنِ ۚ

உங்களது பிள்ளைகள் விஷயத்தில் சொத்துப் பங்கீட்டில் ஓர் ஆணுக்கு இரு பெண்களுக்குரியது போன்ற பங்குண்டு என அல்லாஹு தஆலா வஸிய்யத் செய்கிறான். (அல்குர்ஆன் 4 : 11)

கணவன் மனைவி மற்றும் ஒன்றுவிட்ட சகோதர சகோதரிகளுக்குரிய சொத்துப் பங்கீடு குறித்து விளக்கும் ஸூரதுந் நிஸாவின் பன்னிரண்டாவது வசனத்தின் இறுதியிலே அல்லாஹு தஆலா பின்வருமாறு குறிப்பிடுகிறான்:

وَصِيَّةً مِّنَ اللَّهِ ۗ وَاللَّهُ عَلِيمٌ حَلِيمٌ ○

“இது அல்லாஹ்வின் வஸிய்யத்தாகும். அல்லாஹு தஆலா அறிந்தவனாகவும், பொறுமையுள்ளவனாகவும் இருக்கிறான்.”

(அல்குர்ஆன் 4 : 12)

அல்லாஹு தஆலா அடியார்கள் மீது சுமத்திய ஃபர்ழான சொத்துரிமைச் சட்டத்தை தன்னுடைய உபதேசமாகக் குறிப்பிடுகிறான். அல்லாஹ்வின் வஸிய்யத்தாகக் காணப்படும் சொத்துரிமைச் சட்டத்தை மதித்துப் பின்பற்றுவது அனைத்து முஸ்லிம்கள் மீதுள்ள தார்மீகப் பொறுப்பாகும்.

ஃபர்ழான சொத்துரிமைச் சட்டங்களைப் புறக்கணிப்பவர்களுக்கு இஸ்லாம் கூறும் தண்டனைகள் அவற்றின் பாரதூரத்தையும், நடைமுறைப்படுத்துவதின் அவசியத்தையும் இன்னும் ஆழமாக விளக்குகின்றன.

(i) அல்லாஹ் உருவாக்கிய சட்டங்களை மாற்றியமைத்ததின் காரணமாக பெரும் பாவியாக அவன் கணிக்கப்படுகிறான்.

وَمَنْ لَمْ يَحْكُمْ بِمَا أَنْزَلَ اللّٰهُ فَأُولَٰئِكَ هُمُ الْفَاسِقُونَ○

யார் அல்லாஹு தஆலா இறக்கியவற்றைக் கொண்டு தீர்ப்புச் சொல்ல வில்லையோ அவர்கள் பெரும் பாவிகளாவார்கள்.

(அல்குர்ஆன் 5 : 47)

(ii) இஸ்லாமிய சொத்துரிமைச் சட்டங்களுக்கு மாற்றமான சட்டங்களையும், சம்பிரதாயங்களையும் பின்பற்றுவது பித்அத்தாகும். மார்க்கத்தில் இல்லாத ஒன்றைச் செய்த குற்றம் அத்தகைய மனிதனைச் சாரும்.

நபி ﷺ அவர்கள் கூறினார்கள்:

عَنْ عَائِشَةَ ؓ قَالَتْ قَالَ رَسُولُ اللّٰهِ ﷺ مَنْ أَحْدَثَ فِي أَمْرِنَا
هٰذَا مَا لَيْسَ فِيهِ فَهُوَ رَدٌّ

யார் நமது மார்க்கத்தில் இல்லாத ஒன்றைச் செய்கிறாரோ அது மறுக்கப்பட வேண்டியதாகும்.[5]

நபி ﷺ அவர்கள் கூறினார்கள்:

وَإِيَّاكُمْ وَالْأُمُورَ الْمُحْدَثَاتِ فَإِنَّ كُلَّ بِدْعَةٍ ضَلَالَةٌ

புதிதாக உருவாக்கப்பட்ட அனைத்துக் காரியங்களை விட்டும் உங்களை நான் எச்சரிக்கின்றேன். ஏனெனில், (புதிதாக உருவாக்கப்பட்ட) அனைத்து பித்அத்களும் வழிகேடாகும்.[6]

(iii) அல்லாஹு தஆலா விதியாக்கிய வரையறைகளை மீறியதின் காரணமாக அல்லாஹ்வுக்கும், தூதருக்கும் மாறாக நடந்து கொண்டவன் என்ற பெயரை அவன் பெறுகிறான்.

ஸூறதுந் நிஸா 11, 12 வது வசனங்களில் சொத்துரிமைச் சட்டங்களை மிகத் தெளிவாகக் கூறிய அல்லாஹு தஆலா 14வது வசனத்தில் பின்வருமாறு குறிப்பிடுகிறான்:

وَمَنْ يَعْصِ اللَّهَ وَرَسُولَهُ وَيَتَعَدَّ حُدُودَهُ يُدْخِلْهُ نَارًا خَالِدًا فِيهَا
وَلَهُ عَذَابٌ مُهِينٌ○

யார் இது விஷயத்தில் அல்லாஹ்வுக்கும் அவனது தூதருக்கும் மாறு செய்து, அவனது வரையறைகளை மீறுகிறாரோ அவரை அவன் நரகத்திலே நுழைவிப்பான். அவர் அதில் நிரந்தரமாக இருப்பார். அவருக்கு (அதில்) இழிவு தருகின்ற வேதனை உண்டு.

(அல்குர்ஆன் 4 : 14)

இங்கு சொத்துரிமைச் சட்டங்களைப் பின்பற்றாதோரை அல்லாஹ்வுக்கும் தூதருக்கும் மாறாக நடந்துகொண்டவர்கள் என அடையாளப்படுத்துகிறது அல்குர்ஆன்.

---

5. அறிவிப்பாளர்: ஆயிஷா ؓ, நூல்: ஸஹீஹுல் புகாரி 2697.
6. அறிவிப்பாளர்: இர்பாழ் இப்னு ஸாரியா ؓ, நூல்: இப்னு மாஜா 42.

(iv) ஃபர்ழான சொத்துரிமைச் சட்டத்தை நடைமுறைப்படுத்தாதோர் நரகிலே நிரந்தரமாகத் தங்குவார்கள் என அல்குர்ஆன் குறிப்பிடுகிறது.

وَمَنْ يَعْصِ اللّٰهَ وَرَسُولَهُ وَيَتَعَدَّ حُدُودَهُ يُدْخِلْهُ نَارًا خَالِدًا فِيهَا
وَلَهُ عَذَابٌ مُهِينٌ○

யார் இவ்விஷயங்களில் அல்லாஹ்வுக்கும் அவனது தூதருக்கும் மாறுசெய்து, அல்லாஹ்வின் வரம்புகளை மீறுகிறாரோ அவரை அவன் நரகத்திலே புகுத்திவிடுவான். அதில் அவர் நிரந்தரமாகத் தங்குவார். அவருக்கு (அதில்) இழிவு தருகின்ற வேதனை உண்டு.
(அல்குர்ஆன் 4 : 14)

அல்குர்ஆன் சில குற்றச் செயல்களை நிரந்தர நரகத்துக்குரிய பாவச் செயல்களாகக் குறிப்பிடுகின்றது:

### 1. வட்டி

وَمَنْ عَادَ فَأُولٰئِكَ أَصْحَابُ النَّارِ ۖ هُمْ فِيهَا خَالِدُونَ○

யார் வட்டியை நோக்கித் திரும்பி விடுகிறார்களோ அவர்கள் நரகவாசிகள். அதில் அவர்கள் நிரந்தரமாகத் தங்குவார்கள்.
(அல்குர்ஆன் 2 : 275)

### 2. நியாயமின்றி ஒரு முஃமினைக் கொலை செய்தல்

وَمَنْ يَقْتُلْ مُؤْمِنًا مُتَعَمِّدًا فَجَزَاؤُهُ جَهَنَّمُ خَالِدًا فِيهَا

யார் ஒரு முஃமினை வேண்டுமென்றே கொலை செய்கிறாரோ அவருக்குரிய கூலி நரகமாகும். அதில் அவர் நிரந்தரமாகத் தங்குவார். (அல்குர்ஆன் 4 : 93)

## 3. அல்லாஹ்வின் சொத்துரிமைச் சட்டங்களைப் புறக்கணித்தல்

மேற்கூறிய வசனங்கள் வட்டி, ஒரு முஃமினை நியாயமின்றி கொலை செய்தல், சொத்துப் பங்கீட்டில் மோசடி செய்தல் ஆகிய மூன்று பாவங்களும் சமஅளவான குற்றச் செயல்கள் என்பதை தெளிவுபடுத்துகின்றன. நரகில் நிரந்தரமாக வாழவைக்கும் பெரிய குற்றமாக சொத்துரிமை சட்டங்களை புறக்கணித்தல் அமைந்திருப்பதனை நம்மால் புரிந்து கொள்ள முடியும்.

(v) நரகில் நிரந்தரமாகத் தங்குவது மாத்திரமன்றி மிகவும் இழிவான வேதனையை அனுபவிப்பதாகவும் அல்குர்ஆன் குறிப்பிடுகின்றது:

وَمَنْ يَعْصِ اللّٰهَ وَرَسُولَهُ وَيَتَعَدَّ حُدُودَهُ يُدْخِلْهُ نَارًا خَالِدًا فِيهَا
وَلَهُ عَذَابٌ مُهِينٌ○

யார் இவ்விஷயங்களில் அல்லாஹ்வுக்கும் அவனது தூதருக்கும் மாறுசெய்து, அல்லாஹ்வின் வரம்புகளை மீறுகிறாரோ அவரை அவன் நரகத்திலே புகுத்தி விடுவான். அதில் அவர் நிரந்தரமாகத் தங்குவார். அவருக்கு (அதில்) இழிவு தருகின்ற வேதனை உண்டு.

(அல்குர்ஆன் 4 : 14)

(vi) அல்லாஹ்வின் சொத்துப் பங்கீட்டுச் சட்டங்களை அறியாதவர்கள் மற்றும் பின்பற்றாதவர்களை வழிதவறியவர்கள் எனவும் அல்குர்ஆன் குறிப்பிடுகிறது. எனவேதான் சொத்துரிமைச் சட்டங்களை விளக்கிய ஸூரா அந்நிஸாவின் இறுதி வசனத்தின் கடைசிப் பகுதி, "நீங்கள் வழிகெட்டு விடக்கூடாது என்பதற்காக அல்லாஹ் இந்த சட்டங்களை தெளிவுபடுத்துகிறான்" என்று குறிப்பிடுகிறது.

எனவே, அந்த சட்டங்களின்படி செயல்படாதவர் வழிதவறியவர் என்பதை புரிந்து கொள்ள முடியும்.

يُبَيِّنُ اللَّهُ لَكُمْ أَنْ تَضِلُّواْ وَاللَّهُ بِكُلِّ شَيْءٍ عَلِيمٌ○

இவற்றை அல்லாஹு தஆலா நீங்கள் வழிதவறி விடக்கூடாது என்பதற்காக (இந்த சட்டங்களை) உங்களுக்கு தெளிவுபடுத்தினான். (அல்குர்ஆன் 4 : 176)

அதேபோன்று அல்லாஹ்வின் சொத்துரிமைச் சட்டங்களை மதித்து நடைமுறைப்படுத்தியவர்களுக்கு அல்லாஹு தஆலாவிடம் மகத்தான கூலிகள் இருப்பதாக அல்குர்ஆன் சுபச் செய்தி சொல்கிறது.

மூன்று பாக்கியங்களை இவர்கள் பெற்றுக்கொள்வதாக அல்குர்ஆன் வாக்களிக்கிறது:

1. அல்லாஹ்வையும், நபியையும் மதித்தவர்கள் என்ற புகழ்
2. சொர்க்கங்களிலே அனைத்து இன்பங்களோடும் நிரந்தரமாக வாழுவர்.
3. மறுமையில் மகத்தான வெற்றி கிடைக்கும்.

تِلْكَ حُدُودُ اللَّهِ ۚ وَمَنْ يُطِعِ اللَّهَ وَرَسُولَهُ يُدْخِلْهُ جَنَّاتٍ تَجْرِي مِنْ تَحْتِهَا الْأَنْهَارُ خَالِدِينَ فِيهَا ۚ وَذَٰلِكَ الْفَوْزُ الْعَظِيمُ○

இவை அல்லாஹ்வின் வரம்புகளாகும். யார் இவ்விஷயங்களில் அல்லாஹ்வுக்கும் அவனது தூதருக்கும் கீழ்படிந்து நடக்கின்றாரோ அவரை சொர்க்கங்களில் அவன் பிரவேசிக்கச் செய்வான். அவற்றின் கீழ் ஆறுகள் ஓடிக்கொண்டிருக்கும். அவற்றிலேயே அவர்கள் நிரந்தரமாகத் தங்கியிருப்பார்கள். மேலும் இது மகத்தான வெற்றியாகும். (அல்குர்ஆன் 4 : 13)

இந்த வகையில், இஸ்லாமில் சொத்துரிமைச் சட்டத்தின் முக்கியத்துவத்தையும், அதன் சிறப்பம்சங்களையும், அவற்றின் வாயிலாக அதனை நடைமுறைப்படுத்துவதின் அவசியத்தையும் நாம் புரிந்து கொண்டோம். இறை சட்டங்களை பின்பற்றாது புறக்கணிப்பது

தண்டனைக்குரிய குற்றமாகவும் அதேவேளை அவற்றை மதித்து நடப்பவர்களுக்கு மகத்தான கூலிகள் வழங்கப்படுகின்றன என்பதையும் இந்த அத்தியாயத்திலே நோக்கினோம்.

நாம் நமது வாழ்வில் அல்லாஹ்வின் சொத்துரிமைச் சட்டங்களைக் கடைப்பிடித்து வாழ முயற்சிப்போமாக! அதற்கு அல்லாஹு தஆலா கிருபை செய்வானாக!

நாங்கள் செவிமடுத்தோம், கட்டுப்பட்டோம்.

----------------------

## பாடம் 3

## اَلْـحُقُوْقُ الْـمُتَعَلِّقَةُ بِالتَّرِكَةِ

# இறந்தவரின் சொத்தோடு தொடர்பான கடமைகள்

இறந்தவரின் சொத்துக்களை வாரிசுகளுக்கு மத்தியில் பங்கீடு செய்வதற்கு முன்னர் அந்த சொத்தோடு தொடர்புடைய கடமைகளை நிறைவேற்ற வேண்டும்.

அந்த கடமைகள் பின்வருமாறு:

### முதலாவதாக: மையித் – இறந்தவரோடு தொடர்புடைய செலவுகளை செய்தல்.

மரணித்தது முதல் அடக்கம் செய்யப்படுகின்ற வரை இறந்தவருக்கு ஏற்படுகின்ற செலவீனங்களை அவர் விட்டுச் செல்லும் சொத்திலிருந்து செய்தல் வேண்டும். அதாவது, கஃபனிடுதல், அடக்கம் செய்தல் இன்னும் அது தொடர்பான செலவுகள்.

### இரண்டாவதாக: இறந்தவரின் கடன்களை நிறைவேற்றுதல்

அதாவது, கஃபனிடுதல், அடக்கம் செய்தல் மற்றும் அது தொடர்பான செலவுகளை செய்த பிறகு சொத்தை பங்கீடு செய்வதற்கு முன்னர் சொத்திலிருந்து இறந்தவர் மீதுள்ள கடன்களை நிறைவேற்ற வேண்டும்.

அல்லாஹ் கூறுகின்றான்:

مِنْ بَعْدِ وَصِيَّةٍ يُوصِي بِهَا أَوْ دَيْنٍ

இறந்தவரின் வஸிய்யத் (தர்மத்திற்காக இறந்தவர் செய்த மரணசாசனம்) அல்லது கடனைச் செலுத்தியதன் பிறகு (மீதமுள்ள சொத்தில் வாரிசுகளின் பங்குகள் பிரிக்கப்பட வேண்டும்).

(அல்குர்ஆன் 4 : 11)

மரணித்தவரின் சொத்திலிருந்து நிறைவேற்றப்பட வேண்டிய கடன்கள் இரண்டு வகைப்படுகின்றன.

i. **அல்லாஹ்வுக்குச் செலுத்த வேண்டிய கடன்கள்**

ii. **மனிதர்களுக்குக் கொடுக்க வேண்டிய கடன்கள்**

ஸகாத், கஃப்பாரா[7], நேர்ச்சை போன்ற அல்லாஹ்வுக்கு செலுத்த வேண்டிய கடன்களையும் மனிதர்களுக்குக் கொடுக்கவேண்டிய கடன்களையும் நிறைவேற்றியதன் பிறகே இறந்தவரின் சொத்துக்கள் வாரிசுகளுக்கு பகிர்ந்தளிக்கப்பட வேண்டும் என இஸ்லாமிய ஷரீஆத் கூறுகிறது. எனினும், இந்த இரண்டு வகை கடன்களில் எதனை முற்படுத்துவது என்பதில் மார்க்க சட்ட மேதைகளுக்கு மத்தியில் கருத்து வேறுபாடுகள் காணப்படுகின்றன.

மாலிக் மத்ஹப்பைச் சேர்ந்த அறிஞர்கள் அல்லாஹ்வுக்கு செலுத்த வேண்டிய கடனைவிட மனிதர்களுக்கு கொடுக்க வேண்டிய கடனை முற்படுத்த வேண்டும் என்று கூறுகிறார்கள். மனிதர்களுக்கு வழங்க வேண்டிய கடனை அல்லாஹ் மன்னிப்பதில்லை. ஆனால், அவனோடு தொடர்பான கடன்களை அவன் மன்னிக்கப் போதுமானவன் என்ற இஸ்லாமின் பொதுக் கருத்தை அடிப்படையாகக் கொண்டு இந்நிலைப்பாட்டை முன்வைக்கின்றனர்.

ஷாஃபிஈ மத்ஹபின் மிகவும் பலமான கருத்தாக அல்லாஹ்வுக்கு வழங்க வேண்டிய கடனை முற்படுத்துதல் காணப்படுகிறது. இந்நிலைப்பாட்டுக்கு இரண்டு நியாயங்களை அவர்கள் முன்வைக்கிறார்கள்.

7. குற்றத்திற்காக செய்யப்படும் பரிகாரம்.

فَدَيْنُ اللهِ أَحَقُّ أَنْ يُقْضَىٰ

நபி ﷺ அவர்கள் கூறினார்கள்: அல்லாஹ்வுக்கு செலுத்த வேண்டிய கடன் நிறைவேற்றப்படுவதற்கு மிகத் தகுதியானதாகும்.[8]

நிறைவேற்றவேண்டிய கடன் என்பது ஏழை, எளியோர், கேட்டு வருவோர், கேட்க வெட்கப்படுவோர் போன்றோரின் உரிமைகளாகும். எனவே, இந்த வகையில் அல்லாஹ்வுக்கு செலுத்தவேண்டிய கடன் என்பது மனிதர்களுக்குக் கொடுக்க வேண்டிய உரிமையாகக் காணப்படுகிறது.

மரணித்தவர் விட்டுச் சென்ற சொத்தில் அவரது எந்தக் கடனை முற்படுத்துவது என்பது தொடர்பான இரு வேறுபட்ட சட்ட நிலைப்பாடுகளையும், அவற்றுக்கான நியாயங்களையும் மேலே அறிந்தோம்.

மனிதர்களுக்கு வழங்க வேண்டிய கடனை முற்படுத்துவதை பலமாகக் கருதுகின்ற மாலிகி, ஹன்பலி மத்ஹப்களுடைய கருத்து பலமானதாகத் தெரிகிறது. ஏனெனில், அல்லாஹ்வோடு தொடர்புடைய கடன்களை அவன் தன்னுடைய தயாளத் தன்மையினால் மன்னிக்கலாம்.

இதன் பொருள் என்னவென்றால், அல்லாஹ்வுக்குச் செலுத்த வேண்டிய கடனை நிறைவேற்றுவதற்குப் போதுமானளவு குடும்பச் சொத்து இருந்தாலும் அதனை வழங்கத் தேவையில்லை என்றாகிறது.

ஆனால், இறந்தவரின் சொத்து இரு வகையான கடன்களை நிறைவேற்றப் போதுமானளவு காணப்படுமாயின் இரண்டையும் (-அல்லாஹ்வுடைய கடனையும், அடியார்களுடைய கடனையும்) நிறைவேற்ற வேண்டும் என்பதே மிக ஏற்றமான கருத்தாகும்.

## மூன்றாவதாக: வஸியத்துக்களை நிறைவேற்றுதல்

கடன்களை நிறைவேற்றியதன் பின்னர் மீதமுள்ள சொத்தில் மூன்றில்

8. அறிவிப்பாளர்: இப்னு அப்பாஸ் ﵁, நூல்: ஸஹீஹுல் புகாரி 1953

ஒரு பகுதிக்குள் வஸிய்யத்துக்களை நிறைவேற்றுதல் அவசியமாகும். வஸிய்யத் என்பது வாரிசுகள் அல்லாத ஏனையவர்களுக்கு அல்லது தர்ம காரியங்களுக்கு சொத்தில் மூன்றிலொரு பகுதியிலிருந்து வழங்குமாறு இறந்தவர் இறப்புக்குமுன் செய்த மரணசாசனம் ஆகும். இறந்தவர் விட்டுச் செல்லும் சொத்தில் மூன்றில் ஒரு பகுதியிலிருந்து வஸிய்யத்துக்களை நிறைவேற்றுவது வாரிசுகள் மீது கடமையாகும்.

வாரிசுகளுக்கு சொத்துக்களை வஸிய்யத் செய்ய முடியாது என நபி ﷺ அவர்கள் கூறினார்கள்.

إِنَّ اللّٰهَ قَدْ أَعْطَى كُلَّ ذِي حَقٍّ حَقَّهُ أَلَا لَا وَصِيَّةَ لِوَارِثٍ

“நிச்சயமாக அல்லாஹ் உரிமை உள்ள ஒவ்வொருவருக்கும் அவருடைய உரிமையை கொடுத்து விட்டான். அறிந்து கொள்ளுங்கள்! வாரிசுகளுக்கு வஸிய்யத் இல்லை.”[9]

இறந்தவரின் சொத்தோடு தொடர்பான மேற்குறிப்பிட்ட கடமைகளை நிறைவேற்றிய பின்னர் மீதமுள்ள சொத்துக்களை வாரிசுகளுக்கு மத்தியில் பகிர்ந்தளிக்க வேண்டும்.

---------------------

9. அறிவிப்பாளர்: அனஸ் இப்னு மாலிக் ؓ, நூல்: இப்னு மாஜா 2714

# أَسْبَابُ الْإِرْثِ

# சொத்துரிமையின் காரணங்கள்

## 1. الزوجية கணவன் மனைவி உறவு

திருமணத்தின் மூலமாக கணவனின் சொத்தில் மனைவிக்கும், மனைவியின் சொத்தில் கணவனுக்கும் பங்குண்டு.

விவாகரத்தாகிவிட்ட கணவன்-மனைவிக்கிடையில் சொத்துப் பங்கீட்டைப் பொறுத்தவரையில் விவாகரத்தின் வகையைப் பொறுத்து அமைகிறது. திரும்ப மீட்ட முடியுமான طلاق رجعي ரஜஇய்யான தலாக்காக இருப்பின், அதற்கான இத்தாவில் மனைவி இருக்கும்போது இருவரில் ஒருவர் மரணித்து விட்டால் அவரின் குடும்பச் சொத்தில் குறிப்பிட்டதொரு பங்கு அடுத்தவருக்கு உண்டு. ஏனெனில், தலாக் ரஜஇயின்போது இத்தா முடிகின்ற வரை இருவரும் கணவன், மனைவியாகவே கருதப்படுகின்றனர்.

ஆனால், மூன்று தலாக் சொல்லப்பட்ட விவாகரத்தாக இருப்பின் இருவருக்கிடையில் சொத்து பங்கிடப்படாது. ஏனெனில், மூன்று தலாக்குக்குப் பிறகு இருவரும் கணவன்-மனைவியாக கருதப்பட மாட்டார்கள்.

அதேபோல் خلع குல்உ அடிப்படையில் மனைவி கணவனை விட்டும் பிரிந்து விட்டால் அவர்கள் இருவருக்கும் இடையில் சொத்துப் பங்கீடு இருக்காது. ஏனெனில், குல்உவின் மூலம் இருவரும் கணவன்-மனைவி என்ற தொடர்பை துண்டித்துக் கொண்டார்கள்.

## 2. النسب வமிச உறவு

தாய், தந்தை, பிள்ளைகள், சகோதரர்கள், சகோதரிகள் என்ற இரத்த, வமிச உறவு சொத்துரிமை பெறுவதற்கான அடிப்படைத் தகுதியாகும்.

## 3. الولاء விடுதலை செய்யப்பட்ட அடிமையின் தொடர்பு

அடிமையாக இருப்பது குடும்பச் சொத்து பரிமாற்றத்துக்கு தடையானதொரு காரணமாகும். ஆனால், அடிமையாக இருந்த ஒருவர் விடுதலை செய்யப்பட்டால் அவர் மரணித்ததன் பிறகு அவரது வாரிசுகளுக்கு சொத்துக்கள் பங்கிடப்படும். வாரிசுகள் யாரும் இல்லாதபோது, அவரின் எஜமானனுக்கு சொத்துக்கள் செல்லும்.

### சொத்துரிமையின் நிபந்தனைகள்

ஏற்கனவே குறிப்பிட்ட மூன்று சாராரும் குடும்பச் சொத்தில் உரிமை பெற்றாலும் பின்வரும் மூன்று நிபந்தனைகளும் பூர்த்தியாகும் போதே சொத்துப் பங்கீடு இடம்பெறும்.

(i) சொத்தின் உரிமையாளர் மரணித்திருக்க வேண்டும். ஒரு சொத்து குடும்பச் சொத்தாக மாறுவதற்கு சொத்துரிமையாளர் மரணித்திருக்க வேண்டும். இஸ்லாமிய சொத்துரிமைச் சட்டங்கள் இறந்தவரின் சொத்துக்களுக்காகதான் நடைமுறை படுத்தப்படும்,

(ii) சொத்தின் உரிமையாளர் மரணிக்கும்போது அவரின் வாரிசுகள் உயிருடன் இருக்க வேண்டும். அதாவது, தந்தை மரணிக்கும்போது மகன் உயிருடன் இருக்க வேண்டும். பிள்ளைகளில் ஒருவர் தந்தை மரணிப்பதற்கு முன்பாக மரணித்து விட்டால் தந்தையின் சொத்துக்கு அவர் வாரிசாக இருக்க மாட்டார்.

(iii) குடும்பச் சொத்து வாரிசுகளுக்கு மத்தியில் சென்றடையத் தடையாக அமையும் காரணங்கள் இருக்கக் கூடாது.

----------------------

مَوَانِعُ الْإِرْثِ

# வாரிசாக ஆகுவதற்குரிய தடைகள்

ஒரு சொத்துக்கு வாரிசாக ஆகுவதற்குத் தேவையான அடிப்படைத் தகுதிகளைக் கொண்டுள்ள வாரிசுதாரர் பின்வரும் காரணங்களில் ஒன்றைப் பெற்றிருப்பின் அவர் சொத்துக்கு உரிமை பெறத் தகுதியற்றவராகி விடுகிறார். இவ்வாறு சொத்துரிமையை இழக்கும் ஒருவர் **محروم** 'மஹ்ரூம்' சொத்து வழங்கப்படாமல் தடுக்கப்பட்டவர் என அழைக்கப்படுவார்.

### (i) அடிமையாக இருத்தல்

"அடிமையாக இருத்தல்" சொத்தில் பங்கு பெறுவதற்குத் தடையான ஒரு காரணமாகும். தற்காலத்தில் அடிமையாக இருத்தல் இல்லாமல் ஆகிவிட்டதால் இங்கு அதுபற்றி விரிவாக விளக்கப்படவில்லை.

### (ii) கொலை

சொத்துக்கு வாரிசாக ஆகின்றவர்களில் ஒருவர் சொத்தின் உரிமையாளரைக் கொலை செய்து விட்டால் கொலையாளிக்கு கொல்லப்பட்டவரின் சொத்திலிருந்து பங்கு கிடைக்காது என்பது இஸ்லாமிய மார்க்கத்தின் சட்டமாகும்.

நபி ﷺ அவர்கள் கூறினார்கள்:

عَنْ أَبِي هُرَيْرَةَ ﷺ أَنَّ رَسُولَ اللهِ ﷺ قَالَ الْقَاتِلُ لَا يَرِثُ

"கொலையாளி வாரிசாக மாட்டார்."[10]

புத்திசுவாதீனமுள்ள, பருவ வயதை அடைந்த எந்த நியாயமுமின்றி வேண்டுமென்றே கொலை செய்த வாரிசைதான் இது குறிக்கின்றது. மேலும், ஒருவர் நேரடியாக கொலைக் குற்றத்தில் சம்பந்தப்பட்டவராக, அல்லது உதவியாளராக, அல்லது கொலைக்குத் தூண்டியவராக இருந்தால் அவரும் கொலையாளியாகவே கருதப்படுவார்.

சொத்தின் உரிமையாளரிடமிருந்து சொத்தை அவசரமாகப் பெற்றுக் கொள்ளும் நோக்கோடு சில வாரிசுகள் இத்தகைய கொலைக் குற்றத்தைச் செய்ய முன் வருவார்கள் என்பதற்காகவே இஸ்லாம் இப்படியொரு வரையறையை விதித்துள்ளது. பின்வரும் இஸ்லாமிய சட்டவிதி கூட இவ்விஷயத்தை தெளிவுபடுத்துகின்றது.

مَنِ اسْتَعْجَلَ الشَّيْءَ قَبْلَ أَوَانِهِ عُوقِبَ بِحِرْمَانِهِ

யார் ஒன்றுக்கு அதன் காலம் வரும்முன் அவசரப்படுகிறாரோ அவர் அதை இழப்பதைப் கொண்டு தண்டிக்கப்படுவார்.

### (iii) மார்க்கம் வெவ்வேறாக இருத்தல்

முஸ்லிமல்லாதவர்கள் மற்றும் முஸ்லிம்களுக்கிடையில் குடும்பச் சொத்து பங்கிடப்பட மாட்டாது. முஸ்லிமல்லாத பெற்றோர் முஸ்லிமான மகனின் சொத்தில் பங்கு பெறமாட்டார்கள். அதேபோன்று, முஸ்லிமல்லாத பெற்றோரின் சொத்தில் முஸ்லிமான பிள்ளைகள் பங்கு பெறமாட்டார்கள். சொத்துரிமைச் சட்டம் ஒரு மார்க்கக் கடமையாகும். ஆகவே, அது இஸ்லாமைத் தழுவியவர்களுக்கு மத்தியிலே மட்டும் சுழலும் ஒரு பிரத்தியேகமான சட்டமாகும்.

நபி ﷺ அவர்கள் கூறினார்கள்:

لاَ يَرِثُ الْمُؤْمِنُ الكَافِرَ وَلاَ يَرِثُ الكَافِرُ الْمُؤْمِنَ

10. அறிவிப்பாளர்: ஜாபிர் ﵁, நூல்: திர்மிதி 2109

“காஃபிருக்கு முஸ்லிம் வாரிசாக மாட்டார். முஸ்லிமுக்கு காஃபிர் வாரிசாக மாட்டார்.”[11]

இறைத்தூதர் ﷺ அவர்கள் கூறினார்கள்:

عَنْ جَابِرٍ عَنِ النَّبِيِّ ﷺ قَالَ لاَ يَتَوَارَثُ أَهْلُ مِلَّتَيْنِ

“இரண்டு மதங்களை உடையவர்கள் (ஒருவர் மற்றவருக்கு) வாரிசாக மாட்டார்கள்.”[12]

இஸ்லாமிய சொத்துரிமைச் சட்டங்களுக்கேற்ப சொத்துக்களைப் பகிர்ந்தளிக்கும்போது கவனத்தில் கொள்ள வேண்டிய அடிப்படை விஷயங்களைத் தெளிவுபடுத்தினோம்.

----------------------

11. அறிவிப்பாளர்: உஸாமா இப்னு ஜைது ؓ, நூல்: ஸஹீஹுல் புகாரி: 4283
12. அறிவிப்பாளர்: ஜாபிர் ؓ, நூல்: திர்மிதி 2108

**பாடம் 6**

## أَصْنَافُ الْوَرَثَةِ وَأَسْهَامُهُمْ مَعَ بَيَانِ الْأَمْثِلَةِ

# வாரிசுகளின் வகைகள்

குடும்பச் சொத்துக்கு மூன்று வகையான வாரிசுகள் இருக்கிறார்கள்

1. أَصْحَابُ الْفُرُوضِ அஸ்ஹாபுல் ஃபுரூழ்
   குறிப்பிட்ட, வரையறுக்கப்பட்ட பங்குகளை உடையவர்கள்

2. اَلْعَصَبَاتُ அஸபாத்
   மீதம் உள்ள சொத்துக்கு முழுமையாக உரிமையுள்ளவர்கள்

3. ذَوُو الْأَرْحَامِ தவுல் அர்ஹாம்
   இரத்த உறவினர்கள்

# பிரிவு 1

## أَصْحَابُ الْفُرُوضِ

## 1. அஸ்ஹாபுல் ஃபுரூழ்

அல்குர்ஆன் மற்றும் அஸ்ஸுன்னாவில் பங்குகள் மிகத் தெளிவாக வரையறுத்துக் கூறப்பட்டுள்ள வாரிசுகளை அஸ்ஹாபுல் ஃபுரூழ் என்று குறிப்பிடப்படுகிறது.

அந்த பங்குகள் 1/2 அரை, 1/4 கால், 1/8 அரைக்கால், 1/6 ஆறில் ஒன்று, 1/3 மூன்றில் ஒன்று, 2/3 மூன்றில் இரண்டு.

பின்வருவோர் இப்பிரிவில் அடங்குகிறார்கள்:

| | | |
|---|---|---|
| 1. | أب | தந்தை |
| 2. | أب الأب | தந்தையின் தந்தை<br>(அப்படியே எவ்வளவு தூரம் மேல்நோக்கிச் சென்றாலும் சரி) |
| 3. | زوج | கணவன் |
| 4, 5. | الإخوة والأخوات لِأم | தாய்வழி சகோதரரார்கள், தாய்வழி சகோதரிகள் |
| 6. | زوجة | மனைவி |
| 7. | بنت | மகள் |
| 8. | بنت الإبن | மகனின் மகள்<br>(அப்படியே எவ்வளவு தூரம் கீழ்நோக்கிச் சென்றாலும் சரி) |
| 9. | الأخوات لِأب وأم | உடன் பிறந்த சகோதரிகள் |
| 10. | الأخوات لِأب | தந்தைவழி சகோதரிகள் |
| 11. | أم | தாய் |
| 12. | جدة | பாட்டி (தந்தையின் தாய், தாயின் தாய்) |

மரணித்தவரின் சொத்துக்களில் இறந்தவரை அடக்கம் செய்வதற்கான செலவுகள், கடன்கள் மற்றும் வஸிய்யத்துக்களை நிறைவேற்றியதன் பின்னர் மீதமிருக்கின்ற சொத்துக்களை வாரிசுகளுக்கு மத்தியில் பிரித்துக் கொடுக்க வேண்டும். முதலாவதாக, அஸ்ஹாபுல் ஃபுரூழ் என்ற வாரிசுகள் ஒவ்வொருவரும் பெற்றுக் கொள்ளும் பங்குகளையும் அதற்கான ஆதாரங்களையும் அறிவோம்.

## 1. தந்தை

தந்தைக்குரிய நிலைகள்




(i) மரணித்தவருக்கு மகன் இருந்தால் 1/6 ஆறில் ஒரு பங்கை மட்டும் தந்தை பெறுவார்.

(ii) மரணித்தவருக்கு ஒரு மகள் அல்லது பல மகள்கள் இருந்தால் 1/6 ஆறில் ஒரு பங்கைப் ஃபர்ழாகவும், இறுதியாக மீதமுள்ளதை அஸபாவாகவும் பெறுவார்.

(iii) மரணித்தவருக்கு ஆண், பெண் பிள்ளைகளில்லாத போது தந்தை அஸபாவாக ஆகி மீதமுள்ள அனைத்தையும் பெறுவார்.

**ஆதாரம்:**

وَلِأَبَوَيْهِ لِكُلِّ وَاحِدٍ مِنْهُمَا السُّدُسُ مِمَّا تَرَكَ إِنْ كَانَ لَهُ وَلَدٌ ۚ فَإِنْ لَمْ يَكُنْ
لَهُ وَلَدٌ وَوَرِثَهُ أَبَوَاهُ فَلِأُمِّهِ الثُّلُثُ ۚ

(உங்களில் இறந்துபோன) அவருக்கு பிள்ளைகளிருப்பின், அவரின் தாய், தந்தை ஒவ்வொருவருக்கும் அவர் விட்டுச் செல்லும் சொத்தில் ஆறிலொன்று உண்டு. (இறந்துபோன) அவருக்கு பிள்ளைகளின்றி, அவர் விட்டுச் செல்லும் சொத்துக்கு பெற்றோர் மட்டுமே வாரிசுகளாக இருப்பின் அவரின் தாய்க்கு மூன்றிலொன்று செல்லும். (மீதமுள்ளவை தந்தைக்குச் செல்லும்.) (அல்குர்ஆன் 4 : 11)

## 2. தந்தையின் தந்தை

இறந்தவருக்குத் தந்தை இல்லாதபோது தந்தைக்குரிய மூன்று நிலைகளையும் தந்தையின் தந்தை பெற்றுக் கொள்வார்.




(i) மரணித்தவருக்கு ஆண் பிள்ளை இருந்து, தந்தையில்லாத போது தந்தையின் தந்தை 1/6 ஆறில் ஒரு பங்கைப் பெறுவார்.

(ii) மரணித்தவருக்கு மகள்கள் மட்டும் இருந்து, தந்தையில்லாமல் இருந்தால் தந்தையின் தந்தை 1/6 ஆறில் ஒரு பங்கை ஃபர்ழாகவும், இறுதியாக மீதமுள்ள பங்குகளை பெற்றுக் கொள்வார்.

(iii) இறந்தவருக்கு ஆண், பெண் பிள்ளைகள் இல்லாதிருப்பதோடு, தந்தையும் இல்லையென்றால் தந்தையின் தந்தை மீதமுள்ள அனைத்தையும் பெற்றுக் கொள்வார்.

- தந்தைக்கு ஆதாரமாகக் கூறிய ஸூரதுந் நிஸாவின் 12 வது வசனமே தந்தையின் தந்தைக்கும் ஆதாரமாகும் என்பது இஸ்லாமிய சட்டத்துறை அறிஞர்களின் ஏகோபித்த முடிவாகும்.
- இறந்தவரின் தந்தை இருக்கும்போது இறந்தவரின் சகோதரர்களுக்கு அல்லது தந்தையின் சகோதரர்களுக்கு சொத்து சேராது.
- ஆனால், தந்தையின் தந்தை இருப்பின் இறந்தவரின் சகோதரர்களுக்குச் சொத்து சென்றடையும்.

## 3. கணவன்

மனைவி மரணித்துவிட்டால் அவளுடைய சொத்தில் கணவனுக்கு இரண்டு நிலைகளுண்டு.

கணவன்

1/2 பங்கு | 1/4 பங்கு

(i) மனைவிக்கு குழந்தைகள் யாரும் இல்லாதபோது மனைவியின் சொத்தில் 1/2 சமபாதி பங்கைக் கணவன் பெறுவார்.

(ii) மனைவிக்கு குழந்தைகள் இருப்பின் சொத்தில் 1/4 கால் பங்கைக் கணவன் பெறுவார்.

ஆதாரம்:

وَلَكُمْ نِصْفُ مَا تَرَكَ أَزْوَاجُكُمْ إِنْ لَمْ يَكُنْ لَهُنَّ وَلَدٌ ۚ فَإِنْ كَانَ لَهُنَّ وَلَدٌ فَلَكُمُ الرُّبُعُ مِمَّا تَرَكْنَ ۚ مِنْ بَعْدِ وَصِيَّةٍ يُوصِينَ بِهَا أَوْ دَيْنٍ ۚ

உங்கள் மனைவியர்கள் விட்டுச்சென்ற(சொத்)தில், அவர்களுக்கு பிள்ளை இல்லாவிட்டால், உங்களுக்கு (-கணவன்மார்களுக்கு) அரைப் பங்குண்டு. ஆனால் அவர்களுக்கு பிள்ளை இருந்தால் அவர்கள் விட்டுச்சென்ற(சொத்)தில் உங்களுக்கு நான்கில் ஒன்று உண்டு, வஸிய்யத் அல்லது கடனை நிறைவேற்றிய பின்னர் (உங்களுக்கு இந்தப் பங்கு கொடுக்கப்படும்). (அல்குர்ஆன் 4 : 12)

## 4, 5. தாய்வழி சகோதரன், தாய்வழி சகோதரி

இறந்தவரின் தாய்வழி சகோதர சகோதரிகளுக்கும் சொத்தில் பங்கிருப்பதை அல்குர்ஆன் உறுதி செய்கிறது. இங்கு தாய்வழி சகோதர, சகோதரிகள் என்போர் தாயின் அடுத்த கணவனின் மூலம் கிடைத்த பிள்ளைகளைக் குறிக்கிறது. அதாவது, இவர்கள் தாயால் ஒன்றுபட்டவர்களாகவும் தந்தையால் வேறுபட்டவர்களாகவும் இருப்பார்கள்.

ஆதாரம்:

وَإِنْ كَانَ رَجُلٌ يُورَثُ كَلَالَةً أَوِ امْرَأَةٌ وَلَهُ أَخٌ أَوْ أُخْتٌ فَلِكُلِّ وَاحِدٍ مِنْهُمَا السُّدُسُ فَإِنْ كَانُوا أَكْثَرَ مِنْ ذَلِكَ فَهُمْ شُرَكَاءُ فِي الثُّلُثِ مِنْ بَعْدِ وَصِيَّةٍ يُوصَى بِهَا أَوْ دَيْنٍ غَيْرَ مُضَارٍّ وَصِيَّةً مِنَ اللَّهِ وَاللَّهُ عَلِيمٌ حَلِيمٌ (١٢)

(தந்தை, பாட்டன், பிள்ளை, பேரன் ஆகிய) வாரிசுகள் இல்லாத ஓர் ஆணோ அல்லது ஒரு பெண்ணோ இறந்து, (அவர்களுக்கு) ஒரே ஒரு சகோதரன் அல்லது ஒரே ஒரு சகோதரி இருந்தால், அவர்களில் ஒவ்வொருவருக்கும் (இறந்தவர் விட்டுச் சென்றதில்) ஆறில் ஒரு பாகமுண்டு. இதற்கு அதிகமாக (அதாவது ஒருவருக்கு மேற்பட்டு சகோதரனும், சகோதரியும் அல்லது இரண்டு சகோதரர்கள், சகோதரிகள்) இருந்தால் (சொத்தில்) மூன்றில் ஒரு பாகத்தில் அவர்கள் அனைவரும் சமமான பங்குதாரர்கள் ஆவார்கள். இதுவும் (அவருடைய) மரணசாசனம், கடன் ஆகியவற்றைக் கொடுத்த பின்னரே! எனினும், (இந்தக் கடன், மற்றும் மரண சாசனத்தால் வாரிசுகளில் எவருக்கும்) நஷ்டம் ஏற்படுத்தாதவராக இருக்கவேண்டும். (இது) அல்லாஹ்வுடைய நல்லுபதேசமாகும். அல்லாஹ் மிக அறிந்தவன், பொறுமையுடையவன் ஆவான். (அல்குர்ஆன் 4 : 12)

மேற்கூறிய அல்குர்ஆன் வசனத்தில் வந்துள்ள சகோதரன் அல்லது

சகோதரி என்பது தாய்வழி சகோதர, சகோதரிகளைக் குறிக்கும் என்பது ஸஹாபாக்களின் இஜ்மா -ஏகோபித்த முடிவாகும்.[13]

தாய்வழி சகோதர, சகோதரிகள் சொத்தில் பங்குகளைப் பெறக்கூடிய நிலைகள்.

தாய்வழி சகோதரர்கள்,
தாய்வழி சகோதரிகள்

1/6 பங்கு

1/3 பங்கு

(i) இறந்தவருக்கு தாய்வழி ஒரு சகோதரன் அல்லது ஒரு சகோதரி மாத்திரமிருப்பின் 1/6 ஆறில் ஒரு பங்கைப் பெறுவர்.

(ii) இரண்டு அல்லது அதற்கு மேற்பட்டோர் இருப்பின் அனைவரும் 1/3 மூன்றில் ஒன்றில் சரிசமமாக பங்கு பெறுவார்கள்.

**குறிப்பு:** தாய்வழி சகோதரர்கள் மற்றும் தாய்வழி சகோதரிகள் இரண்டு சந்தர்ப்பங்களில் இறந்தவரின் சொத்தில் பங்குபெற மாட்டார்கள்.

(i) மரணித்தவருக்கு மகன் அல்லது மகள் இருப்பின்.

(ii) மரணித்தவருக்கு தந்தை இருப்பின்.

குறிப்பு: மரணித்தவருக்கு தாய் இருப்பின் தாய்வழி சகோதரர்களுக்கு சொத்தில் பங்குண்டு.

13. பார்க்க: தஃப்ஸீர் தபரீ

## 6. மனைவி / மனைவிகள்

கணவன் மரணித்துவிட்டால் அவனுடைய சொத்தில் மனைவிக்கு இரு நிலைகளுண்டு.

மனைவி / மனைவிகள்

1/4 பங்கு — 1/8 பங்கு

(i) கணவனுக்குப் பிள்ளை இல்லாதபோது கணவனின் சொத்தில் 1/4 கால் பங்கை மனைவி பெறுவாள்.

(ii) பிள்ளை இருப்பின் 1/8 எட்டில் ஒரு பங்கைப் பெறுவாள்.

ஆதாரம்:

وَلَهُنَّ الرُّبُعُ مِمَّا تَرَكْتُمْ إِنْ لَمْ يَكُنْ لَكُمْ وَلَدٌ ۚ فَإِنْ كَانَ لَكُمْ وَلَدٌ فَلَهُنَّ
الثُّمُنُ مِمَّا تَرَكْتُمْ ۚ مِنْ بَعْدِ وَصِيَّةٍ تُوصُونَ بِهَا أَوْ دَيْنٍ ۗ

உங்களுக்குப் பிள்ளை இல்லாவிட்டால் (உங்கள் மனைவிகளாகிய) அவர்களுக்கு நீங்கள் விட்டுச்சென்ற(சொத்)தில் நான்கில் ஒன்று உண்டு. உங்களுக்குப் பிள்ளை இருப்பின் எட்டில் ஒன்று அவர்களுக்குண்டு, உங்களது வஸிய்யத் அல்லது கடன்களை நிறைவேற்றிய பின்னர் (இந்த பங்கு கொடுக்கப்படும்).

(அல்குர்ஆன் 4 : 12)

ஒன்றுக்கு மேற்பட்ட மனைவிகள் இருந்தால் அவர்கள் அனைவரும் தங்களுக்குள் 1/4 நான்கில் ஒன்றை அல்லது 1/8 எட்டில் ஒன்றை சரிசமமாகப் பிரித்துக் கொள்வார்கள்.

## 7. மகள்

மரணித்தவரின் சொத்தில் மகள் மூன்று நிலைகளில் பங்கு பெறுவாள்:




(i) மரணித்தவருக்கு ஒரு மகள் மட்டும் இருந்தால், அவரின் சொத்தில் சமபாதி 1/2 அரைப் பங்கை மகள் பெறுவாள்.

(ii) மரணித்தவருக்கு இரண்டு அல்லது அதைவிட அதிகமான மகள்கள் இருந்து, மகன்கள் இல்லாவிட்டால் 2/3 மூன்றில் இரண்டு பங்கை அவர்கள் பெறுவார்கள்.

(iii) மகள்களோடு மகனுமிருப்பின் மகள் அஸபாவாக ஆகிவிடுவாள். மீதமுள்ளதில் மகனுக்கு இரண்டு பங்கும் மகளுக்கு ஒரு பங்கும் உண்டு.

**குறிப்பு:** மகன்களுக்குப் பங்கை வரையறுத்து குர்ஆன் கூறவில்லை. மீதமுள்ள சொத்தை பெற்றுக்கொள்ளும் அஸபாவாக மகன் இருப்பார். இங்கு மீதமுள்ளதில் மகனுக்கு இரண்டு பங்கும் மகளுக்கு ஒரு பங்கும் உண்டு.

**ஆதாரம்:**

**يُوصِيكُمُ اللَّهُ فِي أَوْلَادِكُمْ ۖ لِلذَّكَرِ مِثْلُ حَظِّ الْأُنْثَيَيْنِ ۚ فَإِنْ كُنَّ نِسَاءً**
**فَوْقَ اثْنَتَيْنِ فَلَهُنَّ ثُلُثَا مَا تَرَكَ ۖ وَإِنْ كَانَتْ وَاحِدَةً فَلَهَا النِّصْفُ ۚ**

உங்களது பிள்ளைகள் விஷயத்தில் (சொத்துப் பங்கீட்டில்) அல்லாஹு தஆலா உங்களுக்குக் கட்டளையிடுகிறான்: "ஓர் ஆணுக்கு இரு பெண்களுக்குரியது போன்ற பங்குண்டு. ஆண் பிள்ளைகளின்றி இரண்டுக்கு மேற்பட்ட பெண்பிள்ளைகள் மட்டும் இருப்பின், இறந்தவர் விட்டுச் சென்றதில் மூன்றில் இரண்டு பங்கு இவர்களுக்குண்டு. ஒரு பெண்பிள்ளை மட்டும் இருப்பின் அவளுக்கு அரைப் பங்குண்டு."

(அல்குர்ஆன் 4 : 12)

## 8. மகனின் மகள்

இறந்தவரின் மகனின் மகள் பங்கு பெறுகின்ற நிலைகள்:




(i) மரணித்தவருக்கு மகனின் மகள் மட்டும் இருப்பின் 1/2 அரைப் பங்கைப் பெறுவாள்.

(ii) மரணித்தவருக்கு மகனின் மகள் இரண்டு அல்லது அதைவிட அதிகம் இருப்பின் 2/3 மூன்றில் இரண்டு பங்குகளைப் பெறுவார்கள்.

(iii) மரணித்தவருக்கு மகனின் மகளோடு சேர்த்து மகனின் மகனும் இருந்தால் மகனின் மகள் அவனுடன் சேர்ந்து அஸபாவாக ஆகிவிடுவாள். மீதமுள்ளதில் மகனுக்கு இரண்டு பங்கும் மகளுக்கு ஒரு பங்கும் உண்டு.

(iv) மரணித்தவருக்கு மகன் இல்லாமல் மகள் ஒருத்தி மட்டும் மற்றும் மகனின் மகள்களும் இருந்தால் அவர்கள் 1/6 ஆறில் ஒரு பங்கைப் பெற்றுக் கொள்வார்கள்.

**கவனிக்க:** மரணித்தவருக்கு மகன் அல்லது ஒன்றுக்கு மேற்பட்ட மகள்கள் இருந்தால் மகனின் மகளுக்கு பங்கு இல்லை.

## 9. உடன்பிறந்த சகோதரி

மரணித்தவரின் (தாய் மற்றும் தந்தைவழி) உடன்பிறந்த சகோதரிகள் குடும்பச் சொத்தில் பங்கு பெறுகிறார்கள்.

பிள்ளைகளையோ, பெற்றோர்களையோ வாரிசுகளாக விட்டுச் செல்லாமல் இறந்த நபரை இஸ்லாமிய சொத்துரிமை வழக்கத்தில் **كلالة** "கலாலா" என அழைக்கப்படும்.

குழந்தைகளோ பெற்றோரோ வாரிசுகளாக இல்லாதபோது மரணித்தவரின் உடன்பிறந்த சகோதர சகோதரிகள் சொத்தில் பங்கு பெறுவார்கள்.

ஆதாரம்:

**يَسْتَفْتُونَكَ قُلِ اللّٰهُ يُفْتِيكُمْ فِي الْكَلَالَةِ ۚ إِنِ امْرُؤٌ هَلَكَ لَيْسَ لَهُ وَلَدٌ وَلَهُ أُخْتٌ فَلَهَا نِصْفُ مَا تَرَكَ ۚ وَهُوَ يَرِثُهَا إِنْ لَمْ يَكُنْ لَهَا وَلَدٌ ۚ فَإِنْ كَانَتَا اثْنَتَيْنِ فَلَهُمَا الثُّلُثَانِ مِمَّا تَرَكَ ۚ وَإِنْ كَانُوا إِخْوَةً رِجَالًا وَنِسَاءً فَلِلذَّكَرِ مِثْلُ حَظِّ الْأُنْثَيَيْنِ ۗ يُبَيِّنُ اللّٰهُ لَكُمْ أَنْ تَضِلُّوا ۗ وَاللّٰهُ بِكُلِّ شَيْءٍ عَلِيمٌ○**

பெற்றோர் பிள்ளைகள் ஆகிய வாரிசுகளின்றி இறந்துபோன கலாலா பற்றி (நபியே!) அவர்கள் உம்மிடம் கேட்கிறார்கள். அதற்கு அல்லாஹு தஆலா கலாலா குறித்து உங்களுக்கு தீர்ப்பளிக்கிறான் என (நபியே!) நீங்கள் கூறுவீராக. எவரேனுமொரு மனிதன் இறந்து, அவனுக்கு குழந்தையில்லாது, ஒரு சகோதரி மட்டும் இருந்தால் அவளுக்கு அவன் விட்டுச் சென்ற சொத்தில் பாதி உண்டு. இதற்கு மாறாக ஒரு பெண் இறந்து அவளுக்குக் குழந்தையில்லாதிருந்தால் அவன் (-சகோதரன்) அவள் விட்டுச் சென்றவற்றுக்கு வாரிசு ஆகிவிடுகிறான். மரணித்தவருக்கு இரு சகோதரிகள் இருப்பின் அவர் விட்டுச் சென்ற சொத்தில் மூன்றில் இரண்டு பாகங்கள் அவ்விருவருக்கும் உண்டு. அன்றியும், ஆண், பெண் இருவரும் இருப்பின் இறந்தவரின் சொத்தில் ஆணுக்கு, பெண்ணுக்குரியதைப் போல் இரண்டு பங்குண்டு. நீங்கள் வழிதவறிவிடாமலிருப்பதற்காக

இவற்றை அல்லாஹு தஆலா தெளிவாக விளக்குகிறான். அல்லாஹு தஆலா ஒவ்வொன்றையும் நன்கறிபவன் ஆவான்.

(அல்குர்ஆன் 4 : 176)

உடன்பிறந்த சகோதரிகள் மரணித்தவரின் சொத்தில் பங்கு பெறுகின்ற நிலைகள்:




(i) ஒரு சகோதரி மட்டும் இருந்தால் சொத்தில் 1/2 அரைப் பங்கை அவள் பெறுவாள்.

(ii) இரண்டு அல்லது அதைவிட அதிகமான சகோதரிகள் இருந்தால் அவர்கள் 2/3 மூன்றில் இரண்டு பங்குகளைப் பெறுவார்கள்.

(iii) சகோதரனும் இருந்தால் சகோதரி சகோதரனுடன் சேர்ந்து அஸபாவாக மாறிவிடுவாள். மீதமுள்ளதில் சகோதரிக்கு ஒரு பங்கும் சகோதரனுக்கு இரு பங்குகளும் உண்டு. இவ்வகையான அஸபாவிற்கு அஸபா பி கைரிஹி என்று கூறப்படும்.

(iv) மகள்கள் அல்லது மகனின் மகள்கள் இருந்தால், அவர்களுக்கு வழங்கிவிட்டு மீதமுள்ள அனைத்தையும் அஸபாவாக சகோதரி பெறுவாள். இதை அஸபா மஅ கைரிஹி என்று கூறப்படும்.

(v) மகன் அல்லது மகனின் மகன் அல்லது தந்தை இருந்தால் சகோதரிகள் வாரிசாக மாட்டார்கள்.

ஆதாரம்:

قَالَ النَّبِيُّ ﷺ للاِبْنَةِ النِّصْفُ وَلِابْنَةِ الِابْنِ السُّدُسُ وَمَا بَقِيَ فَلِلْأُخْتِ

நபி ﷺ கூறினார்கள்: மகளுக்கு 1/2 அரையும் மகனின் மகளுக்கு 1/6 ஆறில் ஒன்று கிடைக்கும். மீதமுள்ளவை சகோதரிக்கு கிடைக்கும்.[14]

14. அறிவிப்பாளர்: அப்துல்லாஹ் இப்னு மஸ்ஊத் ؓ, நூல்: புகாரி 6742

## 10. தந்தைவழி சகோதரி

இறந்தவரின் தந்தைவழி சகோதர சகோதரிகளுக்கு சொத்தில் பங்கு உண்டு. ஆனால், நடைமுறைப்படுத்தும்போது, முதலில் உடன்பிறந்த சகோதரிகளையே முற்படுத்த வேண்டும்.

இறந்தவரின் தந்தைவழி சகோதர, சகோதரிகள் இறந்தவருக்கு சகோதரர்கள் இல்லாதபோது, உடன்பிறந்த சகோதரிகளுக்குரிய அதே நிலைகளில் சொத்தில் பங்கு பெறுவார்கள் என்பது ஸஹாபாக்கள் மற்றும் பின்னால் வந்த இமாம்களின் ஏகோபித்த கருத்தாக அமைந்துள்ளது.

இக்கருத்தை இமாம் மாலிக் ﵀ தனது முவத்தா கிரந்தத்திலே விளக்கியுள்ளார்கள்.

الْأَمْرُ الْمُجْتَمَعُ عَلَيْهِ عِنْدَنَا أَنَّ مِيرَاثَ الْإِخْوَةِ لِلْأَبِ إِذَا لَمْ يَكُنْ مَعَهُمْ أَحَدٌ مِنْ بَنِي الْأَبِ وَالْأُمِّ كَمَنْزِلَةِ الْإِخْوَةِ لِلْأَبِ وَالْأُمِّ سَوَاءٌ ذَكَرُهُمْ كَذَكَرِهِمْ وَأُنْثَاهُمْ كَأُنْثَاهُمْ.

“உடன்பிறந்த சகோதர, சகோதரிகள் காணப்படாதபோது தந்தைவழி சகோதரர்களின் சொத்துரிமை உடன் பிறந்த சகோதரர்களைப் போன்றுதான், அவர்கள் (இரு சாராரும்) சமமானவர்களே. தந்தைவழி சகோதரன் உடன் பிறந்த சகோதரனுக்கும் தந்தைவழி சகோதரி உடன் பிறந்த சகோதரிக்கும் ஒப்பானவர் ஆவார்கள். இது நம்மிடத்தில் ஏகோபித்த விஷயமாகும்.”[15]

மகளும் மகனின் மகளும் சமதரத்தில் பார்க்கப்படுவது போல் உடன் பிறந்த சகோதர, சகோதரிகளும், தந்தைவழி சகோதர, சகோதரிகளும் ஒரே இடத்தில் வைத்து பார்க்கப்படுவதில் தவறில்லை.

இந்த வகையில் உடன்பிறந்த சகோதரிகள், தந்தைவழி சகோதரிகளுக்கான சொத்துரிமை சட்டங்களை தனித்தனியாக

15. முஅத்தா இமாம் மாலிக் 509/2

விளக்கிய போதிலும் பின்வரும் அல்குர்ஆன் வசனமே தந்தைவழி சகோதரிகளுக்கும் ஆதாரமாக அமைகின்றது என்பதை கவனத்தில் கொள்ள வேண்டும்.

ஆதாரம்:

يَسْتَفْتُونَكَ قُلِ اللَّهُ يُفْتِيكُمْ فِي الْكَلَالَةِ ۚ إِنِ امْرُؤٌ هَلَكَ لَيْسَ لَهُ وَلَدٌ وَلَهُ أُخْتٌ فَلَهَا نِصْفُ مَا تَرَكَ ۚ وَهُوَ يَرِثُهَا إِنْ لَمْ يَكُنْ لَهَا وَلَدٌ ۚ فَإِنْ كَانَتَا اثْنَتَيْنِ فَلَهُمَا الثُّلُثَانِ مِمَّا تَرَكَ ۚ وَإِنْ كَانُوا إِخْوَةً رِجَالًا وَنِسَاءً فَلِلذَّكَرِ مِثْلُ حَظِّ الْأُنْثَيَيْنِ ۗ يُبَيِّنُ اللَّهُ لَكُمْ أَنْ تَضِلُّوا ۗ وَاللَّهُ بِكُلِّ شَيْءٍ عَلِيمٌ○

பெற்றோர் பிள்ளைகள் ஆகிய வாரிசுகளின்றி இறந்துபோன கலாலா பற்றி (நபியே!) அவர்கள் உம்மிடம் கேட்கிறார்கள். அதற்கு அல்லாஹு தஆலா கலாலா குறித்து உங்களுக்கு தீர்ப்பளிக்கிறான் என (நபியே!) நீங்கள் கூறுவீராக. எவரேனுமொரு மனிதன் இறந்து, அவனுக்கு குழந்தையில்லாது, ஒரு சகோதரி மட்டும் இருந்தால் அவளுக்கு அவன் விட்டுச் சென்ற சொத்தில் பாதி உண்டு. இதற்கு மாறாக ஒரு பெண் இறந்து அவளுக்குக் குழந்தையில்லாதிருந்தால் அவன் (-சகோதரன்) அவள் விட்டுச் சென்றவற்றுக்கு வாரிசு ஆகி விடுகிறான். மரணித்தவருக்கு இரு சகோதரிகள் இருப்பின் அவர் விட்டுச் சென்ற சொத்தில் மூன்றில் இரண்டு பாகங்கள் அவ்விருவருக்கும் உண்டு. அன்றியும், ஆண், பெண் இருவரும் இருப்பின் இறந்தவரின் சொத்தில் ஆணுக்கு, பெண்ணுக்குரியதைப் போல் இரண்டு பங்குண்டு. நீங்கள் வழிதவறிவிடாமலிருப்பதற்காக இவற்றை அல்லாஹு தஆலா தெளிவாக விளக்குகிறான். அல்லாஹு தஆலா ஒவ்வொன்றையும் நன்கறிபவன் ஆவான்.

(அல்குர்ஆன் 4 : 176)

தந்தைவழி சகோதரிகள் மரணித்தவரின் சொத்தில் பங்கு பெறுகின்ற நிலைகள்:

தந்தைவழி சகோதரி

1/2

2/3

1/6

அஸபா
(சகோதரனுடன்)

அஸபா
மகள் அல்லது
மகனின் மகள்
இருக்கும்போது

(i) தந்தைவழி ஒரு சகோதரி மட்டும் இருப்பின் 1/2 அரைப் பங்கைப் பெறுவாள்.

(ii) தந்தைவழி சகோதரிகள் இருவர் அல்லது அதற்கு அதிகமாக இருப்பின் அவர்கள் 2/3 மூன்றில் இரண்டு பங்குகளை பெறுவார்கள்.

(iii) உடன்பிறந்த சகோதரி ஒருத்தி மட்டும் இருப்பின் தந்தைவழி சகோதரிகள் 1/6 ஆறில் ஒன்றை பெறுவாள்.

(iv) இறந்தவருக்கு உடன்பிறந்த சகோதரிகள் இருவர் அல்லது அதற்கு அதிகமாக இருந்து, தந்தைவழி சகோதரன் இருந்தால், தந்தைவழி சகோதரிகள் அஸபாவாக மாறிவிடுவார்கள். மீதமிருப்பதை ஆணுக்கு இரு பங்கும் பெண்ணுக்கு ஒரு பங்கும் என்ற அடிப்படையில் பங்குகளை பெறுவார்கள்.

(v) இறந்தவருக்கு மகள்கள் அல்லது மகனின் மகள்கள் இருந்தால் அல்லது இருவரும் இருப்பின் அவர்களுக்குரிய பங்குகளை வழங்கிவிட்டு மீதமுள்ளதை தந்தைவழி சகோதரி அஸபாவாக பெறுவாள்.

**கவனிக்க!**

இறந்தவருக்கு மகன் அல்லது மகனின் மகன் அல்லது மகனின் மகனின் மகன் அல்லது தந்தை அல்லது உடன்பிறந்த சகோதரன் இருந்தால் இவர்கள் வாரிசாக மாட்டார்கள்.

இறந்தவருக்கு உடன்பிறந்த சகோதரிகள் இருவர் அல்லது அதற்கு அதிகமாக இருந்தால் இவர்கள் வாரிசாக மாட்டார்கள். ஆனால், இந்நிலையில் இவர்களுடன் தந்தைவழி சகோதரன் இருந்தால் இவர்கள் அவருடன் சேர்ந்து அஸபாவாக ஆகி மீதமுள்ளதை பெறுவார்கள்.

## 11. தாய்

தாய் மரணித்தவரின் சொத்தில் பங்கு பெறுகின்ற நிலைகள்:




**முதலாவது:** ஆறில் ஒரு 1/6 பங்கு

மரணித்தவரின் சொத்தில் ஆறில் ஒரு 1/6 பங்கை தாய் பெறுவதற்கு இரண்டு நிபந்தனைகளுண்டு

1. மரணித்தவருக்குப் பிள்ளை இருத்தல்
2. மரணித்தவருக்கு ஒன்றுக்கு மேற்பட்ட சகோதர சகோதரிகள் இருத்தல்

**இரண்டாவது:** 1/3 மூன்றில் ஒரு பங்கு

தாய் 1/3 மூன்றில் ஒரு பங்கை பெற்றுக் கொள்வதற்கான நிபந்தனை:

இறந்தவருக்குப் பிள்ளையோ அல்லது ஒன்றுக்கு மேற்பட்ட சகோதர சகோதரிகளோ இருக்கக்கூடாது.

**மூன்றாவது:** மரணித்தவரின் முழுச் சொத்திலும் 1/3 மூன்றில் ஒன்றைப் பெறாமல் கணவன் அல்லது மனைவிக்கு வழங்கி விட்டு மீதமுள்ளதில் 1/3 மூன்றில் ஒரு பங்கை பெற்றுக் கொள்வார்.

இஸ்லாமிய சொத்துரிமைச் சட்டத்தில் இது இரண்டு சந்தர்ப்பங்களில் மாத்திரமே இடம்பெற முடியும்.

(1) இறந்தவருக்கு வாரிசுகளாக பிள்ளைகளும் இல்லை. ஒன்றுக்கு மேற்பட்ட சகோதர, சகோதரிகளும் இல்லை. மாறாக தந்தை, கணவன், தாய் ஆகிய வாரிசுகள் மட்டும் காணப்படுகிறார்கள். அவர்களில் முதலில் கணவனுக்கு 1/2 அரைப் பங்கை வழங்கி விட்டு மீதமுள்ள

1/2 அரை பங்கில் 1/3 மூன்றில் ஒரு பங்கை தாயும், இப்போது மீதமுள்ளதைத் தந்தையும் பெறுவார்கள்.

**உதாரணம்:**

இறந்தவர் **ميـــــــــــت** **மக்ரஜ் 6**

| கணவன் | தாய் | தந்தை |
|---|---|---|
| 1/2 | | |
| 3 | | |

இங்கு கணவனுக்கு 1/2 (3 பங்குகள்) கொடுக்கப்பட்டதற்குப் பிறகு மீதமுள்ள 1/2ல் (3 பங்குகளில்) இருந்து தாய் 1/3 மூன்றில் ஒன்றைப் பெறுகிறாள். ஆகவே, கணவனுக்கு கொடுக்கப்பட்டதற்குப் பிறகு, மீதமுள்ள பங்குளை வைத்து இந்த பாகப் பிரிவினையை பின்வருமாறு அமைக்க வேண்டும்.

இறந்தவர் **ميـــــــــــت** **மக்ரஜ் 3**

| கணவன் | தாய் | தந்தை |
|---|---|---|
| | 1/3 | அஸபா |
| | 1 | 2 |

1 + 2 = 3

இந்த வகை கணக்குகளை இஸ்லாமிய சொத்துரிமைச் சட்டத்தில் “மஸ்அலா உமரிய்யா” என்றழைக்கப்படுகின்றது. ஏனெனில் உமர் رضي الله عنه அவர்கள்தான் மேற்கண்டவாறு தீர்ப்புச் சொன்னார்கள். அவர்களின் சட்டத் தீர்ப்பிற்கு ஸைத் பின் ஸாபித், அப்துல்லாஹ் பின் மஸ்ஊத், உஸ்மான் பின் அஃஃப்ஃஃபான் رضي الله عنهم ஆகியோரும் உடன்பட்டார்கள். இப்னு அப்பாஸ் رضي الله عنه அவர்களின் ஃபத்வாவை ஏற்றுக் கொள்வோமாயின் தந்தையை விட தாய் குடும்பச் சொத்தில் அதிகம் பங்கு பெறுகிறாள். இந்தக் கணக்கை இப்னு அப்பாஸ் رضي الله عنه அவர்கள் பின்வருமாறு தீர்த்து வைத்தார்கள்.

இறந்தவர் **ميت** **மக்ரஜ் 6**

| கணவன் | தாய் | தந்தை |
|---|---|---|
| 1/2 | 1/3 | அஸபா |
| 3 | 2 | 1 |

3 + 2 + 1 = 6

மேற்கூறிய கணக்கில் சமதரத்திலுள்ள தந்தையை விட தாய் சொத்தில் அதிக பங்கு பெறுவதைக் காணலாம். எனவே, இஸ்லாமிய சொத்துரிமைச் சட்டத்தின் பொது நோக்கங்களோடு வைத்து கவனிக்கும்போது சமதரத்திலுள்ள ஆணும், பெண்ணும் இருக்கும் போது ஆணைவிட பெண் அதிகமாக சொத்தில் பங்கு பெற முடியாது. எனவேதான், உமர் ؓ அவர்கள் மேற்கண்டவாறு கணவனுக்கு வழங்கிவிட்டு மீதமுள்ள 1/2 அரைப் பகுதியில் 1/3 மூன்றில் ஒன்றை தாய் பெற்றுக் கொள்வாள் என்று தீர்ப்பளித்தார்கள். இஸ்லாமிய சொத்துரிமைச் சட்டத்தில் உமர் ؓ அவர்களின் தீர்ப்பே மிகவும் பலமான கருத்தாக கருதப்படுகிறது.

## 12. பாட்டி

இறந்தவரின் தாயின் தாய், தந்தையின் தாய் ஆகிய இரு சாராரும் இதில் அடங்குகின்றார்கள்.

**ஆதாரம்:**

عَنْ قَبِيصَةَ بْنِ ذُؤَيْبٍ قَالَ جَاءَتِ الجَدَّةُ إِلَى أَبِي بَكْرٍ تَسْأَلُهُ مِيرَاثَهَا قَالَ فَقَالَ لَهَا مَا لَكِ فِي كِتَابِ اللّٰهِ شَيْءٌ وَمَا لَكِ فِي سُنَّةِ رَسُولِ اللّٰهِ صَلَّى اللّٰهُ عَلَيْهِ وَسَلَّمَ شَيْءٌ فَارْجِعِي حَتّٰى أَسْأَلَ النَّاسَ فَسَأَلَ النَّاسَ فَقَالَ الْمُغِيرَةُ بْنُ شُعْبَةَ حَضَرْتُ رَسُولَ اللّٰهِ صَلَّى اللّٰهُ عَلَيْهِ وَسَلَّمَ فَأَعْطَاهَا السُّدُسَ فَقَالَ أَبُو بَكْرٍ هَلْ مَعَكَ غَيْرُكَ فَقَامَ مُحَمَّدُ بْنُ مَسْلَمَةَ الأَنْصَارِيُّ فَقَالَ مِثْلَ مَا قَالَ الْمُغِيرَةُ بْنُ شُعْبَةَ فَأَنْفَذَهُ لَهَا أَبُو بَكْرٍ.

ஜத்தா -பாட்டி ஒருவர் அபூபக்ர் ؓ அவர்களிடம் தன்னுடைய மீராஸை (குடும்ப சொத்தை) கேட்டு வந்தார்கள். அதற்கு, அல்லாஹ்வுடைய வேதத்தின்படியும் உமக்கு ஏதும் (பங்கு) இல்லை. இன்னும் ரஸூலுல்லாஹ் ﷺ அவர்களுடைய சுன்னாவின்படியும் உமக்கு ஏதும் (பங்கு) இல்லை. ஆகவே, நீ திரும்பிச் செல். நான் மக்களிடம் விசாரிக்கின்ற வரை நீ பொறுமையாக இரு. அபூபக்ர் ؓ அவர்கள் இது குறித்து மக்களிடம் விசாரித்தார்கள். அப்போது, முகீரா இப்னு ஷுஅபா ؓ கூறினார்கள்: நான் (இதுபோன்ற ஒரு பிரச்சினை ஏற்பட்டபோது) ரஸூலுல்லாஹ் ﷺ அவர்களிடம் ஆஜராகி இருந்தேன். ரஸூலுல்லாஹ் ﷺ அவர்கள் அவளுக்கு (பாட்டிக்கு) 1/6 ஆறில் ஒன்றை பங்காக கொடுத்தார்கள்.[16]

இதேபோன்ற ஒரு நிகழ்வில் அபூபக்ர் ؓ அவர்கள், தந்தையின் தாய்க்கும் இதே தீர்ப்பை வழங்கினார்கள்.

---

16. கபீஸா இப்னு துவைப் ؓ, நூல்: சுனனுத் திர்மிதி 2101

பாட்டி - தந்தையின் தாய் மற்றும் தாயின் தாய்க்குரிய பங்குகளின் நிலை




சொத்தில் பாட்டிக்குரிய பங்கு 1/6 ஆறில் ஒரு பங்கு ஆகும் தாயின் தாயும், தந்தையின் தாயுமிருப்பின் இருவரும் 1/6 ஆறில் ஒன்றில் சரிசமமாகப் பங்கு பெறுவார்கள்.

பின்வருவோர் இருப்பின் தாயின் தாய்க்கோ, அல்லது தந்தையின் தாய்க்கோ சொத்தில் பங்கு கிடைக்காது.

1. இறந்தவரின் தாய் இருப்பின் தாயின் தாய்க்கு பங்கு கிடைக்காது.

2. இறந்தவரின் தந்தை இருப்பின் தந்தையின் தாய்க்கு பங்கு கிடைக்காது. ஆனால் தாயின் தாய்க்கு கிடைக்கும்.

----------------------

# பிரிவு 2

## اَلْعَصَبَاتُ

## அஸபாத்

அஸபாத் **عصبات** என்பது **عصبة** அஸபாவின் பன்மையாகும். அல்குர்ஆன், அஸ்ஸுன்னா பங்குகளை வரையறுத்துக் கூறாத, இறந்தவருக்கு நெருக்கமான ஆண் வாரிசுகளை அஸபா என்று குறிப்பிடப்படுகிறது.

அஸ்ஹாபுல் ஃபுரூழ் பிரிவை சேர்ந்தவர்கள் பங்குகளை பெற்றுக் கொண்டதன் பின் மீதமுள்ளதை பெறுபவர்களாக அஸபாக்கள் காணப்படுகிறார்கள்.

இப்பகுதியில் அஸபாவாக சொத்தில் பங்கு பெறுவதற்கான ஆதாரங்கள் மற்றும் அஸபாவின் வகைகளைப் பார்ப்போம்.

**அஸபாவாக சொத்தில் பங்கு பெறுவதற்கான ஆதாரங்கள்:**

1. மரணித்தவரின் பிள்ளைகள் விஷயத்தில் அல்குர்ஆன் பின்வருமாறு கூறுகின்றது:

يُوصِيكُمُ اللّهُ فِي أَوْلاَدِكُمْ لِلذَّكَرِ مِثْلُ حَظِّ الأُنْثَيَيْنِ

“அல்லாஹு தஆலா உங்களது பிள்ளைகள் விஷயத்தில் இரு பெண்ணின் பங்கைப் போன்று ஓர் ஆணுக்குண்டு என்று கட்டளையிடுகின்றான்” (அல்குர்ஆன் 4 : 11)

இங்கு அல்குர்ஆன் மகனும் மகளும் இருக்கும்போது

அவர்களுக்குரிய பங்கை வரையறுத்துக் கூறவில்லை. தாய், தந்தையினரின் பங்குகளை வரையறுத்து கூறிவிட்டு அவர்கள் பங்குகளை பெற்றுக் கொண்டதன் பிறகு மீதமுள்ளவற்றில் மகனும், மகளும் அஸபாவாக பங்கு பெறுகிறார்கள். இரு பெண் பிள்ளைகளுக்கு சமமான பங்கு ஓர் ஆண்பிள்ளைக்கு உண்டு என்று குர்ஆன் குறிப்பிடுகின்றது.

2. ஸூரதுந் நிஸாவின் 176வது வசனம் மரணித்தவரின் சகோதரிகளுக்குரிய பங்குகளை கூறி வந்து இறந்தவருக்கு சகோதரர்கள் இன்னும் சகோதரிகள் ஆகிய இருவரும் இருந்தால், ஏற்கனவே கூறியதுபோல இரு சகோதரிகளுக்கு சமமான பங்கை ஒரு சகோதரர் பெற்றுக்கொள்வதாக குர்ஆன் குறிப்பிடுகின்றது.

وَإِنْ كَانُوا إِخْوَةً رِجَالًا وَنِسَاءً فَلِلذَّكَرِ مِثْلُ حَظِّ الْأُنْثَيَيْنِ

“அவர்கள் சகோதரர்களாக, சகோதரிகளாக இருந்தால் இரு பெண்களுக்குரிய பங்கைப் போன்று ஓர் ஆண் பெறுவார்.”

(அல்குர்ஆன் 4 : 176)

எனவே, இங்கும் பங்கு வரையறுக்கப்பட்டு சொல்லப்படவில்லை. மாறாக அஸ்ஹாபுல் ஃபுரூழ் பெற்றதன் பிறகு மீதமுள்ளதை சகோதர சகோதரிகள் பெற்றுக் கொள்கிறார்கள்.

இந்த வகையில் மரணித்தவருக்கு மகள் மட்டும் இருப்பின் ஃபர்ழாக வரையறுக்கப்பட்ட ஒரு பங்கை அவள் பெற்றுக் கொள்வாள். அதேவேளை மகனும் இருப்பின் இருவரும் சேர்ந்து அல்குர்ஆன் குறிப்பிட்ட விகிதங்களில் மீதமுள்ளதைப் பெற்றுக் கொள்வார்கள்.

3. நபி ﷺ அவர்கள் கூறினார்கள்:

عَنِ ابْنِ عَبَّاسٍ رضي الله عنه عَنِ النَّبِيِّ ﷺ قَالَ أَلْحِقُوا الفَرَائِضَ بِأَهْلِهَا فَمَا بَقِيَ فَهُوَ لِأَوْلَى رَجُلٍ ذَكَرٍ

"ஃபர்ழுகளை (-குறிப்பிடப்பட்ட பங்குகளை) அதற்குரியவர்களிடம் சேர்த்து விடுங்கள். எது மீதமாகிவிட்டதோ அது மிக நெருக்கமான (முன்னுரிமைக்குத் தகுதி பெற்ற) ஆணுக்கே உரியதாகும்."[17]

**அஸபாவின் வகைகள் மூன்று:**




1. **عصبة بنفسه** அஸபா பி நஃப்ஸிஹி **-**தானே அஸபாவாக இருப்பவர்.
2. **عصبة بغيره** அஸபா பி கைரிஹி -மற்றொருவரினால் அஸபாவாக மாறுபவர்.
3. **عصبة مع غيره** அஸபா மஅ கைரிஹி -மற்றொருவருடன் சேர்ந்து அஸபாவாக மாறுபவர்.

17. அறிவிப்பாளர்: இப்னு அப்பாஸ் ﵄, நூல்: ஸஹீஹுல் புகாரி.

## 1. عصبة بنفسه அஸபா பி நஃப்ஸிஹி

இறந்தவருக்கு மிக நெருக்கமான ஆண் சந்ததியினரை இது குறிக்கின்றது. பெண் வழித் தொடர்பின்றி இறந்தவருடன் தொடர்புபடும் ஒவ்வொரு ஆணையும் உள்ளடக்குகின்றது. மரணித்தவருடன் தொடர்புபடும் பின்வரும் ஆண் உறவினர் இப்பிரிவில் அடங்குவர்:




1. மகன், மகனின் மகன், மகனின் மகனின் மகன்...
2. தந்தை, தந்தையின் தந்தை, தந்தையின் தந்தையின் தந்தை...
3. சகோதரன், சகோதரனின் மகன், சகோதரனின் மகனின் மகன்...
4. தந்தையின் சகோதரர், தந்தையின் சகோதரனின் மகன், தந்தையின் சகோதரனின் மகனின் மகன்...

மேலே குறிப்பிட்ட அனைவரும் அஸபா பி நஃப்ஸிஹி பிரிவில் உள்ளடங்கியிருந்தாலும் அனைவரும் ஒரே நேரத்தில் மரணித்தவரின் சொத்துக்கு அஸபாவாக இருக்க மாட்டார்கள். மாறாக நெருக்கத்தின் அடிப்படையிலே அஸபாவாக இருப்பார்கள்.

மேலே குறிப்பிட்ட ஒழுங்கில் நெருக்கம் என்பதை கவனத்தில் கொள்ள வேண்டும். மரணித்தவரின் மகன் இருக்கும்போது மகனின் மகன் அஸபாவாக மாறமாட்டார். எனவே, முன்னாலுள்ளவர் இருக்கும் போது பின்னால் இருப்பவருக்கு அஸபாவாக பங்கு செல்லாது.

இதனைப் பின்வரும் உதாரணம் விளக்குகிறது:

| இறந்தவர் ميت | | | மக்ரஜ் 12 |
|---|---|---|---|
| கணவன் | தாய் | மகன் | மகனின் மகன் |
| 1/4 | 1/6 | அஸபா | X |
| 3 | 2 | 7 | 0 |

3 + 2 + 7 = 12

மேலுள்ள உதாரணத்தில் மகன், மகனின் மகன் ஆகிய இரண்டு அஸபாக்கள் காணப்படுகிறார்கள். எனினும் முதன்மை ஒழுங்கில் மகன் அஸபாவாக இருப்பதால் மகனின் மகனுக்கு பங்கு செல்லாதிருப்பதை கவனிக்க முடியும்.

பங்குகளை இவ்வாறு பிரிப்பது சம்பந்தப்பட்ட கணக்குகளை பாடம் 8ல் பார்க்க இருக்கிறோம்.

## 2. عصبة بغيره அஸபா பி கைரிஹி

ஓர் ஆணின் மூலம் அஸபாவாக மாறும் பெண் உறவினரை இது குறிக்கிறது. அஸபா பி கைரிஹி என்ற இப்பிரிவில் நான்கு பெண்கள் மாத்திரமே அஸபாவாக கருதப்படுவார்கள் என்பதை கவனத்தில் கொள்ள வேண்டும்.

அதாவது, 1/2 அரை அல்லது 2/3 மூன்றில் இரண்டு ஆகிய பங்குகளைப் பெறக்கூடிய பெண்கள் மட்டும் தங்கள் சொந்த சகோதரர்கள் மூலமாக அஸபாவாக மாறுகிறார்கள்.

பங்குகள் குறிப்பிடப்படாத பெண்கள் தங்கள் சகோதரர்கள் மூலமாக அஸபாவாக மாறமாட்டார்கள்.

உதாரணமாக தந்தையின் சகோதரர் மூலமாக தந்தையின் சகோதரி அஸபாவாக மாறமாட்டாள். தந்தையின் சகோதரர் இருக்கும்போது மீதம் உண்டான சொத்துகள் அனைத்தையும் தந்தையின் சகோதரர் மட்டுமே பெற்றுக் கொள்வார். தந்தையின் சகோதரிக்கு எந்த பங்கும் கிடைக்காது. காரணம் தந்தையின் சகோதரிக்கு பங்குகள் ஏதும் குறிப்பிடப்படவில்லை.




1. மகள்

2. மகனின் மகள்

3. உடன்பிறந்த சகோதரி (மகனின் மகள் இல்லாதபோது)

4. தந்தைவழி சகோதரி (உடன்பிறந்த சகோதரி இல்லாதபோது)

இப்பிரிவில் காணப்படுகின்ற பெண்கள் தங்கள் உடன்பிறந்த சொந்த சகோதரர்கள் மூலமாக அஸபாவாக மாறுகிறார்கள்.

மேற்கூறப்பட்டதிலிருந்து பெண்கள் அஸபாவாக மாறுவதற்கு இரண்டு நிபந்தனைகள் இருப்பதை அறிய வருகிறோம்.

1. அந்த பெண்ணுக்கு பங்குகள் குறிப்பிடப்பட்டிருக்க வேண்டும்.

2. அந்த பெண்ணுடன் அதே தரத்தில் உள்ள ஆண் (-சகோதரன்) இருக்க வேண்டும்.

ஆகவே, சகோதரனின் மகனின் மூலம் சகோதரனின் மகள் அஸபாவாக மாறமாட்டாள். ஏனெனில், அடிப்படையில் சகோதரனின் மகளுக்கு ஃபர்ழான (-குறிப்பிடப்பட்ட, கட்டாயமான) பங்குகள் எதுவுமில்லை.

மேலும், சொந்த சகோதரனின் மூலமே சகோதரி அஸபாவாக மாறுகின்றாள். மாறாக, தந்தைவழி சகோதரரின் மூலம் உடன்பிறந்த சகோதரி அஸபாவாக மாறமாட்டாள். ஏனெனில், ஒரே வகையான, சமதரமான உறவு இங்கு காணப்படவில்லை.

பின்வரும் உதாரணங்கள் மேற்குறிப்பிட்ட விஷயங்களைத் தெளிவுபடுத்துகின்றன.

மரணித்தவருக்கு கணவன், மகள், மகன் ஆகிய வாரிசுகள் காணப்படுமாயின் அவர்களுக்குப் பின்வரும் ஒழுங்கில் குடும்பச் சொத்து பங்கிடப்படும்:

இறந்தவர் ميت **மக்ரஜ் 4**

| கணவன் | மகன் | மகள் |
|---|---|---|
| 1/4 | அஸபா | |
| 1 | 3 | |

1 + 3 = 4

இங்கு எஞ்சுகின்ற 3/4 பங்குகளை மகன், மகள் ஆகியோர் அவர்களது விகிதங்களுக்கேற்ப பெற்றுக் கொள்வார்கள். மகன் இருப்பதால் மகள் அஸபாவாக மாறுவதைக் காண்கிறோம். இதனையே அஸபா பில் கைர் என்கிறோம்.

## 3. عصبة مع غيره அஸபா மஅ கைரிஹி

ஒரு பெண் மற்றொரு பெண்ணுடன் இருப்பதால் அஸபாவாக மாறுவதை இது குறிக்கிறது.

அஸபா மஅ கைரிஹி

| உடன்பிறந்த சகோதரி | தந்தைவழி சகோதரி |
|---|---|

இது குறிப்பாக மரணித்தவரின் உடன்பிறந்த சகோதரி அல்லது மரணித்தவரின் தந்தைவழி சகோதரிகளோடு சம்பந்தப்பட்டதாகும். அதாவது, மரணித்தவருக்கு ஆண் வாரிசுகள் யாருமில்லாமல் மகள் மற்றும் உடன்பிறந்த சகோதரிகள் இருப்பின் மகளுக்கு உரிய பங்கை பெற்றதன் பிறகு மீதமுள்ளதை அஸபாவாக உடன்பிறந்த சகோதரி பெறுவாள். உடன்பிறந்த சகோதரி இல்லையென்றால் மீதம் உள்ளதை தந்தைவழி சகோதரி அஸபாவாக பெறுவாள். இதனை பின்வரும் உதாரணம் தெளிவுப்படுத்துகிறது:

இறந்தவர் مـــــــيـــــــت **மக்ரஜ் 4**

| கணவன் | மகள் | சகோதரி |
|---|---|---|
| 1/4 | 1/2 | அஸபா |
| 1 | 2 | 1 |

1 + 2 + 1 = 4

இங்கு மீதமுள்ள ஒரு பங்கை சகோதரி அஸபாவாகப் பெறுவதைக் காணலாம்.

**கவனிக்க!**

அல்குர்ஆனும் அஸ்ஸுன்னாவும் வரையறுத்துக் குறிப்பிட்டுள்ள அஸ்ஹாபுல் ஃபுரூழ் -வரையறுக்கப்பட்ட பங்குகளை உடையவர்களையும், அவர்கள் ஒவ்வொருவரும் பெறும் பங்கினையும் ஆழமாக நோக்கும்போது பின்வரும் சட்டங்கள் தெளிவாகின்றன.

(i) அஸ்ஹாபுல் ஃபுரூழ் -வரையறுக்கப்பட்ட பங்குகளை உடையவர்களில் சிலர் ஃபர்ழை மட்டும் பெற்றுக் கொள்வார்கள். ஒருபோதும் அஸபாவாக ஆக மாட்டார்கள்.
உதாரணமாக: கணவன், மனைவி, தாய், பாட்டி, தாய்வழி சகோதர, சகோதரிகள்.

(ii) ஒரே நேரத்தில் ஃபர்ழை -வரையறுக்கப்பட்ட பங்கை பெறுபவராகவும், அஸபா பி நஃப்ஸிஹி ஆகவும் இருப்பார்கள்.

உதாரணமாக: தந்தை, தந்தையின் தந்தை

(iii) அஸ்ஹாபுல் ஃபுரூழிலும், அஸபா மஅ கைரிஹியிலும் இருப்பார்கள்.

உதாரணமாக: சகோதரி, தந்தைவழி சகோதரி

# பிரிவு 3

ذَوُو الْأَرْحَامِ

## 3. தவுல் அர்ஹாம்

அஸ்ஹாபுல் ஃபுரூழ் மற்றும் அஸபாவுக்கு அடுத்த நிலையிலுள்ள குடும்ப உறவினர்களையே இது குறிக்கின்றது. இவர்கள் சொத்துக்கு மூன்றாவது நிலையில் வாரிசுகளாக பங்கு சேருவார்கள்.

குடும்பச் சொத்துக்கு அஸ்ஹாபுல் ஃபுரூழ் மற்றும் அஸபா- அதாவது மீதமுள்ளதைப் பெறுவோர் இல்லாவிட்டால் இறுதியாக தவுல் அர்ஹாம் என அழைக்கப்படும் குடும்ப உறவினர்களுக்கு சொத்தில் உரிமையுண்டு.

இவர்களின் விளக்கம் பின்வருமாறு:

இவர்கள் நான்கு வகைப்படுவார்கள்:

தவுல் அர்ஹாம்

| 1 | 2 | 3 | 4 |
|---|---|---|---|
| மகளின் ஆண், பெண் பிள்ளைகள். மகனின் மகளின் ஆண், பெண் பிள்ளைகள். | தாயின் தந்தை. தாயின் தந்தையின் தந்தை. | சகோதரியின் ஆண், பெண் பிள்ளைகள். சகோதரர்களின் பெண் பிள்ளைகள். தாய்வழி சகோதரர்களின் ஆண் பிள்ளைகள். | தந்தையின் சகோதரிகள். தந்தையின் தாய்வழி சகோதரர்கள். தாயின் சகோதரர்கள். தாயின் சகோதரிகள். |

**1. முதல் வகையினர்:** இறந்தவரோடு தொடர்புடையவர்கள். இவர்கள் மகளின் ஆண், பெண் பிள்ளைகள், மகனின் மகளின் ஆண், பெண் பிள்ளைகள் ஆவார்கள்.

**2. இரண்டாம் வகையினர்:** இறந்தவர் இவரோடு தொடர்புடையவராக இருப்பார். இவர்கள் தாயின் தந்தை, தாயின் தந்தையின் தந்தை ஆவார்கள்.

**3. மூன்றாம் வகையினர்:** இறந்தவரின் தாய் தந்தையோடு தொடர்புடையவர்கள். இவர்கள் சகோதரியின் ஆண், பெண் பிள்ளைகள், சகோதரர்களின் பெண் பிள்ளைகள், தாய்வழி சகோதரர்களின் ஆண் பிள்ளைகள் ஆவார்கள்.

**4. நான்காம் வகையினர்:** இறந்தவரின் தந்தைவழி அல்லது தாய்வழி பாட்டன் அல்லது பாட்டிகளோடு தொடர்புடையவர்கள். இவர்கள் தந்தையின் சகோதரிகள், தந்தையின் தாய்வழி சகோதரர்கள், தாயின் சகோதரர்கள், தாயின் சகோதரிகள் ஆவார்கள்.

----------------------

# اَلْحَجْبُ

# ஹஜ்ப் - தடுத்தல்

குடும்பச் சொத்துக்களை பங்கிடும்போது சிலர் இருப்பின் சிலருக்கு சொத்து கிடைக்காது. அல்லது, சொத்தில் அவர்கள் குறைவாக பங்கு பெறுவார்கள். இதை الحجب "அல்- ஹஜ்ப்" என்று சொத்துரிமை வழக்கில் அழைக்கப்படும்.

## ஹஜ்ப் இரண்டு வகைப்படும்:

**முதல் வகை:**

**حجب الحرمان** ஹஜ்புல் ஹிர்மான்: அதாவது, முற்றிலும் இழக்க வைக்கும் அளவிற்கு தடுத்தல் அல்லது الحجب الكامل அல்ஹஜ்புல் காமில்: முழுமையான தடுத்தல் என்று இதற்கு பெயர் கூறப்படும்.

இந்த ஹஜ்ப் ஹிர்மானில் வாரிசுகள் இரு பிரிவுகளாக இருக்கின்றார்கள்.

முதல் பிரிவு: எக்காரணம் கொண்டும் சொத்தில் பங்கு பெறாமல் தடுக்கப்பட மாட்டார்கள். அவர்கள் அஸ்ஹாபுல் ஃபுரூழ் -வரையறுக்கப்பட்ட பங்குகளை பெறுபவர்களில் பின்வருகின்ற ஆறு நபர்கள் ஆவார்கள்.

- மகன்
- மகள்

- தந்தை
- தாய்
- கணவன்
- மனைவி

அதேவேளை இவர்கள் “ஹஜ்ப் நுக்ஸான்” சொத்தில் குறைவாக பங்கு பெறுதல் என்ற நிலையை அடைய முடியும். அதாவது அவர்கள் பெற்றுக் கொள்ளும் பங்கு குறைய முடியும்.

மேற்குறிப்பிட்ட ஆறு நபர்களைத் தவிர்த்து அஸ்ஹாபுல் ஃபுரூழ் -வரையறுக்கப்பட்ட பங்குகளை பெறுபவர்களில் மற்றவர்கள் சொத்து வழங்கப்படாமல் முழுமையாகத் தடுக்கப்படலாம்.

அதாவது, அவர்கள் சில நேரம் சொத்துக்கு வாரிசுகளாக இருப்பார்கள். சில நேரம் சொத்து வழங்கப்படாமல் முழுமையாக தடுக்கப்படுவார்கள். இவ்வாறு முழுமையாகத் தடுக்கப்படுதல் இரண்டு அடிப்படைகள் மீது அமைந்திருக்கிறது.

முதல் அடிப்படை: ஒரு வாரிசின் மூலமாக இறந்தவருக்கு உறவினராக ஆகக்கூடியவர் அந்த வாரிசு இருக்கும்போது இவர் வாரிசாக மாட்டார். உதாரணமாக, மகன் இருக்கும்போது மகனுடைய மகள் வாரிசாக மாட்டாள். தந்தை இருக்கும்போது தந்தையின் தந்தை வாரிசாக மாட்டார். தாய் இருக்கும்போது தாயின் தாய் வாரிசாக மாட்டார். ஆனால், தாய்வழி சகோதர, சகோதரிகள் மட்டும் தாய் இருக்கும்போது வாரிசாக ஆவார்கள். ஏனெனில், தாய் சொத்துகள் அனைத்திற்கும் உரியவளாக இல்லை.

இரண்டாம் அடிப்படை: இறந்தவருக்கு மிக நெருக்கமானவர் மற்றவரை தடுத்துவிடுவார். பிறகு, அதற்கடுத்து இறந்தவருக்கு மிக நெருக்கமானவர் மற்றவரை தடுத்துவிடுவார். உதாரணமாக, தாய் இருக்கும்போது பாட்டிகள். இரண்டு மகள்கள் இருக்கும்போது மகனின் மகள்கள். உடன்பிறந்த சகோதரிகள் இருவர் இருக்கும்போது தந்தை வழி சகோதரிகள்.

மேற்கூறப்பட்டவர்களில் இறந்தவருக்கு மிக நெருக்கமானவர் இருக்கும்போது மற்றவர்களை அவர் தடுத்துவிடுகின்றார்.

**இரண்டாவது வகை:**

**حجب النقصان** ஹஜ்புன் நுக்ஸான்: அதாவது, பங்குகளில் குறைவை ஏற்படுத்தும் அளவிற்கு தடுத்தல், அல்லது **الحجب الناقص** அல்ஹஜ்புன் நாகிஸ்: குறைவான தடுத்தல் என்று இதற்கு பெயர் கூறப்படும்.

சில வாரிசுகள் காணப்படுவார்களாயின் சிலருக்கு சொத்து குறைவாகச் செல்வதை இது குறிக்கும்.

ஹஜ்ப் நுக்ஸான் உடைய பிரிவில் உள்ள வாரிசுகள் பின்வருமாறு:

- கணவன்
- மனைவி
- தாய்
- மகனின் மகள்
- தந்தைவழி சகோதரி

**கணவன்:** இறந்தவருக்கு பிள்ளைகள் இல்லையென்றால், கணவன் 1/2 அரை பங்கையும் பிள்ளைகள் இருந்தால் 1/4 கால் பங்கையும் பெறுகிறார்.

**மனைவி:** இறந்தவருக்கு பிள்ளைகள் அல்லது சகோதரர்கள் இல்லையென்றால், மனைவி 1/4 கால் பங்கையும் பிள்ளைகள் இருந்தால் 1/8 எட்டில் ஒரு பங்கையும் பெறுகிறார்.

**தாய்:** இறந்தவருக்கு பிள்ளைகள் அல்லது இரண்டு சகோதர சகோதரிகள் இல்லையென்றால், தாய் 1/3 மூன்றில் ஒரு பங்கையும் பிள்ளைகள் இருந்தால் அல்லது இரண்டு சகோதர சகோதரிகள் இருந்தால் 1/6 ஆறில் ஒரு பங்கையும் பெறுகிறார்.

**மகனின் மகள்:** இறந்தவருக்கு ஒரு மகள் இருந்தால் 1/6 ஆறில் ஒரு பங்கைப் பெறுகிறாள். இரண்டு மகள்கள் இருந்தால் இவர்கள் வாரிசாக மாட்டார்கள். ஆனால், மகனின் மகன் அல்லது மகனின்

மகனின் மகன் இருந்தால் அவர்களுடன் சேர்ந்து அஸபாவாக ஆகிவிடுவார்கள். மகன் இருந்தால் இவர்கள் சொத்திலிருந்து முற்றிலும் தடுக்கப்பட்டு விடுவார்கள்.

**தந்தைவழி சகோதரி:** இவள் ஒருத்தியாக இருந்தால் 1/2 அரைப் பங்கையும் இருவர் இருந்தால் 2/3 மூன்றில் இரண்டு பங்குகளையும் பெறுகிறார்கள். ஆனால், இறந்தவருக்கு உடன்பிறந்த சகோதரி ஒருவர் இருந்தால் இவர்கள் 1/6 ஆறில் ஒரு பங்கை மட்டும் பெறுகிறார்கள். உடன்பிறந்த சகோதரிகள் இருவர் இருந்தால் இவர்கள் சொத்தில் இருந்து முழுமையாக தடுக்கப்பட்டு விடுவார்கள். ஆனால், தந்தைவழி சகோதரர் இருந்தால் அவருடன் சேர்ந்து இவர்கள் அஸபாவாக ஆகிவிடுவார்கள். இறந்தவருக்கு மகள்கள் அல்லது மகனின் மகள்கள் இருந்தால் வாரிசுகளுக்கு கொடுக்கப்பட்டதற்குப் பிறகு மீதமுள்ளதை அஸபாவாக இவர்கள் பெற்றுக் கொள்கிறார்கள்.

அதே நேரத்தில் மகன் அல்லது மகனின் மகன் அல்லது தந்தை இருந்தால் இவர்கள் சொத்தில் இருந்து முழுமையாக தடுக்கப்பட்டு விடுவார்கள்.

**உதாரணம்:**

இறந்தவர் مـــــيـــــت 12

| கணவன் | தாய் | தந்தை | மகன் | சகோதரி |
|---|---|---|---|---|
| 1/4 | 1/6 | 1/6 | அஸபா | X |
| 3 | 2 | 2 | 5 | 0 |

3 + 2 + 2 + 5 = 12

இங்கு மகன் அஸபாவாக இருப்பதனால் சகோதரி சொத்து வழங்கப்படாமல் முழுமையாக தடுக்கப்படுவதை கவனிக்கலாம்.

----------------------

# செயல்முறை உதாரணங்கள்

மேற்கூறப்பட்ட வாரிசுகள் அஸ்ஹாபுல் ஃபுரூழ் -வரையறுக்கப்பட்ட பங்குகளை உடையவர்கள், அஸபா -மீதமுள்ளதைப் பெறுபவர்கள் ஆகியோரின் செயல்முறை கணக்குகளை பின்வரும் பக்கங்களில் பார்ப்போம்.

**உதாரணம்: 1**

இறந்தவர் **ميت** **மக்ரஜ் 4**

| கணவன் | மகள் | மகன் |
|---|---|---|
| 1/4 | அஸபா | |
| 1 | 3 | |

மீதமுள்ள மூன்று பங்குகளில் இரண்டை ஆணும் ஒரு பங்கைப் பெண்ணும் பெறுவார்கள்.

**உதாரணம்: 2**

இறந்தவர் **ميت** **மக்ரஜ் 24**

| மனைவி | மகள்கள் 2 | தந்தை |
|---|---|---|
| 1/8 | 2/3 | 1/6 + அஸபா |
| 3 | 16 | 4+1 = 5 |

3 + 16 + 5 = 24

**உதாரணம்: 3**

இறந்தவர் **ميت** **மக்ரஜ் 12**

| மகள் | கணவன் | தந்தை |
|---|---|---|
| 1/2 | 1/4 | 1/6 + அஸபா |
| 6 | 3 | 2 + 1 = 3 |

6 + 3 + 3 = 12

**உதாரணம்: 4**

இறந்தவர் ميت **மக்ரஜ் 12**

| தந்தை | கணவன் | மகன் |
|---|---|---|
| 1/6 | 1/4 | அஸபா |
| 2 | 3 | 7 |

2 + 3 + 7 = 12

உதாரணம் 3ல் தந்தை தன்னுடைய ஃபர்ழை பெறுவதுடன் அஸபாவாக மீதமுள்ளதைப் பெறுகிறார். உதாரணம்: 4ல் தந்தை இருந்தும் மகன் மட்டும் மீதமுள்ளதைப் பெறுகிறார். ஏனெனில் மகன் இல்லாத சமயத்தில் மாத்திரமே தந்தை அஸபாவாக வரமுடியும்.

**உதாரணம்: 5**

இறந்தவர் ميت **மக்ரஜ் 4**

| மனைவி | தந்தை |
|---|---|
| 1/4 | அஸபா |
| 1 | 3 |

1 + 3 = 4

உதாரணம் 5ல் தந்தை ஃபர்ழாக எதனையும் பெறுவதில்லை. மாறாக மனைவி நான்கில் ஒரு 1/4 பங்கை பெற்றதற்குப் பிறகு அஸபாவாக மீதமுள்ள அனைத்தையும் பெறுகிறார். ஏனெனில், மரணித்தவருக்கு பிள்ளைகள் இல்லாவிட்டால் தந்தை ஃபர்ழாக எதனையும் பெறமாட்டார். மாறாக அஸபாவாக மீதமுள்ளதைப் பெறுவார்.

**உதாரணம்: 6**

இறந்தவர் **ميت** **மக்ரஜ் 12**

| கணவன் | தந்தை | 2 மகன்கள் | 2 மகள்கள் |
|---|---|---|---|
| 1/4 | 1/6 | அஸபா | |
| 3 | 2 | 7 | |

3 + 2 + 7 = 12

உதாரணம் 6ல் 7 பங்குகள் மீதமிருக்கின்றன. அவற்றில் ஆண் பிள்ளைகளுக்கும் பெண் பிள்ளைகளுக்கும் பங்குண்டு. இரண்டு பெண் பிள்ளைகள் பெறுவதைப் போன்ற பங்கை ஓர் ஆண் பெற்றுக் கொள்கிறான்.[18]

**உதாரணம்: 7**

இறந்தவர் **ميت** **மக்ரஜ் 6**

| தந்தை | தந்தையின் தந்தை | தாய் | கணவன் |
|---|---|---|---|
| 1/6+அஸபா | x | 1/6 | 1/2 |
| 1 + 1 = 2 | 0 | 1 | 3 |

2 + 1 + 3 = 6

தந்தை இருக்கும்போது தந்தையின் தந்தைக்கு பங்கு கிடைக்காது.

---

18. மீதமுள்ள 7 பங்குகளை 2 ஆண் பிள்ளைகளுக்கும் 2 பெண் பிள்ளைகளுக்கும் எவ்வாறு சரியாக பங்கு வைப்பது என்பதைப் பற்றி தஸ்ஹீஹ் உடைய பாடத்தில் அறிய இருக்கிறோம்.

ஆண் பிள்ளைகளும் பெண் பிள்ளைகளும் இருந்தால் இரண்டு பெண் பிள்ளைகள் பெறும் அளவை ஓர் ஆண் பெறவேண்டும் என்பது இஸ்லாமிய சொத்துரிமையின் அடிப்படைச் சட்டமாகும்.

அல்லாஹ் கூறுகிறான்:

لِلذَّكَرِ مِثْلُ حَظِّ الْأُنْثَيَيْنِ

ஓர் ஆணுக்கு இரு பெண்களுக்குரியது போன்ற பாகம் உண்டு. (அல்குர்ஆன் 4 : 11)

**உதாரணம்: 8**

இறந்தவர் مـــــيـــــت **மக்ரஜ் 12**

| மனைவி | தந்தையின் தந்தை | ஒரு சகோதரி |
|---|---|---|
| 1/4 | 1/6 + அஸபா | 1/2 |
| 3 | 2 + 1 = 3 | 6 |

3 + 3 + 6 = 12

**உதாரணம்: 9**

இறந்தவர் مـــــيـــــت **மக்ரஜ் 12**

| மனைவி | தந்தை | ஒரு சகோதரி |
|---|---|---|
| 1/4 | அஸபா | X |
| 3 | 9 | 0 |

3 + 9 = 12

உதாரணம் 8ல் சகோதரி 1/2 அரைப் பங்கைப் ஃபர்ழாகப் பெறுகிறாள். ஆனால், உதாரணம் 9ல் எந்தப் பங்கையும் பெறாமல் தடுக்கப்படுகிறாள். ஏனெனில், தந்தையின் காரணமாக சகோதரி சொத்தில் பங்கு பெறுவதில் இருந்து தடுக்கப்படுவாள். தந்தையின் தந்தை (பாட்டன்) சகோதரிகளுக்கு சொத்துச் செல்ல தடையாக இருக்கமாட்டார்.

**உதாரணம்: 10**

இறந்தவர் مـــــيـــــت **மக்ரஜ் 6**

| கணவன் | சகோதரன் | தாய்வழி சகோதரன் |
|---|---|---|
| 1/2 | அஸபா | 1/6 |
| 3 | 2 | 1 |

3 + 2 + 1 = 6

**உதாரணம்: 11**

இறந்தவர் ميت **மக்ரஜ் 6**

| கணவன் | சகோதரன் | தாய்வழி சகோதரி |
|---|---|---|
| 1/2 | அஸபா | 1/6 |
| 3 | 2 | 1 |

3 + 2 + 1 = 6

உதாரணம் 10 மற்றும் 11ல் தாய்வழி சகோதரனும், சகோதரியும் 1/6 ஆறில் ஒரு பங்கைப் பெறுகிறார்கள்.

**உதாரணம்: 12**

இறந்தவர் ميت **மக்ரஜ் 12**

| மனைவி | சகோதரன் | தாய்வழி சகோதரிகள் 2 |
|---|---|---|
| 1/4 | அஸபா | 1/3 |
| 3 | 5 | 4 |

3 + 5 + 4 = 12

இங்கு தாய்வழி சகோதரிகள் இருவர் காணப்படுவதால் அவர்களுக்கு 1/3 மூன்றில் ஒரு பங்கு வழங்கப்படும். அதில் அவர்கள் ஒவ்வொருவரும் இந்தப் பங்குகளை தங்களுக்குள் சமமாகப் பிரித்துக் கொள்வார்கள்.

**உதாரணம்: 13**

இறந்தவர் ميت **மக்ரஜ் 4**

| கணவன் | மகள் | சகோதரன் | தாய்வழி சகோதரி |
|---|---|---|---|
| 1/4 | 1/2 | அஸபா | **x** |
| 1 | 2 | 1 | 0 |

1 + 2 + 1 + 0 = 4

இங்கு இறந்தவருக்கு மகள் இருப்பதால் தாய்வழி சகோதரிக்கு பங்கு செல்வதில்லை.[19]

**உதாரணம்: 14**

இறந்தவர் **ميت** **மக்ரஜ் 6**

| மகனின் மகள் | தந்தை |
|---|---|
| 1/2 | 1/6 + அஸபா |
| 3 | 1 + 2 = 3 |

3 + 3 = 6

இங்கு இறந்தவருக்குப் பிள்ளைகள் இல்லாததால் மகனின் மகள் 1/2 அரைப் பங்கைப் பெறுகிறாள்.

**உதாரணம்: 15**

இறந்தவர் **ميت** **மக்ரஜ் 6**

| மகனின் மகள்கள் 2 | தந்தை |
|---|---|
| 2/3 | 1/6 + அஸபா |
| 4 | 1 + 1 = 2 |

4 + 2 = 6

இங்கு மரணித்தவருக்கு மகன், மகள் இல்லாததால் மகனின் இரண்டு மகள்களும் 2/3 மூன்றில் இரண்டு பங்கைப் பெறுகிறார்கள்.

19. அஸ்ஹாபுல் ஃபுரூழில் ஹஜ்பு -பங்குகள் தடுக்கப்படுவதற்கு உட்படுவோரும் காணப்படுகிறார்கள். அதன் விளக்கத்தை அடுத்த பாடத்தில் பார்ப்போம்.

**உதாரணம்: 16**

இறந்தவர் ميت **மக்ரஜ் 12**

| தந்தை | கணவன் | தாய் | மகனின் மகன், மகனின் மகள் |
|---|---|---|---|
| 1/6 | 1/4 | 1/6 | அஸபா |
| 2 | 3 | 2 | 5 |

2 + 3 + 2 + 5 = 12

இந்த உதாரணத்தில், மகனின் மகள் தனது சகோதரனின் காரணமாக அஸபாவாக சொத்தில் பங்கு பெறுகிறாள். மீதமுள்ள 5 பங்குகளில் ஓர் ஆணுக்கு இரு பெண்களுக்குரிய பாகத்தைப் போன்று உண்டு.

**உதாரணம்: 17**

இறந்தவர் ميت **மக்ரஜ் 6**

| தந்தை | தாய் | மகள் | மகனின் மகள்கள் 2 |
|---|---|---|---|
| 1/6 | 1/6 | 1/2 | 1/6 |
| 1 | 1 | 3 | 1 |

1 + 1 + 3 + 1 = 6

**உதாரணம்: 18**

இறந்தவர் ميت **மக்ரஜ் 12**

| தந்தை | தாய் | கணவன் | மகன் | மகனின் மகள் |
|---|---|---|---|---|
| 1/6 | 1/6 | 1/4 | அஸபா | X |
| 2 | 2 | 3 | 5 | 0 |

2 + 2 + 3 + 5 = 12

உதாரணம் 18ல் மகன் காணப்படுவதால் மகனின் மகளுக்கு சொத்தில் பங்கில்லை.

**உதாரணம்: 19**

இறந்தவர் **مــــــــيــــــــت** **மக்ரஜ் 2**

| கணவன் | சகோதரி |
|---|---|
| 1/2 | 1/2 |
| 1 | 1 |

1 + 1 = 2

உதாரணம் 19ல் பெற்றோர் மற்றும் பிள்ளைகள் இல்லாததால் சகோதரி 1/2 அரைப் பங்கை ஃபர்ழாக -கடமையான பங்காகப் பெற்றுக் கொள்கிறாள்.

**உதாரணம்: 20**

இறந்தவர் **مــــــــيــــــــت** **மக்ரஜ் 6 | 8**

| கணவன் | தாய் | 2 சகோதரிகள் |
|---|---|---|
| 1/2 | 1/6 | 2/3 |
| 3 | 1 | 4 |

3 + 1 + 4 = 8

உதாரணம் 20ல் இரண்டு சகோதரிகளும் 2/3 மூன்றில் இரண்டு பங்குகளைப் பெறுகிறார்கள். இந்த சட்டத்தில் மக்ரஜ் 6ஆக இருந்தாலும் மொத்த பங்குகள் அதைவிட கூடிவிடுகின்ற காரணத்தால், மொத்த பங்குகள் உடைய எண்ணிக்கைக்கு ஏற்ப 8ல் இருந்து பங்குகளை கொடுக்க வேண்டும். இஸ்லாமிய சொத்துரிமைச் சட்டத்தில் இப்படியான நிலையை “அவ்ல்” என அழைக்கப்படும். இதன் விளக்கத்தை அவ்ல் உடைய பாடத்தில் விரிவாக பார்க்கலாம்.

**உதாரணம்: 21**

இறந்தவர் ميت மக்ரஜ் 6

| கணவன் | தாய் | சகோதரன் | சகோதரி |
|---|---|---|---|
| 1/2 | 1/6 | அஸபா | |
| 3 | 1 | 2 | |

3 + 1 + 2 = 6

**உதாரணம்: 22**

இறந்தவர் ميت மக்ரஜ் 6

| மகள் | மகனின் மகள் | சகோதரி |
|---|---|---|
| 1/2 | 1/6 | அஸபா |
| 3 | 1 | 2 |

3 + 1 + 2 = 6

உதாரணம் 22ல் மகள் மற்றும் மகனின் மகள் தங்களுடைய பங்குகளைப் பெற்றதன் பிறகு மீதமுள்ள சொத்துக்களை சகோதரி பெறுகிறாள். இங்கு சகோதரி, சகோதரனின் தரத்தில் கருதப்படுகிறாள்.

அதாவது பொதுவாக சொத்துரிமைச் சட்டத்தில் மீதமுள்ளதை ஆண் வாரிசு அஸபாவாகப் பெற்றுக் கொள்கிறான். என்றாலும், இங்கு சகோதரி ஆணின் உரிமையைப் பெற்றுக் கொள்கிறாள். இப்னு மஸ்ஊத் ﷺ அவர்கள் மேற்குறிப்பிட்ட ஒழுங்கில் தீர்ப்பு வழங்கிவிட்டு இதுவே இறைதூதரின் தீர்ப்பாகும் என்று குறிப்பிட்டார்கள்.

இறந்தவருக்கு சகோதரன் மாத்திரமிருப்பின் மற்ற வாரிசுகளுக்குரிய பங்குகள் வழங்கப்பட்டதன் பின்னர் மீதமுள்ள சொத்துக்களுக்கு அஸபாவாக சகோதரன் உரிமை பெறுகிறான் என்பது மிகத் தெளிவான சட்டமாகும். இதை, அடுத்து வரும் உதாரணம் விளக்குகிறது:

**உதாரணம்: 23**

இறந்தவர் تـــــيـــــم **மக்ரஜ் 12**

| கணவன் | தாய் | மகள் | சகோதரன் |
|---|---|---|---|
| 1/4 | 1/6 | 1/2 | அஸபா |
| 3 | 2 | 6 | 1 |

3 + 2 + 6 + 1 = 12

உதாரணம் 23ல் மீதமுள்ள ஒரு பங்கை சகோதரன் அஸபாவாக பெற்றுக் கொள்கிறான்.

**குறிப்பு:** மரணித்தவருக்கு தந்தை அல்லது மகன் இருப்பின் உடன் பிறந்த சகோதரனுக்கோ அல்லது சகோதரிக்கோ குடும்பச் சொத்தில் எந்தப் பங்கும் கிடைக்காது.

**உதாரணம்: 24**

இறந்தவர் تـــــيـــــم **மக்ரஜ் 12**

| கணவன் | தாய் | மகன் | சகோதரன் |
|---|---|---|---|
| 1/4 | 1/6 | அஸபா | x |
| 3 | 2 | 7 | 0 |

3 + 2 + 7 = 12

இங்கு இறந்தவருக்கு மகன் காணப்படுவதால் அவரின் சொத்தில் சகோதரனுக்கு பங்கில்லை.

**உதாரணம்: 25**

இறந்தவர் ميت **மக்ரஜ் 24**

| மனைவி | தாய் | மகள் | தந்தை | சகோதரன் |
|---|---|---|---|---|
| 1/8 | 1/6 | 1/2 | 1/6+அஸபா | X |
| 3 | 4 | 12 | 4 + 1 = 5 | 0 |

3 + 4 + 12 + 5 = 24

உதாரணம் 25ல் தந்தை இருப்பதால் சகோதரனுக்குச் சொத்தில் பங்கில்லை. மாறாக மீதமுள்ளவற்றை தந்தை பெற்றுக் கொள்கிறார்.

**உதாரணம்: 26**

இறந்தவர் ميت **மக்ரஜ் 2**

| கணவன் | தந்தைவழி சகோதரி |
|---|---|
| 1/2 | 1/2 |
| 1 | 1 |

1 + 1 = 2

**உதாரணம்: 27**

இறந்தவர் ميت **மக்ரஜ் 12 | 13**

| மனைவி | தாய் | தந்தைவழி சகோதரிகள் |
|---|---|---|
| 1/4 | 1/6 | 2/3 |
| 3 | 2 | 8 |

3 + 2 + 8 = 13

இந்த உதாரணம் அவ்ல் வகையைச் சேர்ந்ததாகும். மேலும், இந்த உதாரணத்தில் தந்தைவழி சகோதரிகள் இருவரும் 2/3 மூன்றில் இரண்டு பங்குகளை பெறுகிறார்கள்.

**உதாரணம்: 28**

இறந்தவர் ميت **மக்ரஜ் 6**

| கணவன் | தாய் | தந்தைவழி சகோதரன் | தந்தைவழி சகோதரி |
|---|---|---|---|
| 1/2 | 1/6 | அஸபா | |
| 3 | 1 | 2 | |

3 + 1 + 2 = 6

இதில் பெண்ணுக்கு கிடைப்பதைப் போன்று இரண்டு மடங்கு ஆணுக்கு கொடுக்கப்படும். இரண்டு பங்குகளை மேற்கூறப்பட்ட அஸபாக்களுக்கு கஸ்ர் -உடைத்தல் இன்றி பங்கு வைக்கக்கூடிய விளக்கம் தஸ்ஹீஹ் உடைய பாடத்தில் வர இருக்கிறது.

மேற்கூறப்பட்ட 26, 27, 28 ஆகிய உதாரணங்களில் மரணித்தவருக்கு உடன் பிறந்த சகோதர, சகோதரிகள் இல்லாதபோது அவர்கள் பெறும் அதே அளவு சொத்துக்களை தந்தைவழி சகோதர, சகோதரிகள் பெறுகின்றனர்.

**உதாரணம்: 29**

இறந்தவர் ميت **மக்ரஜ் 12**

| கணவன் | மகள் | மகனின் மகள் | தந்தைவழி சகோதரி |
|---|---|---|---|
| 1/4 | 1/2 | 1/6 | அஸபா |
| 3 | 6 | 2 | 1 |

3 + 6 + 2 + 1 = 12

இங்கு மரணித்தவரின் தந்தைவழி சகோதரி அஸபாவாக மீதமுள்ளதைப் பெறுகிறாள்.

**உதாரணம்: 30**

இறந்தவர் **مـــــــيـــــــت** **மக்ரஜ் 12 | 13**

| தாய் | மனைவி | சகோதரி | தந்தைவழி சகோதரி 2 |
|---|---|---|---|
| 1/6 | 1/4 | 1/2 | 1/6 |
| 2 | 3 | 6 | 2 |

2 + 3 + 6 + 2 = 13

இந்த உதாரணம் அவ்ல் வகையைச் சேர்ந்ததாகும். இங்கு தந்தைவழி சகோதரிகள் ஒருவருக்கு மேலாக இருந்தாலும் அதே 1/6 ஆறில் ஒன்றை அவர்கள் பெறுவார்கள்.

**உதாரணம்: 31**

இறந்தவர் **مـــــــيـــــــت** **மக்ரஜ் 12 | 13**

| தாய் | மனைவி | சகோதரிகள் 2 | தந்தைவழி சகோதரி |
|---|---|---|---|
| 1/6 | 1/4 | 2/3 | x |
| 2 | 3 | 8 | 0 |

2 + 3 + 8 = 13

உதாரணம் 30ல் தந்தைவழி சகோதரி 1/6 ஆறில் ஒரு பங்கைப் பெற்றுக் கொள்கிறாள். ஆனால், உதாரணம் 31ல் தந்தைவழி சகோதரிக்கு எந்தப் பங்கும் இல்லை. ஏனெனில், மரணித்தவருக்கு ஒன்றுக்கும் மேற்பட்ட சகோதரிகள் இருக்கும்போது தந்தைவழி சகோதரிக்கு சொத்தில் பங்கு கிடைக்காது.

**உதாரணம்: 32**

இறந்தவர் ميت **மக்ரஜ் 2**

| கணவன் | தந்தை | தந்தைவழி சகோதரி |
|---|---|---|
| 1/2 | அஸபா | x |
| 1 | 1 | |

1 + 1 = 2

**உதாரணம்: 33**

இறந்தவர் ميت **மக்ரஜ் 24**

| மனைவி | தாய் | மகன் | தந்தைவழி சகோதரி |
|---|---|---|---|
| 1/8 | 1/6 | அஸபா | x |
| 3 | 4 | 17 | 0 |

3 + 4 + 17 = 24

**உதாரணம்: 34**

இறந்தவர் ميت **மக்ரஜ் 12**

| கணவன் | மகள் | சகோதரன் | தந்தைவழி சகோதரிகள் 2 |
|---|---|---|---|
| 1/4 | 2/3 | அஸபா | x |
| 3 | 8 | 1 | 0 |

3 + 8 + 1 = 12

**உதாரணம்: 35**

இறந்தவர் ميت **மக்ரஜ் 6**

| மகள் | தாய் | தந்தை |
|---|---|---|
| 1/2 | 1/6 | 1/6 + அஸபா |
| 3 | 1 | 1 + 1 = 2 |

3 + 1 + 2 = 6

**உதாரணம்: 36**

இறந்தவர் ميت **மக்ரஜ் 12 | 13**

| கணவன் | தாய் | சகோதரிகள் 2 | தந்தைவழி சகோதரிகள் 2 |
|---|---|---|---|
| 1/4 | 1/6 | 2/3 | X |
| 3 | 2 | 8 | 0 |

3 + 2 + 8 = 13

இந்த உதாரணம் அவ்ல் வகையைச் சேர்ந்ததாகும். இங்கு சகோதரிகள் இருவர் இருப்பதால் தந்தைவழி சகோதரிகளுக்கு சொத்துகள் சேராது.

**உதாரணம்: 37**

இறந்தவர் ميت **மக்ரஜ் 6**

| தந்தை | தாய் | சகோதரிகள் 2 |
|---|---|---|
| 1/6 | 1/6 | 2/3 |
| 1 | 1 | 4 |

1 + 1 + 4 = 6

உதாரணம்: 35, 36, 37ல் தாய் ஆறில் ஒரு பங்கைப் பெற்றுக் கொள்கிறாள். ஏனெனில், உதாரணம் 35ல் மரணித்தவருக்கு மகள் இருக்கிறாள், உதாரணம் 36, 37ல் ஒன்றுக்கு மேற்பட்ட சகோதரிகள் இருக்கின்றார்கள். மேலும், சகோதரிகள் இருவரும் 2/3 மூன்றில் இரண்டு பங்கைப் பெற்றுக் கொள்கிறார்கள்.

**உதாரணம்: 38**

இறந்தவர் مـــــــيـــــــــت **மக்ரஜ் 3**

| | |
|---|---|
| தாய் | தந்தை |
| 1/3 | அஸபா |
| 1 | 2 |

1 + 2 = 3

**உதாரணம்: 39**

இறந்தவர் مـــــــيـــــــــت **மக்ரஜ் 6**

| | | |
|---|---|---|
| கணவன் | தாய் | சகோதரன் |
| 1/2 | 1/3 | அஸபா |
| 3 | 2 | 1 |

3 + 2 + 1 = 6

**உதாரணம்: 40**

இறந்தவர் مـــــــيـــــــــت **மக்ரஜ் 24**

| | | | |
|---|---|---|---|
| மனைவி | தாயின் தாய் | மகள் | சகோதரன் |
| 1/8 | 1/6 | 1/2 | அஸபா |
| 3 | 4 | 12 | 5 |

3 + 4 + 12 + 5 = 24

**உதாரணம்: 41**

இறந்தவர் مـــــــــيـــــــــت **மக்ரஜ் 24**

| மனைவி | தாய் | தாயின் தாய் | மகள் | சகோதரன் |
|---|---|---|---|---|
| 1/8 | 1/6 | x | 1/2 | அஸபா |
| 3 | 4 | 0 | 12 | 5 |

3 + 4 + 12 + 5 = 24

உதாரணம் 41ல் தாய் இருப்பதால் தாயின் தாய்க்கு பங்கு செல்வதில்லை.

**உதாரணம்: 42**

இறந்தவர் مـــــــــيـــــــــت **மக்ரஜ் 24**

| மனைவி | தாயின் தாய் தந்தையின் தாய் | மகள் | சகோதரன் |
|---|---|---|---|
| 1/8 | 1/6 | 1/2 | அஸபா |
| 3 | 4 | 12 | 5 |

3 + 4 + 12 + 5 = 24

இங்கு தாயின் தாய், தந்தையின் தாய் ஆகியோர் சொத்தில் 1/6 ஆறில் ஒன்றுக்கு சரிசமமாக பங்கு பெறுகின்றனர்.

**உதாரணம்: 43**

இறந்தவர் مـــــــــيـــــــــت **மக்ரஜ் 24**

| மனைவி | தாயின் தாய் | தந்தையின் தாய் | தந்தை | மகள் |
|---|---|---|---|---|
| 1/8 | 1/6 | x | 1/6+அஸபா | 1/2 |
| 3 | 4 | 0 | 4 + 1 = 5 | 12 |

3 + 4 + 5 + 12 = 24

இங்கு தந்தை இருப்பதால் தந்தையின் தாய்க்கு சொத்தில் பங்கில்லை.

----------------------

பாடம் 8

مَـخَارِجُ الْفُرُوْضِ

# மகாரிஜுல் ஃபுரூழ்
# பங்குகளின் பிறப்பிடங்கள்

**مَـخَارِج** என்பது **مَـخْرَجْ** உடைய பன்மையாகும். **فُرُوْض** என்பது **فَرْض** உடைய பன்மையாககும்.

வாரிசுகள் பெறுகின்ற பங்குகளை இலகுவாக பிரிப்பதற்கு கையாளப்படுகின்ற கணித வழிமுறையை மகாரிஜுல் ஃபுரூழ் என்று கூறப்படுகிறது.

அதாவது, இறந்தவர் விட்டுச்செல்கின்ற சொத்தை வாரிசுகளுக்கு மத்தியில் பங்கிடும்போது மொத்தமாக எத்தனை பங்குகளாக பிரித்தால் வாரிசுகளுக்கு மத்தியில் சொத்தை இலகுவாக பங்கிட முடியும் என்று காண்பதை மகாரிஜுல் ஃபுரூழ் - பங்குகளின் பிறப்பிடங்கள் என்று கூறுகிறோம்.

இதனை விளங்குவதற்கு பின்வரும் விஷயத்தை புரிந்து கொள்வது அவசியமாகும்.

அல்குர்ஆனில் கூறப்பட்டுள்ள பங்குகளை இரு வகையாக பிரிக்கலாம்.

**முதலாவது வகை:** 1/2 அரை, 1/4 கால், 1/8 எட்டில் ஒன்று (அரைக்கால்)

**இரண்டாவது வகை:** 2/3 மூன்றில் இரண்டு, 1/3 மூன்றில் ஒன்று, 1/6 ஆறில் ஒன்று.

வாரிசுகளில் முதலாவது வகையைச் சேர்ந்த 1/2 அரை, 1/4 கால் பங்குடையவர்கள் மட்டும் இருந்தால் இவற்றில் பெரிய எண்ணாக இருக்கக்கூடிய 1/4 காலில் உள்ள நான்கை பங்குகளின் மக்ரஜ் -பிறப்பிடமாக ஆக்கி சொத்துக்களை பங்கிட வேண்டும்.

வாரிசுகளில் முதலாவது வகையைச் சேர்ந்த 1/4 கால், 1/8 எட்டில் ஒன்று பங்குடையவர்கள் இருந்தால் இவற்றில் பெரிய எண்ணாக இருக்கக்கூடிய 1/8 எட்டில் ஒன்றுடைய எட்டை மக்ரஜாக ஆக்கி சொத்துக்களை பங்கிட வேண்டும்.

வாரிசுகளில் இரண்டாவது வகையில் உள்ள பங்குதாரர்கள் வந்தால் அதில் காணப்படும் பெரிய எண்ணை பங்குகளின் பிறப்பிடமாக கருத வேண்டும்.

**உதாரணம்:**

இறந்தவர் مـــيـــت **மக்ரஜ் 4**

| கணவன் | மகள் |
|---|---|
| 1/4 | 1/2 |
| 1 | 2+1 |

1 + 2 + 1 = 4

இந்தக் கணக்கில் 1/4, 1/2 சேருகின்றது. இவற்றில் பெரிய எண்ணிக்கை நான்காக இருப்பதால் சொத்தை நான்கிலிருந்து பங்கிடப்படும். கணவருக்கு நான்கில் ஒன்றும் மகளுக்கு சொத்தில் பாதியும் கொடுக்கப்பட்டு பிறகு மீதமுள்ள ஒரு பங்கும் ரத்துடைய அடிப்படையில் மகளுக்கு கொடுக்கப்படும். ரத்துடைய விளக்கம் பின்னால் வர இருக்கிறது.

**உதாரணம்:**

இறந்தவர் ميت **மக்ரஜ் 4**

| மகள் | கணவன் | தந்தை |
|---|---|---|
| 1/2 | 1/4 | அஸபா |
| 2 | 1 | 1 |

2 + 1 + 1 = 4

**உதாரணம்:**

இறந்தவர் ميت **மக்ரஜ் 8**

| மகள் | மனைவி | தந்தை |
|---|---|---|
| 1/2 | 1/8 | அஸபா |
| 4 | 1 | 3 |

4 + 1 + 3 = 8

**உதாரணம்:**

இறந்தவர் ميت **மக்ரஜ் 8**

| மகள் | மனைவி |
|---|---|
| 1/2 | 1/8 |
| 4+3 | 1 |

4 + 1 + 3 = 8

இங்கு பங்குகள் கொடுக்கப்பட்டதற்குப் பின்னர் மீதமுள்ள 3 பங்குகள் ரத்துடைய அடிப்படையில் மகளுக்கு கொடுக்கப்படும்.

முதல் வகையைச் சேர்ந்த பங்குதாரர்களும் இரண்டாவது வகையைச் சேர்ந்த பங்குதாரர்களும் கலந்து வந்தால் அந்த நிலைமை பின்வருமாறு அமையும்.

**1 முதலாவது:** முதல் வகையில் உள்ள 1/2 அரையுடன் இரண்டாவது வகையில் உள்ள ஒன்றோ அல்லது பலதோ கலந்து வந்தால் இப்போது, மக்ரஜ் 6ஆக இருக்கும்.

**உதாரணம்:**

இறந்தவர் ميـــــــــــــــــــــــــــت **மக்ரஜ் 6**

| ↓ | ↓ | ↓ |
|---|---|---|
| கணவன் | தாய் | தந்தை |
| 1/2 | 1/3 | அஸபா |
| 3 | 2 | 1 |

3 + 2 + 1 = 6

**உதாரணம்:**

இறந்தவர் ميـــــــــــــــــــــــــــت **மக்ரஜ் 6**

| ↓ | ↓ | ↓ |
|---|---|---|
| கணவன் | தாய் | உடன்பிறந்த சகோதரன் |
| 1/2 | 1/3 | அஸபா |
| 3 | 2 | 1 |

3 + 2 + 1 = 6

**2 இரண்டாவது:** முதல் வகையில் உள்ள 1/4 கால் உடன் இரண்டாவது வகையில் உள்ள பங்குகளில் ஒன்றோ அல்லது பலதோ கலந்து வந்தால் பங்குகளுடைய மக்ரஜை 12 பனிரெண்டாக ஆக்கி பங்குகளைப் பிரிக்க வேண்டும்.

**உதாரணம்:**

இறந்தவர் ميـــــــــــــــــــــــــــت **மக்ரஜ் 12**

| ↓ | ↓ | ↓ |
|---|---|---|
| கணவன் | தாய் | மகள்கள் 2 |
| 1/4 | 1/6 | 2/3 |
| 3 | 2 | 8 |

3 + 2 + 8 = 13

இங்கு அவ்லின் அடிப்படையில் பங்குகளை 13லிருந்து பிரித்துக் கொடுக்கப்படும்.

**உதாரணம்:**

இறந்தவர் ميت **மக்ரஜ் 12 | 15**

| கணவன் | தாய் | தந்தை | மகள்கள் 2 |
|---|---|---|---|
| 1/4 | 1/6 | 1/6 | 2/3 |
| 3 | 2 | 2 | 8 |

3 + 2 + 2 + 8 = 15

இங்கு அவ்லின் அடிப்படையில் பங்குகளை 15லிருந்து பிரித்துக் கொடுக்கப்படும்.

**உதாரணம்:**

இறந்தவர் ميت **மக்ரஜ் 12**

| மனைவி | தாய் | தாய்வழி சகோதரர்கள் 2 | சகோதரன் |
|---|---|---|---|
| 1/4 | 1/6 | 1/3 | அஸபா |
| 3 | 2 | 4 | 3 |

3 + 2 + 4 + 3 = 12

**உதாரணம்:**

இறந்தவர் ميت **மக்ரஜ் 12**

| கணவன் | தாய் | தந்தை | மகன் |
|---|---|---|---|
| 1/4 | 1/6 | 1/6 | அஸபா |
| 3 | 2 | 2 | 5 |

3 + 2 + 2 + 5 = 12

**3 மூன்றாவது:** முதல் வகையில் உள்ள 1/8 எட்டில் ஒன்று என்ற பின்னம் இரண்டாவது வகையில் உள்ள பின்னங்களில் ஒன்று அல்லது அதைவிட அதிகமானது வந்தால் மக்ரஜாக 24 காணப்படும்.

**உதாரணம்:**

இறந்தவர் تـــــــــيـــــــــم **மக்ரஜ் 24**

| மனைவி | மகள் 2 | தாய் |
|---|---|---|
| 1/8 | 2/3 | 1/6 |
| 3 | 16+1 | 4 |

3 + 17 + 4 = 24

**குறிப்பு: 1** சொத்துரிமை கணக்குகளை எளிய முறையில் தீர்ப்பதற்கு கையாளப்படும் அடிப்படை பங்குகள் ஏழு எண்களாக காணப்படும். அவை பின்வருமாறு 2, 3, 4, 6, 8, 12, 24.

இவற்றை இதுவரை கூறிய உதாரணங்கள் வழியாக விளங்க முடியும்.

**குறிப்பு: 2** இறந்தவரின் வாரிசுகள் அஸபாவாக மட்டுமே இருந்து, அவர்கள் அனைவரும் ஆண்களாக இருந்தால் அவர்கள் எத்தனை பேர் இருக்கிறார்களோ அந்த எண்ணிக்கையே பங்குகளின் மக்ரஜ் ஆகும்.

**உதாரணம்:**

இறந்தவர் تـــــــــيـــــــــم **மக்ரஜ் 5**

மகன்கள் 5

உதாரணமாக இறந்தவருக்கு ஐந்து ஆண் பிள்ளைகள் மட்டும் இருந்தால் அடிப்படை பங்கு ஐந்தாகும். முழு சொத்தையும் ஐந்தாக பங்கு வைத்து ஐந்து பேருக்கும் சரி சமமாகப் பங்கிட வேண்டும்.

**குறிப்பு:** இறந்தவரின் வாரிசுகளில் அஸபாவாக இருப்பவர்கள் ஆண் பிள்ளைகளும் பெண் பிள்ளைகளும் சேர்ந்து இருந்தால் ஆணை இரண்டாகவும் பெண்ணை ஒருத்தியாகவும் எண்ணிக் கணக்கிட வேண்டும். அதுவே மொத்த பங்குகளின் மக்ரஜ் ஆகும்.

**உதாரணம்:**

இறந்தவர் **مـــــــــــــيـــــــــــــت** **மக்ரஜ் 15**

| மகன்கள் 5 | மகள்கள் 5 |
|---|---|
| 5 x 2 = 10 | 5 x 1 = 5 |

10 + 5 = 15

மேற்கண்ட உதாரணத்தில் இறந்தவருக்கு ஐந்து ஆண் பிள்ளைகளும் ஐந்து பெண் பிள்ளைகளும் இருக்கின்றார்கள். இப்போது ஐந்து ஆண் பிள்ளைகளில் ஒவ்வொருவரையும் இரண்டு பேராக எடுத்துக் கொள்ள வேண்டும். பெண் பிள்ளைகளை அவர்களுடைய எண்ணிக்கையை மட்டும் எடுத்துக் கொள்ளவேண்டும்.

**உதாரணம்:**

இறந்தவர் **مـــــــــــــيـــــــــــــت** **மக்ரஜ் 11**

| மகன்கள் 4 | மகள்கள் 3 |
|---|---|
| 4 x 2 = 8 | 3 x 1 = 3 |

8 + 3 = 11

----------------------

اَلْعَوْلُ

# அவ்லு - அதிகப்படுத்துதல்

அல் அவ்லு என்றால் அதிகப்படுத்துதல் ஆகும்.

அதாவது, சொத்துகள் பங்கிடப்படும்போது வாரிசுகளின் சதவிகிதங்களுக்கு ஏற்ப மொத்த பங்குகளின் எண்ணிக்கையை அதிகப்படுத்துவதாகும்.

மக்ரஜ் உடைய எண்ணிக்கையைவிட பங்குகள் அதிகமாகி விடுதல் என்றும் இதைக் கூறலாம்.

சொத்துக்களைப் பிரிக்கப் பயன்படுத்தும் மக்ரஜை விட பங்குகள் அதிகமாக இருக்கும் நிலையை அவ்லு என்கிறோம்.

இந்நிலையில் வாரிசுகளின் பங்குகளைக் கூட்டி அதை மக்ரஜாக ஆக்கி சொத்துக்களைப் பங்கீடு செய்ய வேண்டும். இந்த வகைக் கணக்கில் பங்குதாரார்களின் பங்குகளில் சமஅளவான குறைவு ஏற்படும்.

பின்வரும் உதாரணம் இதனைத் தெளிவுபடுத்துகிறது.

இறந்தவர் ميت **மக்ரஜ் 6 | 7**

| கணவன் | தாய் | சகோதரி |
|---|---|---|
| 1/2 | 1/6 | 1/2 |
| 3 | 1 | 3 |

3 + 1 + 3 = 7

மேலுள்ள உதாரணத்தில் சொத்துக்களைப் பங்கீடு செய்யப் பயன்படுத்திய மக்ரஜாக 6 காணப்படுகிறது. ஆனாலும் பங்குகளின் எண்ணிக்கை 7 ஆகக் காணப்படுகிறது. மக்ரஜை விட பங்குகளின் எண்ணிக்கை அதிகமாகக் காணப்படும் நிலையை அவ்ல் என்கிறோம்.

இந்த கணக்கைத் தீர்ப்பதற்காக மக்ரஜை பங்குகளின் அளவுக்கேற்ப அதிகரிக்க வேண்டும். அப்படியாயின் மேலுள்ள கணக்கில் மக்ரஜ் 7 ஆக இருக்கும். எனவே முழுச் சொத்தையும் 6 ஆகப் பிரிக்காமல் 7 ஆகப் பிரித்து அதிலிருந்து பங்குகளை கொடுக்க வேண்டும்.

பங்குகளின் மக்ரஜ்கள் 7 ஆகும். அவற்றில் நான்கில் அவ்லு ஏற்படாது. அவை 2, 3, 4, 8 ஆகியவை ஆகும். மீதமுள்ள மூன்றில் மட்டும் அவ்லு ஏற்படும்.

6 ஆறு, பத்து வரை ஒற்றைப்படையாகவோ அல்லது இரட்டைப் படையாகவோ அதாவது, ஏழு, எட்டு, ஒன்பது, பத்து வரை அவ்லு ஆகும்.

**உதாரணம்:**

இறந்தவர் مـــــــيـــــــت **மக்ரஜ் 6 | 7**

| கணவன் | உடன் பிறந்த சகோதரி 2 |
|---|---|
| 1/2 | 3/2 |
| 3 | 4 |

3 + 4 = 7

இங்கு மொத்த பங்குகளுடைய மக்ரஜ் 6 ஆகும். ஆனால், அந்தப் பங்குகளை கூட்டும்போது அவற்றின் மொத்த எண்ணிக்கை 7ஆக ஆகிவிடுகிறது.

**உதாரணம்: 1**

இறந்தவர் مـــــــيـــــــت **மக்ரஜ் 6 | 8**

| கணவன் | உடன் பிறந்த சகோதரி 2 | தாய்வழி சகோதரி |
|---|---|---|
| 1/2 | 2/3 | 1/6 |
| 3 | 4 | 1 |

3 + 4 + 1 = 8

**உதாரணம்: 2**

இறந்தவர் مـــــــيـــــــت **மக்ரஜ் 6 | 9**

| கணவன் | உடன் பிறந்த சகோதரி 2 | தாய்வழி சகோதரி 2 |
|---|---|---|
| 1/2 | 2/3 | 1/3 |
| 3 | 4 | 2 |

3 + 4 + 2 = 9

**உதாரணம்: 3**

இறந்தவர் مـــــــيـــــــت **மக்ரஜ் 6 | 10**

| கணவன் | உடன் பிறந்த சகோதரி 2 | தாய்வழி சகோதரி 2 | தாய் |
|---|---|---|---|
| 1/2 | 2/3 | 1/3 | 1/6 |
| 3 | 4 | 2 | 1 |

3 + 4 + 2 + 1 = 10

12 பனிரெண்டு, பதினேழு வரை ஒற்றைப் படையாக அதாவது, 13 பதிமூன்று, 15 பதினைந்து, 17 பதினேழாக அவ்லு ஆகும்.

**உதாரணம்: 4**

இறந்தவர் مــــــــــيــــــــــت **மக்ரஜ் 12 | 13**

| மனைவி | உடன் பிறந்த சகோதரி 2 | தாய்வழி சகோதரி 1 |
|---|---|---|
| 1/4 | 2/3 | 1/6 |
| 3 | 8 | 2 |

3 + 8 + 2 = 13

**உதாரணம்: 5**

இறந்தவர் مــــــــــيــــــــــت **மக்ரஜ் 12 | 15**

| மனைவி | உடன் பிறந்த சகோதரி 2 | தாய்வழி சகோதரி 2 |
|---|---|---|
| 1/4 | 2/3 | 1/3 |
| 3 | 8 | 4 |

3 + 8 + 4 = 15

**உதாரணம்: 6**

இறந்தவர் مــــــــــيــــــــــت **மக்ரஜ் 12 | 17**

| மனைவி 3 | பாட்டி 2 | தாய்வழி சகோதரி 4 | உடன் பிறந்த சகோதரி 8 |
|---|---|---|---|
| 1/4 | 1/6 | 1/3 | 2/3 |
| 3 | 2 | 4 | 8 |

3 + 2 + 4 + 8 = 17

24 இருபத்தி நான்கு 27 இருபத்தி ஏழாக ஒரே ஒரு அவ்லாக மட்டும் வரும்.

**உதாரணம்: 7**

இறந்தவர் **مـــــــيـــــــت** **மக்ரஜ் 24 | 27**

| மனைவி | மகள்கள் 2 | தாய் | தந்தை |
| --- | --- | --- | --- |
| 1/8 | 2/3 | 1/6 | 1/6 |
| 3 | 16 | 4 | 4 |

3 + 16 + 4 + 4 = 27

----------------------

பாடம் 10

# اَلْعَلَاقَةُ بَيْنَ الْأَعْدَادِ

# எண்ணிக்கைகளுக்கு மத்தியில் உள்ள தொடர்புகள்

சொத்துப் பங்கீட்டில் பங்குகளின் எண்ணிக்கைகளுக்கு மத்தியில் காணப்படுகின்ற தொடர்புகளை அறியவேண்டும். இது குறித்து நான்கு அடிப்படைகள் இருக்கின்றன.

1. **التماثل** ஒன்றுக்கொன்று ஒப்பாக இருப்பது
2. **التداخل** ஒன்றில் மற்றொன்று சேர்ந்து விடுவது
3. **التوافق** ஒன்று மற்றொன்றுக்கு பொருந்தி இருப்பது
4. **التباين** ஒன்று மற்றொன்றிலிருந்து வேறுபட்டு இருப்பது

### 1. التماثل ஒன்றுக்கொன்று ஒப்பாக இருப்பது

வாரிசுகளின் பங்குகளில் ஒருவருடைய பங்கு இன்னொருவருடைய பங்குக்கு ஒப்பாக இருப்பது. அவ்வாறு இருக்கும்போது ஒரு பங்கின் மக்ரஜை அடிப்படையாக வைத்து வாரிசுகளுக்கு பங்குகள் பிரித்துக் கொடுக்கப்படும்.

**உதாரணம்:**

இறந்தவர் ميت **மக்ரஜ் 2**

| கணவன் | உடன் பிறந்த சகோதரி |
| --- | --- |
| 1/2 | 1/2 |
| 1 | 1 |

மேற்கண்ட உதாரணத்தில் கணவனும் இறந்தவரின் சொத்தில் 1/2 அரைக்கு உரியவராகிறார். உடன் பிறந்த சகோதரியும் 1/2 அரைக்கு உரியவராகிறார். ஆகவே, அரையின் மக்ரஜ் ஆகிய இரண்டுதான் இங்கு பங்குகளின் மக்ரஜ் ஆக இருக்கும். சொத்தை இரண்டாகப் பங்கு வைத்து அதில் ஒன்றை கணவருக்கும் மற்றொன்றை உடன் பிறந்த சகோதரிக்கும் கொடுக்கப்படும்.

## 2. التداخل ஒன்றில் மற்றொன்று சேர்ந்து விடுவது

வாரிசுகளின் பங்குகளில் ஓர் எண்ணில் மற்றோர் எண் சேர்ந்து விடுகிற அமைப்பில் இருந்தால் அதாவது, அவ்விரண்டில் பெரிய எண்ணில் சிறியது சேர்ந்துவிடும் என்று இருந்தால் அந்த பெரிய எண்ணை பங்குகளின் மக்ரஜாக ஆக்கப்படும்.

**உதாரணம்:**

இறந்தவர் ميت **மக்ரஜ் 4**

| மனைவி | தந்தைவழி சகோதரி | தந்தையின் சகோதரன் |
| --- | --- | --- |
| 1/4 | 1/2 | அஸபா |
| 1 | 2 | 1 |

1 + 2 + 1 = 4

மேற்கண்ட உதாரணத்தில் பங்குகளாகிய 1/4 மற்றும் 1/2, இவற்றில் ஒன்று மற்றொன்றில் சேர்ந்து விடுகிறது. அதாவது, சிறியதைக் கொண்டு பெரியதை முழுமையாக வகுத்துவிடலாம். ஆகவே, பெரிய

எண்ணை மக்ரஜாக ஆக்கி அதிலிருந்து பங்குகளைக் கொடுக்க வேண்டும்.

**உதாரணம்:**

இறந்தவர் مـــــــيـــــــت **மக்ரஜ் 8**

| மனைவி | மகள் | தந்தையின் சகோதரன் |
|---|---|---|
| 1/8 | 1/2 | அஸபா |
| 1 | 4 | 3 |

1 + 4 + 3 = 8

மேற்கண்ட உதாரணத்தில் பங்குகளாகிய 1/8 மற்றும் 1/2, இவற்றில் ஒன்று மற்றொன்றில் சேர்ந்து விடுகிறது. அதாவது, சிறியதைக் கொண்டு பெரியதை முழுமையாக வகுத்துவிடலாம். ஆகவே, பெரிய எண்ணை மக்ரஜாக ஆக்கி அதிலிருந்து பங்குளைக் கொடுக்க வேண்டும்.

**உதாரணம்:**

இறந்தவர் مـــــــيـــــــت **மக்ரஜ் 6**

| தாய் | மகள் | தந்தை |
|---|---|---|
| 1/6 | 1/2 | அஸபா |
| 1 | 3 | 2 |

1 + 3 + 2 = 6

மேற்கண்ட உதாரணத்தில் பங்குகளாகிய 1/6 மற்றும் 1/2, இவற்றில் ஒன்று மற்றொன்றில் சேர்ந்து விடுகிறது. அதாவது, சிறியதைக் கொண்டு பெரியதை முழுமையாக வகுத்துவிடலாம். ஆகவே, பெரிய எண்ணை மக்ரஜாக ஆக்கி அதிலிருந்து பங்குகளைக் கொடுக்க வேண்டும்.

## 3. التوافق ஒன்று மற்றொன்றுக்கு பொருந்தி இருப்பது

பங்குகளில் ஒன்று மற்றொன்றின் இரு மடங்காக இருந்தாலும் ஒன்றை மற்றொன்றில் மீதம் இன்றி வகுக்க முடியாது. ஆனால், மூன்றாவது ஓர் எண் வழியாக இவ்விரண்டையும் மீதம் இன்றி வகுக்க முடியும். பங்குகளின் எண்களுக்கு மத்தியில் இருக்கக்கூடிய இத்தைகய தொடர்பை தவாஃபுக் என்று கூறப்படும்.

உதாரணமாக 1/4, 1/6 இவற்றில் சிறிய எண்ணாகிய 4 நான்கு மற்றும் பெரிய எண்ணாகிய 6 ஆறு இவ்விரண்டுக்குமிடையில் தமாஸுல் மற்றும் ததாகுல் உடைய தொடர்பு இல்லை. மாறாக, தவாஃபுக் இருக்கின்றது. அதாவது, நான்கை இரண்டினாலும் ஆறை மூன்றினாலும் சமமாக வகுத்து விடலாம்.

பங்குகளில் 1/6, 1/8 இருந்தால், இவற்றில் சிறிய எண்ணாகிய 6 மற்றும் பெரிய எண்ணாகிய 8 இவ்விரண்டுக்குமிடையில் தமாஸுல் மற்றும் ததாகுல் உடைய தொடர்பு இல்லை. மாறாக, தவாஃபுக் இருக்கின்றது. அதாவது, இவ்விரண்டையும் பொதுவான மூன்றாவது ஓர் எண்ணைக் கொண்டு வகுத்து விடலாம். அதாவது, 6ஐ 3ஐக் கொண்டும் 8ஐ 4ஐக் கெண்டும் சமமாக வகுக்கலாம். ஆகவே, பங்குகளில் ஓர் எண்ணை சமமாக வகுப்பதற்கு பயன்படுத்தக்கூடிய எண்ணைக் கொண்டு மற்றொரு பங்கின் எண்ணில் பெருக்கி வரும்போது இருக்கக்கூடிய எண்தான் பங்குகளின் மக்ரஜ் ஆகும்.

**உதாரணம்:**

இறந்தவர் ت ـــــــ يـــــــ م    **மக்ரஜ் 12**

| மனைவி | தந்தைவழி சகோதரன் | தந்தையின் சகோதரர் |
|---|---|---|
| 1/4 | 1/6 | அஸபா |
| 3 | 2 | 7 |

3 + 2 + 7 = 12

இங்கு மனைவியின் பங்காகிய 1/4 மற்றும் தந்தைவழி சகோதரனுடைய பங்காகிய 1/6 இவற்றில் எண் 4 இரண்டைக் கொண்டு வகுபடுகிறது. எண் 6, 3ஐ கொண்டு வகுபடுகிறது. ஆகவே, இரண்டை 6ல் அல்லது 3ஐ 4ல் பெருக்கும்போது வரக்கூடிய எண் பங்குகளின் மக்ரஜாக இருக்கும். இரண்டு நிலைகளிலும் பங்குகளின் மக்ரஜ் ஒரே எண்ணாகத்தான் இருக்கும்.

**உதாரணம்:**

இறந்தவர் **ميت** **மக்ரஜ் 24**

| தாய் | மனைவி | மகள் | சகோதரன் |
|---|---|---|---|
| 1/6 | 1/8 | 1/2 | அஸபா |
| 4 | 3 | 12 | 5 |

4 + 3 + 12 + 5 = 24

இங்கு மனைவியின் பங்காகிய 1/8 மற்றும் தாயுடைய பங்காகிய 1/6 இவற்றில் எண் 8 நான்கில் இரண்டு முறை வகுபடுகிறது. எண் 6 மூன்றில் இரு முறை வகுபடுகிறது. ஆகவே, நான்கை ஆறில் அல்லது மூன்றை எட்டில் பெருக்கும் போது வரக்கூடிய எண் பங்குகளின் மக்ரஜாக இருக்கும். அதன் அடிப்படையில் இங்கு மக்ரஜ் 24 ஆகும்.

3 x 8 = 24

4 x 6 = 24

## 4. التباين ஒன்று மற்றொன்றிலிருந்து வேறுபட்டு இருப்பது

பங்குகளின் ஒன்றுக்கொன்று முரண்பட்ட எண் இருந்தால் அவற்றில் ஒன்றை மற்றொன்றில் பெருக்க வேண்டும். அப்போது வரக்கூடிய எண் பங்குகளின் மக்ரஜ் ஆக இருக்கும்.

**உதாரணம்:**

இறந்தவர் تـــــــــــيــــــــم **மக்ரஜ் 6**

| கணவன் | தாய் | தந்தையின் சகோதரர் |
|---|---|---|
| 1/2 | 1/3 | அஸபா |
| 3 | 2 | 1 |

3 + 2 + 1 = 6

இங்கு பங்குகளாகிய 1/2ல் உள்ள 2ம் 1/3ல் உள்ள 3ம் ஒன்றுக்கொன்று முரண்பட்டதாக இருக்கின்றது. ஆகவே, இவற்றில் ஒன்றை மற்றொன்றில் பெருக்கும்போது என்ன எண் வருகிறதோ அதுதான் பங்குகளின் மக்ரஜ் ஆகும்.

2 x 3 = 6

3 x 2 = 6

**உதாரணம்:**

இறந்தவர் تـــــــــــيــــــــم **மக்ரஜ் 6**

| கணவன் | உடன் பிறந்த சகோதரிகள் 2 |
|---|---|
| 1/2 | 2/3 |
| 3 | 4 |

3 + 4 = 7

இங்கு அவ்லின் அடிப்படையில் பங்குகளுக்கு ஏற்ப மக்ரஜை 7ஆக ஆக்கி, பிறகு அதிலிருந்து 3 பங்குகள் கணவனுக்கும் 4 பங்குகள் சகோதரிகளுக்கும் கொடுக்கப்படும்.

-----------------------

# اَلتَّصْحِيحُ

# தஸ்ஹீஹ் - சரிபடுத்துதல்

தஸ்ஹீஹ் என்றால் வாரிசுகளின் பங்குகளை முழுமையான எண்ணிக்கையில் கொடுப்பதற்காக அவர்களின் பங்குகளின் எண்ணிக்கையை (மக்ரஜை) பன்மடங்காக்குவதாகும்.

பங்குகளை சரி செய்வதற்கு ஏழு அடிப்படை சட்டங்கள் இருக்கின்றன. அவற்றில் முதல் மூன்று சட்டங்கள் பங்குகளுக்கும் அந்த பங்குகளை பெறக்கூடியவர்களுக்கும் மத்தியில் உள்ளவை ஆகும். மற்ற நான்கு சட்டங்கள் பங்குகளை பெறக்கூடியவர்களுக்கு மத்தியில் உள்ளவை ஆகும்.

முதல் மூன்று சட்டங்களில்

**முதலாவது:** ஒவ்வொரு பிரிவினரின் பங்கும் உடையாமல் அவர்கள் மீது முழுமையாக பிரிந்து விட்டால் இங்கு எதையும் பெருக்க வேண்டிய தேவை இருக்காது.

**உதாரணம்:**

இறந்தவர் **ميت** **மக்ரஜ் 6**

| தாய் | தந்தை | மகள்கள் 2 |
|---|---|---|
| 1/6 | 1/6 | 2/3 |
| 1 | 1 | 4 |

1 + 1 + 4 = 6

இங்கு மேற்கண்ட உதாரணத்தில் பங்குகள் அவற்றைப் பெறக்கூடிய தலைகளுக்கு ஏற்ப முழுமையாக உடையாமல் பிரிந்து விடுகிறது. அது போன்று மக்ரஜிலிருந்து பங்குகளை எடுப்பதும் முழுமையாக அமைந்து விடுகிறது. இரண்டு மகள்களுக்கும் கிடைக்கப் பெற்ற நான்கு பங்குகளை ஒவ்வொருவருக்கும் இரண்டாக பிரித்துக் கொடுப்பதும் சரியாக ஆகிவிடுகிறது.

**இரண்டாவது:** பங்குகளுக்கும் பங்குகளைப் பெறக்கூடிய தலைகளில் ஒரு சாராரில் மட்டும் பங்குகளை முழுமையாக பிரிக்க முடியாமல், பங்குகளில் உடைதல் ஏற்பட்டால் அப்போது அவர்களுடைய பங்குகளுக்கும் அந்த பங்குகளை பெறக்கூடிய தலைகளுடைய எண்ணிக்கைக்கு மத்தியிலும் முவாஃபகா (வகுபடக்கூடிய ஒற்றுமை) இருந்தால் எந்த தலைகளுடைய பங்கில் உடைதல் ஏற்படுகிறதோ அந்த தலைகளுடைய எண்ணிக்கையின் வஃப்கை (வகுப்பதற்குரிய எண்ணை) பங்குகளின் அசல் மக்ரஜில் அல்லது அதனுடைய அவ்லில் பெருக்க வேண்டும் (அவ்ல் இருந்தால்).

**உதாரணம்:**

இறந்தவர் ميت மக்ரஜ் 6

| தாய் | தந்தை | மகள்கள் 10 |
|---|---|---|
| 1/6 | 1/6 | 2/3 |
| 1 | 1 | 4 |

1 + 1 + 4 = 6

இங்கு நான்கு பங்குகளை பத்து மகள்களுக்கு உடையாமல் பிரிப்பது முடியாது. ஆகவே, மகள்களின் எண்ணிக்கையாகிய 10ஐ 5ல் வகுக்கலாம். அந்த 5ஐ மக்ரஜ் ஆகிய 6ல் பெருக்க வேண்டும். பெருக்கி வரக்கூடிய 30ல் இருந்து பங்குகளை பிரிக்க வேண்டும். ஆகவே, மேற்கூறப்பட்ட உதாரணத்தின் பங்குகள் பின்வருமாறு அமையும்.

இறந்தவர் تـــــــــيـــــــم **மக்ரஜ் 6 | 30**

| தாய் | தந்தை | மகள்கள் 10 |
|---|---|---|
| 1/6 | 1/6 | 2/3 |
| 1 | 1 | 4 |
| 5 | 5 | 20 |

5 + 5 + 20 = 30

ஒவ்வொரு மகளுக்கும் இரண்டு பங்குகள் கொடுக்கப்படும் 10x2=20.

**உதாரணம்:**

இறந்தவர் تـــــــــيـــــــم **மக்ரஜ் 12**

| தாய் | தந்தை | கணவன் | மகள்கள் 6 |
|---|---|---|---|
| 1/6 | 1/6 | 1/4 | 2/3 |
| 2 | 2 | 3 | 8 |

2 + 2 + 3 + 8 = 15

இங்கு பங்குகளை அவ்லின் அடிப்படையில் 15ல் இருந்து கொடுக்கப்படும். பிறகு எட்டு பங்குகளை ஆறு மகள்களுக்கு உடையாமல் கொடுப்பது முடியாது. ஆகவே, மகள்களின் எண்ணிக்கையாகிய 6ஐ சமமாக வகுப்பதற்கு உரிய எண்ணாகிய 3ஐ 15ல் பெருக்க வேண்டும். அப்போது, பங்குகள் கீழ்காணப்படுகின்ற முறையில் அமையப் பெறும்.

இறந்தவர் تـــــــــيـــــــم **மக்ரஜ் 12 | 15X3=45**

| தாய் | தந்தை | கணவன் | மகள்கள் 6 |
|---|---|---|---|
| 1/6 | 1/6 | 1/4 | 2/3 |
| 2 | 2 | 3 | 8 |
| 6 | 6 | 9 | 24/6 |

இங்கு ஒவ்வொருவருடைய பங்கையும் யாருடைய பங்குகள் சமமாக பிரியவில்லையோ அவருடைய தலைகளை வகுப்பதற்கு பயன்படுத்தப்பட்ட எண்ணில் பெருக்க வேண்டும். அதாவது, இந்த உதாரணத்தில் 3ல் பெருக்க வேண்டும். அவ்வாறு பெருக்கும்போது வரக்கூடிய எண் அவர்களின் பங்காக இருக்கும்.

ஒவ்வொரு மகளுக்கும் 4 பங்குகள் கிடைக்கும்.

2 x 3 = 6

2 x 3 = 6

3 x 3 = 9

8 x 3 = 24

பங்குகளுக்கும் பங்குகளை பெறுகின்றவர்களின் எண்ணிக்கைக்கும் நடுவில் முவாஃபகா (வகுபடும்) ஒற்றுமை இல்லையென்றால் யாருடைய பங்கில் கஸ்ர் (உடைவு) ஏற்பட்டதோ அவர்களின் எண்ணிக்கையை பங்குகளின் மக்ரஜில் பெருக்க வேண்டும் அல்லது அவ்லில் பெருக்க வேண்டும்.

**உதாரணம்:**

இறந்தவர் **تـــــيـــــم** **மக்ரஜ் 6x5=30**

| தாய் | தந்தை | மகள்கள் 5 |
|---|---|---|
| 1/6 | 1/6 | 2/3 |
| 1 | 1 | 4 |
| 5 | 5 | 20 |
| | | 20/5=4 |

5 + 5 + 20 = 30

**உதாரணம்:**

இறந்தவர் ميت **மக்ரஜ் 6 | 7x5=35**

| கணவன் | உடன்பிறந்த சகோதரிகள் 5 |
|---|---|
| 1/2 | 2/3 |
| 3 | 4 |
| 3x5=15 | 4x5=20 |

15 + 20 = 35

**மூன்றாவது:** இதில் இரண்டு விஷயங்கள் உள்ளன.

ஒன்று பங்குகள் சமமாக பிரியாமல் இருப்பது இரண்டு வகையான அல்லது அதைவிட அதிகமான வாரிசுகளுக்கு மத்தியில் இருக்கும். மேலும், அந்த வாரிசுகளின் எண்ணிக்கைகளுக்கு மத்தியில் **مماثلة** மும்மாதலா இருக்கும். அப்போது, எண்ணிக்கைகளின் ஒன்றை மக்ரஜில் பெருக்க வேண்டும்.

**உதாரணம்:**

இறந்தவர் ميت **மக்ரஜ் 6x3=18**

| மகள்கள் 6 | பாட்டிகள் 3 | தந்தையின் சகோதரர்கள் 3 |
|---|---|---|
| 2/3 | 1/6 | அஸபா |
| 4 | 1 | 1 |
| 12 | 3 | 3 |

12 + 3 + 3 = 18

இரண்டாவது: எண்ணிக்கைகளுக்கு மத்தியில் **تداخل** ததாகுல் இருந்தால், அந்த எண்ணிக்கைகளில் பெரிய எண்ணிக்கையை மக்ரஜில் பெருக்க வேண்டும்.

**உதாரணம்:**

இறந்தவர் ميت **மக்ரஜ் 12x12=144**

| மனைவிகள் 4 | பாட்டிகள் 3 | தந்தையின் சகோதரர்கள் 12 |
|---|---|---|
| 1/4 | 1/6 | அஸபா |
| 3 | 2 | 7 |
| 36 | 24 | 84 |
| 4x9=36 | 3x8=24 | 7x12=84 |

36 + 24 + 84 = 144

மூன்றாவது: எண்ணிக்கைகளுக்கு மத்தியில் தவாஃபுக் இருக்கும். அப்போது அந்த எண்ணிக்கைகளின் ஒன்றுடைய வஃப்கை இரண்டாவது எண்ணிக்கையில் பெருக்க வேண்டும். பிறகு, பெருக்கி வரக்கூடியதை மூன்றாவதுடைய வஃப்கில் பெருக்க வேண்டும். பிறகு, பெருக்கி வரக்கூடியதை மக்ரஜில் பெருக்க வேண்டும்.

**உதாரணம்:**

இறந்தவர் ميت **மக்ரஜ் 24x180=4320**

| மனைவிகள் 4 | மகள்கள் 18 | பாட்டிகள் 15 | தந்தையின் சகோதரர்கள் 6 |
|---|---|---|---|
| 1/8 | 2/3 | 1/6 | அஸபா |
| 3 | 16 | 4 | 1 |
| 540 | 2880 | 720 | 180 |
| 540/4=135 | 2880/18=160 | 720/15=48 | 180/6=30 |

540 + 2880 + 720 + 180 = 4320

இந்த சட்டத்தில் பங்குகள் நான்கு மனைவிகள் மற்றும் அவர்களுடைய பங்குகள் மூன்றுக்கும் மத்தியில் தபாயுன் உள்ளது. ஆகவே, மனைவிகள் எண்ணிக்கை 4 நான்கை முழுமையாக வைத்துக் கொண்டோம்.

18 மகள்களுக்கும் அவர்களுடைய பங்குகளாகிய 16க்கும் மத்தியில் முவாஃபகா உள்ளது. ஆகவே, அவர்களின் எண்ணிக்கையின் பாதியை வைத்துக் கொண்டோம். அதாவது 9.

15 பாட்டிகளுக்கும் அவர்களுடைய பங்காகிய நான்கிற்கும் இடையில் தபாயுன் உள்ளது. எனவே, அவர்களின் மொத்த எண்ணிக்கை 15ஐ வைத்துக் கொண்டோம்.

தந்தையின் சகோதரர்களுக்கும் அவர்களின் பங்குகளுக்கு மத்தியில் தபாயுன் உள்ளதால் அவர்களின் மொத்த எண்ணிக்கை 6ஐ வைத்துக் கொண்டோம்.

4 6 9 15

4க்கும் 6க்கும் இடையில் தவாஃபுக் இருப்பதால் 2ல் ஒன்றுடைய பாதியை மற்றொன்றில் பெருக்கப்படும்.

2x6=12 அல்லது 3x4=12

12க்கும் 6க்கும் இடையில் 3ஐக் கொண்டு தவாஃபுக் இருப்பதால் 2ல் ஒன்றுடைய பாதியை மற்றொன்றில் பெருக்கப்படும்.

3x12=36

36க்கும் 15க்கும் இடையில் 3ஐக் கொண்டு முவாஃபகா இருப்பதால் 15 உடைய 3ல் ஒன்றாகிய 5ஐ 36ல் பெருக்கப்படும்.

இப்போது பெருக்கி வரக்கூடிய தொகையாகிய 180ஐ மக்ரஜில் பெருக்கப்படும்.

24 x 180 = 4320

மனைவி உடைய பங்காகிய 3ஐ 180ல் பெருக்க வேண்டும். அது 540 ஆகும். ஒவ்வொரு மனைவிக்கும். 135 பங்குகள் கிடைக்கும்.

540 / 4 = 135

மகள்களுக்குரிய பங்காகிய 16ஐ 180ல் பெருக்க வேண்டும்.

16 x 180 = 2880

ஒவ்வொரு மகளுக்கும் 160 பங்குகள் கிடைக்கும்.

2880 / 18 = 160

பாட்டிகளுக்குரிய நான்கு பங்கை 180ல் பெருக்கப்படும். அது 720 ஆகும்.

720 / 15 = 48

ஒவ்வொரு பாட்டிகளுக்கும் 48 பங்குகள் கிடைக்கும்.

மீதமிருக்கக்கூடிய பங்குகள் அஸபாக்களாகிய தந்தையின் சகோதரர்கள் 6 பேருக்கு கிடைக்கும்.

180 / 6 = 30

**நான்காவது:** எண்ணிக்கைகளுக்கு மத்தியில் தபாயுன் மட்டும் இருந்தால் அப்போது ஒரு எண்ணிக்கையை மற்றொன்றிலும் பிறகு, அதை மற்றொன்றிலும் பிறகு, அதை மற்றொன்றிலும் பெருக்க வேண்டும். பெருக்கி வருவதை மக்ரஜில் பெருக்க வேண்டும்.

**உதாரணம்:**

இறந்தவர் ميت **மக்ரஜ் 24**

| மனைவிகள் 2 | மகள்கள் 10 | பாட்டிகள் 6 | தந்தையின் சகோதரர்கள் 7 |
|---|---|---|---|
| 1/8 | 2/3 | 1/6 | அஸபா |
| 3 | 16 | 4 | 1 |

இங்கு மனைவிகளின் எண்ணிக்கை இரண்டுக்கும் அவர்களின் பங்கு மூன்றுக்கும் இடையில் தபாயுன் உள்ளது. ஆகவே, அவர்களின் எண்ணிக்கையாகிய 2ஐ வைத்துக் கொண்டோம்.

மேலும், பாட்டிகளின் எண்ணிக்கையாகிய 6க்கும் 4க்கும் இடையில் தவாஃபுக் உள்ளது. ஆகவே, அவர்களின் எண்ணிக்கையாகிய 6 உடைய பாதியாகிய 3ஐ வைத்துக் கொண்டோம்.

மேலும், மகள்களின் எண்ணிக்கையாகிய 10க்கும் அவர்களின் பங்குகளாகிய 16க்கும் இடையில் தவாஃபுக் உள்ளது. எனவே, அவர்களின் எண்ணிக்கையில் பாதியாகிய 5ஐ வைத்துக் கொண்டோம்.

மேலும், தந்தையின் சகோதரர்களின் எண்ணிக்கைக்கும் அவர்களின் பங்குகளின் எண்ணிக்கைக்கும் இடையில் தபாயுன் உள்ளது. ஆகவே, அவர்களின் எண்ணிக்கையாகிய 7ஐ வைத்துக் கொண்டோம்.

இப்போது நம்மிடம் வாரிசுகளின் எண்ணிக்கைகள் 2, 3, 5, 7 ஆகியவை உள்ளன. இவை அனைத்துக்கும் மத்தியில் தபாயுன் உள்ளது. ஆகவே, 2ஐ 3ல் பெருக்க வேண்டும். 6 கிடைத்தது. பிறகு அதை 5ல் பெருக்க வேண்டும். 30 கிடைத்தது. பிறகு அதை 7ல் பெருக்க வேண்டும். 210 கிடைக்கும். இந்த 210ஐ மக்ரஜ் ஆகிய 24ல் பெருக்க வேண்டும்.

2 x 3 = 6

6 x 5 = 30

30 x 7 = 210

210 x 24 = 5040

இறுதியாக உள்ள 5040 என்பது இப்போது பொது மக்ரஜாக இருக்கும். வாரிசுகளுக்கு கிடைத்த பங்கை 210ல் பெருக்க வேண்டும். இது வாரிசுகளுக்கு கிடைக்கும் மொத்த பங்காக இருக்கும். பிறகு அதை வாரிசுகளின் எண்ணிக்கையில் வகுக்க வேண்டும். அவ்வாறு வகுத்து வருவது வாரிசுகளில் ஒவ்வொருவருக்கும் உள்ள தனித்தனி பங்காக இருக்கும். ஆகவே, மேற்கூறப்பட்ட சட்டத்தின் மாதிரி பின்வருமாறு அமையப்பெறும்.

இறந்தவர் **ميت** **மக்ரஜ் 24x210=5040**

| மனைவிகள் 2 | மகள்கள் 10 | பாட்டிகள் 6 | தந்தையின் சகோதரர்கள் 7 |
|---|---|---|---|
| 1/8 | 2/3 | 1/6 | அஸபா |
| 3 | 16 | 4 | 1 |
| 630 | 3360 | 840 | 210 |
| 630/2=315 | 3360/10=336 | 840/6=140 | 210/7=30 |

-----------------------

اَلرَّدُّ

# ரத்து - மறுபங்கீடு

இது அவ்லுக்கு நேர்மாற்றமானதாகும். அவ்லில் பொதுக் காரணியை விட பங்குதாரார்களின் பங்குகள் அதிகம். ஆனால் ரத்தில் பொதுக் காரணியை விட பங்குகள் மீதமிருக்கும்.

வாரிசுகளாக அஸபா இல்லாமல் ஏனைய வாரிசுகள் இருப்பின் அவர்களுக்குரிய பங்குகளை கொடுத்ததன் பிறகு மீதமுள்ள பங்குகளை ஏற்கனவே பங்குகளை பெற்ற கணவன் மனைவி அல்லாத மற்ற வாரிசுகளுக்கு அவர்கள் பெற்ற விகித அடிப்படையில் பங்கீடு செய்வதை ‘ரத்து’ எனப்படும்.

உதாரணம்: மரணித்தவருக்கு வாரிசுகளாக தாய், சகோதரி, தந்தைவழி சகோதரி காணப்படுகிறார்கள்.

இறந்தவர் ميت

| தாய் | சகோதரி | தந்தைவழி சகோதரி |
|---|---|---|
| 1/6 | 1/2 | 1/6 |
| 1 | 3 | 1 |

1 + 3 + 1 = 5

மேலுள்ள உதாரணத்தில் சொத்தைப் பிரிப்பதற்கான அடிப்படைக் காரணி 6 ஆகும். ஆனால் வாரிசுகள் பெற்றுக்கொள்ளும் மொத்தப்

பங்குகளின் எண்ணிக்கை 5 ஆகும். இங்கு மீதமுள்ள ஒன்றைப் பெறுவதற்கு அஸபாவாக யாருமில்லை. இந்நிலையில் மீதமுள்ளதை ஏற்கனவே பங்குகளைப் பெற்றுக்கொண்டவர்களுக்கு அவர்கள் பெற்றுக்கொண்ட பங்கு விகிதங்களின் அடிப்படையில் மீண்டும் பகிர்ந்தளிக்கப்படும்.

## الرد ரத்து உடைய சட்டங்களை விரிவாகப் பார்ப்போம்!

ரத்துடைய சட்டங்கள் நான்கு வகைப்படும்.

**முதலாவது:** ரத்துக்கு உரியவர்களில் ஒரு வகையினர் மட்டும் இருப்பார்கள். ரத்துக்கு உரிமை இல்லாதவர்களில் எவரும் இருக்க மாட்டார். அப்போது, அந்த வகையினரில் உள்ள தலைகளின் எண்ணிக்கைக்கு ஏற்ப பங்குகளை அமைக்க வேண்டும்.

**உதாரணம்: 1 : 1**

இறந்தவர் ميت **மக்ரஜ் 2**

↓

மகள்கள் 2

1 + 1 = 2

**உதாரணம்: 1 : 2**

இறந்தவர் ميت **மக்ரஜ் 2**

↓

சகோதரிகள் 2

1 + 1 = 2

**உதாரணம்: 1 : 3**

இறந்தவர் ميت **மக்ரஜ் 2**

↓

பாட்டிகள் 2

1 + 1 = 2

**இரண்டாவது:** வாரிசுகளில் ரத்துக்கு உரியவர்களில் ஒன்றுக்கு மேற்பட்ட இரண்டு, மூன்று வகையினர் இருப்பார்கள். ரத்துக்கு உரிமை இல்லாதவர்கள் இருக்க மாட்டார்கள். அப்போது, அவர்களின் பங்குகளிலிருந்தே சட்டத்தை நாம் அமைக்க வேண்டும்.

அதாவது, வாரிசுகளில் 1/6 ஆறில் ஒன்றை பெறக்கூடியவர்கள் இரு வகையினர் இருந்தால் 2ல் இருந்தே பங்குகளை வைக்க வேண்டும்.

**உதாரணம்:**

இறந்தவர் ميت — **மக்ரஜ் 6**

| பாட்டி | தாய்வழி சகோதரி |
|---|---|
| 1/6 | 1/6 |
| 1 | 1 |

இப்போது, மீதம் நான்கு பங்குகள் இருக்கின்றன. ஆகவே, இந்த சட்டத்தை ரத்துடைய அடிப்படையில் பின்வருமாறு அமைக்க வேண்டும்.

இறந்தவர் ميت — **மக்ரஜ் 2**

| பாட்டி | தாய்வழி சகோதரி |
|---|---|
| 1 | 1 |

அல்லது, வாரிசுகளில் 1/3 மூன்றில் ஒன்றை பெறுபவர்களும் 1/6 ஆறில் ஒன்றை பெறுபவர்களும் இருந்தால் அப்போது 3ல் இருந்து பங்கு வைக்க வேண்டும்.

**உதாரணம்:**

இறந்தவர் ميت **மக்ரஜ் 6 | 3=3**

| அம்மா | தாய்வழி சகோதரி 2 |
| --- | --- |
| 1/6 | 1/3 |
| 1 | 2 |

1 + 2 = 3

இதை ரத்து உடைய அடிப்படையில் இவ்வாறு அமைக்க வேண்டும்.

இறந்தவர் ميت **மக்ரஜ் 3**

| அம்மா | தாய்வழி சகோதரி 2 |
| --- | --- |
| 1 | 2 |

1 + 2 = 3

அல்லது, வாரிசுகளில் 1/2 இன்னும் 1/6 ஆகிய பங்குகளுக்கு உரியவர்கள் இருந்தால் 4ல் இருந்து பங்குகளை அமைக்க வேண்டும்.

**உதாரணம்:**

இறந்தவர் ميت **மக்ரஜ் 6-4=2**

| மகள் | மகனின் மகள் |
| --- | --- |
| 1/2 | 1/6 |
| 3 | 1 |

3 + 1 = 4

இதை ரத்து உடைய அடிப்படையில் இவ்வாறு அமைக்க வேண்டும்.

இறந்தவர் ميت **மக்ரஜ் 4**

| மகள் | மகனின் மகள் |
|---|---|
| 3 | 1 |

3 + 1 = 4

**உதாரணம்:**

இறந்தவர் ميت **மக்ரஜ் 6-4=2**

| மகள் | அம்மா |
|---|---|
| 1/2 | 1/6 |
| 3 | 1 |

3 + 1 = 4

இதை ரத்து உடைய அடிப்படையில் இவ்வாறு அமைக்க வேண்டும்.

இறந்தவர் ميت **மக்ரஜ் 4**

| மகள் | அம்மா |
|---|---|
| 3 | 1 |

3 + 1 = 4

அல்லது வாரிசுகளில் 2/3 மூன்றில் இரண்டைப் பெறுபவர்களும் 1/6 ஆறில் ஒன்றை பெறுபவரும் இருந்தால் அல்லது 1/2 பெறுபவர் மற்றும் 1/6 ஐ பெறக்கூடிய இரு வகையினர் இருந்தால், அல்லது 1/2 மற்றும் 1/3 ஐ பெறுகின்ற வாரிசுகள் இருந்தால் 5ல் இருந்து பங்குகளை அமைக்க வேண்டும்.

**உதாரணம்: (2 : 3, 1 : 6)**

இறந்தவர் ميت **மக்ரஜ் 6-5=1**

| மகள்கள் 2 | தாய் |
|---|---|
| 2/3 | 1/6 |
| 4 | 1 |

4 + 1 = 5

இதை ரத்து உடைய அடிப்படையில் இவ்வாறு அமைக்க வேண்டும்.

இறந்தவர் ميت **மக்ரஜ் 5**

| மகள்கள் 2 | தாய் |
|---|---|
| 4 | 1 |

4 + 1 = 5

**உதாரணம்: (1 : 2, 1 : 6, 1 : 6)**

இறந்தவர் ميت **மக்ரஜ் 6-5=1**

| மகள் | மகனின் மகள் | தாய் |
|---|---|---|
| 1/2 | 1/6 | 1/6 |
| 3 | 1 | 1 |

3 + 1 + 1 = 5

இதை ரத்து உடைய அடிப்படையில் இவ்வாறு அமைக்க வேண்டும்.

இறந்தவர் ميت **மக்ரஜ் 5**

| மகள் | மகனின் மகள் | தாய் |
|---|---|---|
| 3 | 1 | 1 |

3 + 1 + 1 = 5

**உதாரணம்: (1 : 2, 1 : 3)**

இறந்தவர் مــــــيــــــت **மக்ரஜ் 6-5=1**

↓ ↓

உடன் பிறந்த சகோதரி 1 தாய்வழி சகோதரி 2

1/2 1/3

3 2

3 + 2 = 5

இதை ரத்து உடைய அடிப்படையில் இவ்வாறு அமைக்க வேண்டும்.

இறந்தவர் مــــــيــــــت **மக்ரஜ் 5**

↓ ↓

உடன் பிறந்த சகோதரி 1 தாய்வழி சகோதரி 2

3 2

3 + 2 = 5

**உதாரணம்:**

இறந்தவர் مــــــيــــــت **மக்ரஜ் 6-5=1**

↓ ↓

உடன் பிறந்த சகோதரி 1 தாய்

1/2 1/3

3 2

3 + 2 = 5

இதை ரத்து உடைய அடிப்படையில் இவ்வாறு அமைக்க வேண்டும்.

இறந்தவர் مــــــيــــــت **மக்ரஜ் 5**

↓ ↓

உடன் பிறந்த சகோதரி 1 தாய்

3 2

3 + 2 = 5

**மூன்றாவது:** ரத்துக்கு உரியவர்கள் ஒரு வகையினர் மட்டும் இருப்பார்கள். ரத்துக்கு உரிமை பெறாதவர்களும் இருப்பார்கள். இப்போது ரத்துக்கு உரிமை பெறாதவர்களின் பங்கை அவர்களின் பங்குகளின் குறைவான மக்ரஜில் இருந்து கொடுக்க வேண்டும். இப்போது மீதமுள்ளவை ரத்துக்கு உரியவர்களின் தலைகளுக்கு சரியாக பங்காகி விட்டால் அப்படியே அமைத்துவிட வேண்டும்.

**உதாரணம்:**

இறந்தவர் مـــــــــــيـــــــــــت **மக்ரஜ் 4-1=3**

| | |
|---|---|
| கணவன் | மகள் 3 |
| 1/4 | 2/3 |
| 1 | 3 |

1 + 3 = 4

இங்கு கணவனுக்கு பங்கு கொடுக்கப்பட்டதற்குப் பிறகு ரத்துக்கு உரியவர்கள் ஒரு வகையினர் மட்டும்தான் இருக்கிறார்கள். ஆகவே, மீதமுள்ள பங்கு ரத்துக்கு உரியவர்களின் தலைகளுக்கு ஏற்ப சமமாக பங்காகி விடுகிறது.

அவ்வாறு இல்லாமல் மீதமுள்ள பங்குகள், ரத்துக்கு உரிய வாரிசுகளின் தலைகளுக்கு ஏற்ப கஸ்ர் - உடைதல் இன்றி பங்கு வைக்க முடியவில்லை என்றால் அவர்களின் தலைகளை எண்ணி, அதற்கும் மீதமுள்ள பங்கிற்கும் இடையில் முவாஃபகா இருந்தால் தலைகளின் வஃப்க் -சம வகுபாட்டு எண்ணை ரத்துக்கு உரித்தாகாதவரின் பங்குடைய மக்ரஜில் பெருக்க வேண்டும்.

**உதாரணம்:**

இறந்தவர் مـــــــــيـــــــــت மக்ரஜ் 12-11=1

கணவன் 1/4 3

மகள்கள் 6 2/3 8

3 + 8 = 11

இதை ரத்து உடைய அடிப்படையில் இவ்வாறு அமைக்க வேண்டும்.

இறந்தவர் مـــــــــيـــــــــت மக்ரஜ் 4-1=3, 2x4=8

கணவன் 1/4 1 2

மகள்கள் 6 2/3 3 6

2 + 6 = 8

மீதமுள்ளதற்கும் வாரிசுகளின் தலைக்கும் இடையில் முவாஃபகா இல்லை என்றால் அவர்களின் தலைகளின் மொத்த எண்ணிக்கையை ரத்துக்கு உரிமை இல்லாதவர்களின் பங்குடைய மக்ரஜில் பெருக்க வேண்டும். பெருக்கி வருவதை வைத்து பங்கிட வேண்டும்.

**உதாரணம்:**

இறந்தவர் مـــــــــيـــــــــت மக்ரஜ் 12-11=1

கணவன் 1/4 3

மகள்கள் 5 2/3 8

3 + 8 = 11

இதை ரத்து உடைய அடிப்படையில் இவ்வாறு அமைக்க வேண்டும்.

இறந்தவர் **ميت** **மக்ரஜ் 4-1=3, 5x4=20**

| கணவன் | மகள்கள் 5 |
|---|---|
| 1/4 | 2/3 |
| 1x5=5 | 3x5=15/5=3 |

**நான்காவது:** ரத்துக்கு உரியவர்கள் பல வகையினர் இருக்கின்றனர். ரத்துக்கு உரிமை இல்லாதவரும் இருக்கின்றார். இப்போது ரத்துக்கு உரிமை இல்லாதவருடைய பங்கின் மக்ரஜில் இருந்து மீதமானதை ரத்துக்கு உரிமை உள்ளவர்கள் மீது பங்கு வைக்க வேண்டும். பங்குகள் சரியாகிவிட்டால் அப்படியே அமைக்க வேண்டும்.

**உதாரணம்:**

இறந்தவர் **ميت** **மக்ரஜ் 12-9=3**

| மனைவி | பாட்டிகள் 4 | தாய்வழி சகோதரி 6 |
|---|---|---|
| 1/4 | 1/6 | 1/3 |
| 3 | 2 | 4 |

3 + 2 + 4 = 9

இங்கு 12 பங்குகளில் 9 பங்குகள்தான் கொடுக்கப்பட்டு இருக்கின்றன. 3 பங்குகள் மீதம் இருக்கின்றன. ஆகவே, இதை ரத்து உடைய சட்டத்தின் அடிப்படையில் பின்வருமாறு பங்கு வைக்க வேண்டும்.

இறந்தவர் **ميت** **மக்ரஜ் 4-1=3 4x12=48**

| மனைவி | பாட்டிகள் 4 | தாய்வழி சகோதரி 6 |
|---|---|---|
| 1/4 | 1/6 | 1/3 |
| 1 | 1 | 2 |
| 1x12=12 | 1x12=12 | 2x12=24 |
| 12 | 12/4=3 | 24/6=4 |

இங்கு மனைவிக்கு அவளுடைய பங்கை கொடுத்த பிறகு, மீதம் உண்டான பங்குகள் சகோதரிகளின் பங்குகளுக்கும் பாட்டிகளின் பங்குகளுக்கும் மீதம் இன்றி சரியாகிவிட்டன.

ஆனால், அந்த பங்குகளை தலைகளுக்கு கஸ்ர் -உடைத்தல் இன்றி சமமாக பங்கு வைக்க முடியவில்லை. ஆகவே, தஸ்ஹீஹ் உடைய பாடத்தில் சொல்லப்பட்ட சட்ட விதிகளின் படி இங்கு பங்குகளை அமைக்க வேண்டும்.

பாட்டிகளின் பங்கிற்கும் அவர்களின் தலைக்கும் இடையில் தபாயுன் இருப்பதால் தலைகளின் முழு எண்ணிக்கையை வைத்துக் கொள்ள வேண்டும். அது நான்காகும் 4.

பிறகு, சகோதரிகளின் (2) பங்கிற்கும் அவர்களின் (6) தலைகளுக்கும் இடையில் முவாஃபகா இருக்கின்ற காரணத்தால் அவர்களின் தலைகளின் எண்ணிக்கையின் சரிபாதியை எடுத்துக் கொள்வோம். அது மூன்றாகும் 3.

பிறகு, இந்த மூன்றை நான்கில் பெருக்க வேண்டும். 3x4=12 பிறகு இந்த 12ஐ (ரத்துக்கு உரிமை இல்லாதவருடைய பங்கிலிருந்து எடுக்கப்பட்ட) மக்ரஜ் 4ல் பெருக்க வேண்டும். 12x4=48. பிறகு, 48ல் இருந்து ஒவ்வொருவருடைய பங்குகளையும் கொடுக்கும்போது அந்த பங்குகளை அவர்களின் தலைகளின் எண்ணிக்கைக்கு ஏற்ப கஸ்ர் உடைத்தல் இன்றி சமமாக கொடுக்க முடியும்.

ரத்துக்கு உரிமை இல்லாதவருடைய பங்கை கொடுத்ததற்குப் பிறகு மீதம் உள்ளதிலிருந்து ரத்துக்கு உரியவர்களின் பங்குகளின் தலைகளுக்கு மத்தியில் சரியாக பிரிக்கப்பட முடியாமல் இருந்தால் ரத்துக்குரியவர்கள் அனைவருடைய பங்குகளின் மக்ரஜை ரத்துக்கு உரிமை இல்லாதவர்களின் மக்ரஜில் பெருக்க வேண்டும். இவ்வாறு பெருக்கி எது வருமோ அது இரு சாராருடைய பங்குகளின் மக்ரஜாக இருக்கும்.

**உதாரணம்:**

இறந்தவர் **مــــيــــت** **மக்ரஜ் 24-23=1**

| மனைவிகள் 4 | பாட்டிகள் 6 | மகள்கள் 9 |
|---|---|---|
| 1/8 | 1/6 | 2/3 |
| 3 | 4 | 16 |

3 + 4 + 16 = 23

இங்கு மொத்த பங்குகளில் 23 பங்குகள் கொடுக்கப்பட்ட பின் ஒரு பங்கு மீதமிருப்பதால் இது ரத்துடைய வகையைச் சேர்ந்த சட்டமாகும். ஆகவே, இதை கீழ்வருமாறு அமைக்க வேண்டும்.

இறந்தவர் **مــــيــــت** **மக்ரஜ் 8-1=7, 8x5=40**

| மனைவிகள் 4 | பாட்டிகள் 6 | மகள்கள் 9 |
|---|---|---|
| 1/8 | 1/6 | 2/3 |
| 1 | 1 | 4 |
| 5 | 1x7=7 | 4x7=28 |

5 + 7 + 28 = 40

அதாவது, மனைவிகளுடைய பங்கின் மக்ரஜிலிருந்து முதலாவதாக மனைவிக்கு ஒரு பங்கு கொடுக்கப்படும். பிறகு, 7 பங்குகள் மீதம் இருக்கின்றன. பாட்டிகள் மற்றும் மகள்களுடைய பங்குகளை முன்பு கூறப்பட்டது போன்று 5லிருந்து கொடுக்கப்படும். (காரணம் 2/3 என்பது 1/6 உடைய நான்கு மடங்குகளாகும்.) 7 பங்குகளை 5 பங்குகளாக ஆக்க முடியாத காரணத்தால் அந்த 5ஐ மனைவியுடைய பங்கின் மக்ரஜாகிய 8ல் பெருக்க வேண்டும். அப்போது 40 வரும். அந்த 40லிருந்து பங்குகள் பிரிக்கப்பட வேண்டும். மனைவிக்கு 40ல் 8ல் ஒரு பங்கு, 5 பங்குகள் கொடுக்கப்படும்.

பிறகு, பாட்டிகளின் பங்காகிய 1ஐ மனைவிகளின் பங்குடைய மக்ரஜிலிருந்து மீதம் உள்ளதில் அதாவது, 7ல் பெருக்க வேண்டும். 1 x 7 = 7.

அவ்வாறே மகள்களுடைய பங்காகிய 4ஐ மனைவிகளின் பங்குடைய மக்ரஜிலிருந்து மீதம் உள்ளதில் அதாவது, 7ல் பெருக்க வேண்டும். 4 x 7 = 28.

பிறகு, வாரிசுகளின் தலைகளுக்கு ஏற்ப அவர்களுக்கு கிடைத்த பங்குகளை கஸ்ர் - உடைவு இன்றி சமமாக பிரித்துக் கொடுக்க முடியவில்லை. ஆகவே, தஸ்ஹீஹ் உடைய பாடத்தில் கூறப்பட்ட வழிமுறையை கையாள வேண்டும்.

இறந்தவர் **مـــــيـــــت** **மக்ரஜ் 8-1=7, 8x5=40, 36x40=1440**

| மனைவிகள் 4 | பாட்டிகள் 6 | மகள்கள் 9 |
|---|---|---|
| 1/8 | 1/6 | 2/3 |
| 1 | 1 | 4 |
| 5 | 7 | 28 |
| 5X36=180 | 7X36=252 | 28X36=1008 |
| 180/4=45 | 252/6=42 | 1008/9=112 |

180 + 252 + 1008 = 1440

ஐந்து பங்குகளை நான்கு மனைவிகளுக்கு சமமாக பங்கிட முடியாது. 5க்கும் 4க்கும் இடையில் தபாயுன் உள்ளது. ஆகவே, 4ஐ வைத்துக் கொள்வோம்.

பாட்டிகளுடைய பங்காகிய 7ஐ அவர்களின் தலைகளாகிய 6க்கு சமமாக பங்கிட முடியாது. இவ்விரண்டிற்கும் இடையிலும் தபாயுன் உள்ளது. ஆகவே, 6ஐ வைத்துக் கொள்வோம்.

மகள்களுடைய பங்காகிய 28ஐ அவர்களின் தலைகளாகிய 9ல் சமமாக பங்கிட முடியாது. இவ்விரண்டிற்கு இடையிலும் தபாயுன் உள்ளது. ஆகவே, 9ஐ வைத்துக் கொள்வோம்.

4 6 9

தலைகளின் எண்ணிக்கைகளாகிய 4, 6, 9 இவற்றுக்கு மத்தியில் உள்ள தொடர்புகளை நாம் பார்க்கிறோம். 4க்கும் 6க்கும் இடையில் தவாஃஃபுக் உள்ளது. ஆகவே, 4 உடைய வஃஃப்காகிய 2ஐ 6ல் பெருக்க வேண்டும். 2 x 6 = 12.

பிறகு, 12க்கும் 9க்கும் இடையில் உள்ள தொடர்பை பார்க்கும்போது இரண்டுக்கும் இடையில் தவாஃஃபுக் உள்ளது. ஆகவே, 9உடைய வஃஃப்க் ஆகிய 3ஐ 12ல் பெருக்க வேண்டும். 3 x 12 = 36.

இந்த 36ஐ மேற்கூறிய சட்டத்தின் மக்ரஜாகிய 40ல் பெருக்க வேண்டும். 36 x 40 = 1440. இதிலிருந்து இந்த சட்டத்தை கஸ்ர் - உடைத்தல் இன்றி பிரிக்க முடியும்.

இறந்தவர் مـــــــيـــــــت **மக்ரஜ் 40X36=1440**

| மனைவிகள் 4 | பாட்டிகள் 6 | மகள்கள் 9 |
|---|---|---|
| 1/8 | 1/6 | 2/3 |
| 5 | 7 | 28 |
| 5x36=180 | 7x36=252 | 28x36=1008 |
| 180/4=45 | 252/6=42 | 1008/9=112 |

180 + 252 + 1008 = 1440

----------------------

# تَقْسِيمُ الْـمَالِ قَبْلَ الْـمَوتِ

# மரணத்திற்கு முன்னர் சொத்துக்களைப் பிரித்தல்

இஸ்லாமிய சொத்துரிமைச் சட்டத்தின் முக்கியத்துவம், அதனைப் பின்பற்றுவதன் அவசியம் என்பவற்றை ஆரம்ப பாடங்களில் நோக்கினோம். உயிரோடிருக்கும்போது பிள்ளைகளுக்கு மத்தியில் சொத்துக்களை பிரித்துக் கொடுத்தலோடு தொடர்பான இஸ்லாமிய ஷரீஆவின் நிலைப்பாட்டை இந்தப் பகுதியில் விளக்க முயற்சிக்கிறோம்.

சொத்துரிமைச் சட்டத்தோடு நேரடியாக இப்பகுதி தொடர்பு படுவதில்லை. ஏனெனில், சொத்துரிமைச் சட்டம் சொத்தின் உரிமையாளர் மரணித்ததன் பிறகு நடைமுறைப் படுத்தப்படுகின்ற ஒன்றாகும். ஆனால், பிள்ளைகளுக்கு சொத்துக்களை பிரித்துக் கொடுத்தல் உயிருடன் இருக்கும்போது நிகழும் ஒரு சொத்துப் பரிமாற்றமாகும். சொத்துரிமையோடு நேரடியாக இப்பகுதி தொடர்புபடாத போதிலும் எதிர்காலத்தில் வாரிசுகளாக மாற இருப்பவர்களுக்கு மத்தியில் சொத்துக்கள் பங்கிடப்படுவதால் மறைமுகமான உறவு ஒன்று இருப்பதையும் நம்மால் கவனிக்க முடியும்.

சொத்துக்கள் பகிர்ந்தளிக்கப்படுவதற்குரிய இவ்விரண்டு வழிமுறைகள் குறித்த போதிய அறிவு முஸ்லிம் சமூகத்தில் காணப்படாததால்

இவ்விரண்டு பகுதிகளையும் வெவ்வேறாக விளக்குவது மிகவும் பொருத்தம் எனக் கருதுகிறோம். சொத்துரிமைச் சட்டம், மரணத்திற்கு முன்னர் சொத்துக்களை பிரித்தல் என்பவற்றோடு தொடர்பான இஸ்லாமிய ஷரீஆ சட்டங்கள் பற்றிய தெளிவும், நடைமுறையும் முஸ்லிம் சமூகத்தில் நீண்ட நெடுங்காலமாக இல்லாதிருப்பதின் விளைவாக பிழையான கருத்துகள், வழிதவறிய நடைமுறைகள் அவர்களுக்கு மத்தியில் ஆழமாக வேரூன்றி இருப்பதைக் காணலாம். அவற்றை பின்வருமாறு அடையாளப்படுத்த முடியும்:

1. மரணிப்பதற்கு முன்னர் சொத்துக்களை வாரிசுகளில் சிலருக்கு உயில் எழுதிவிட்டுச் செல்லும் ஒரு மரபை பார்க்கிறோம்.

2. மரணிப்பதற்கு முன்பு அன்பளிப்பு என்ற பெயரில் முழுச் சொத்தையும் பிள்ளைகளுக்கு மத்தியில் பிரித்துக் கொடுத்திட வேண்டும் என்ற மனோ நிலையை பரவலாகக் காணலாம்.

3. மரணிப்பதற்கு முன்பே சொத்துக்களை பிள்ளைகளுக்கு மத்தியில் பகிர்ந்தளிக்காமல் மரணித்துப்போன பெற்றோரை சமூகம் குறை சொல்வதைப் பார்க்கலாம்.

4. சொத்துரிமையாளன் தான் சம்பாதித்த சொத்துக்களை பிள்ளைகளைத் திருமணம் முடித்து வைக்கின்ற வரைதான் சொத்துக்களுக்கு உரிமை பெறுவார் என்ற கருத்தும், நடைமுறையும் பரவலாக உள்ளது.

5. பிள்ளைகளுக்கு மத்தியிலே நியாயமற்ற அடிப்படையில் சொத்துக்கள் அன்பளிப்புச் செய்யப்படுகின்றன. நீதியற்ற இத்தகைய அன்பளிப்பினால் பலர் பாதிக்கப்படுவதைக் காணலாம்.

6. பிள்ளைகள் தத்தெடுத்து வளர்க்கப்படுவதையும் வளர்ப்பவர் அவர்களை தனது பிள்ளைகளாகக் கருதி சொத்தில் பங்கு வழங்குவதையும் பார்க்கலாம்.

இத்தகைய மிகவும் பிழையான கருத்துக்களும், வழிதவறிய

நடைமுறைகளும் பரவியிருக்கின்ற இஸ்லாமிய மார்க்கத்திற்கு மாற்றமான சமூக சூழலில் அவைகள் குறித்த மிகச் சரியான இஸ்லாமிய சிந்தனையை விளக்குவதும், அதனடிப்படையில் முன்மாதிரி மிக்க இஸ்லாமிய குடும்பங்களை உருவாக்குவதும் முதன்மையான பணிகளாக அமையும்.

பிறமத கலாச்சார பாதிப்புகளுக்கு உட்பட்டு வாழும் முஸ்லிம் சமூகத்தை தூய இஸ்லாமிய தனித்துவங்களை பயிற்றுவித்து அதில் ஆரோக்கியமான மாற்றமொன்றை ஏற்படுத்த வேண்டிய தேவையுள்ளது.

## உயில் எழுதுவது

இஸ்லாமிய சொத்துரிமைச் சட்டங்களுக்கு மாற்றமான, வாழும்போதே உயில் எழுதி வைக்கின்ற ஒரு மரபு இன்றைய சமூகத்தில் ஆழப்பதிந்து காணப்படுகிறது. இஸ்லாமிய நோக்கில் உயில் எழுதுதல் மிகவும் பிழையான மரபாகும். ஏனெனில், இஸ்லாமிய ஷரீஅத்தில் ஒருவர் மரணித்ததும் அவர் விட்டுச் செல்லும் குடும்பச் சொத்தை பங்கீடு செய்யும் அதிகாரம் அல்லாஹ்விற்கு மாத்திரமுண்டு.

இந்த வகையில் தான் விரும்பும் சிலருக்கு உயில் எழுதுவதானது இறைவன் விதித்த சொத்துரிமைச் சட்டங்களுக்கு மாறாக அமைகிறது. அவ்வாறு, மரணிப்பதற்கு முன் மரணசாசனம் எழுத விரும்பினால் அது அல்குர்ஆன் கூறிய சொத்துரிமைச் சட்டங்களுக்கேற்ப அமையவேண்டும். அதாவது, அதன் வடிவம் பின்வருமாறு அமைய முடியும். "நான் மரணித்ததும் வாரிசுகளுக்கு மத்தியில் இறைவழி காட்டலுக்கேற்ப சொத்துக்களைப் பகிர்ந்தளிக்குமாறு உயில் எழுதுகிறேன்."

இஸ்லாமிய சொத்துரிமைச் சட்டங்களுக்கு மாறாக மரணசாசனம் அமையுமானால் அதனை வாரிசுகள் பின்பற்ற வேண்டியதில்லை. மாறாக, அல்லாஹ்வின் சொத்துப் பங்கீட்டையே நடைமுறைப்படுத்த வேண்டும்.

மரணித்தோரின் சொத்துக்கள் பகிர்ந்தளிக்கப்படும் முறைகள் குறித்து

சட்டங்கள் எதுவும் சொல்லாத பிறமதங்களை பின்பற்றுவோர் தாம் விரும்புவோருக்கு சொத்துக்கள் போய்ச்சேர வேண்டும் என்பதற்காக உயில் எழுதி வைக்கும் மரபை உருவாக்கிக் கொண்டார்கள். ஆனால், முஸ்லிம்கள் இப்படி பிழையான மரபை பின்பற்ற வேண்டிய எந்தவிதத் தேவையுமில்லை. ஏனெனில், அல்லாஹு தஆலா முன்கூட்டியே குடும்பச் சொத்துக்களுக்கான சட்டங்களை மிகத் தெளிவாகக் குறிப்பிட்டுள்ளான்.

## உயிருடன் இருக்கும்போது உயில் எழுதலாமா?

இஸ்லாமிய ஷரீஆவின் கண்ணோட்டத்தில் சொத்தின் உரிமையாளன் தான் சம்பாதித்த சொத்துக்களுக்கு மரணிக்கும் வரை பூரண உரிமை உடையவனாகக் கருதப்படுகிறான். இஸ்லாம் விதியாக்கிய கடமைகளை நிறைவேற்றவும் உலகில் கௌரவமாக வாழவும், எதிர்காலம் குறித்த அச்சமின்றி இருக்கவும் தொடர்ந்து சொத்துக்களை வைத்திருப்பது ஒரு முஸ்லிமுக்கு இன்றியமையாததாகும். ஸகாத், ஹஜ், தஃவா போன்ற இஸ்லாமிய கடமைகளை நிறைவேற்றவும், குடும்ப மற்றும் சமூகரீதியான செலவீனங்களை மேற்கொள்ளவும் சொத்துரிமை தவிர்க்க முடியாத ஒன்றாகும். எனவேதான் இஸ்லாம் ஒருவனுக்குரிய சொத்துரிமையை ஆரம்பம் முதல் இறுதிவரை உத்தரவாதப்படுத்துகிறது.

மாறாக, உயிருடன் இருக்கும்போதே பிள்ளைகளுக்கு மத்தியில் சொத்துக்கள் அனைத்தையும் அன்பளிப்பாக வழங்கிவிட வேண்டும் என்றோ, அல்லது அவற்றை பிள்ளைகளுக்கு எழுதி வைத்துவிட வேண்டும் என்றோ இஸ்லாம் கட்டாயப்படுத்திக் கூறவில்லை. அதேவேளை ஒருவர் தனது சொத்தை முழு விருப்பத்தோடு தனது பிள்ளைகளுக்கு மத்தியில் நீதியாக பகிர்ந்தளிப்பதில் எந்தத் தவறுமில்லை. ஆனால், அவ்வாறு அன்பளிப்புச் செய்தல் சமூகத்தில் காணப்படும் சீதனம் போன்ற மிகவும் பிழையான, இஸ்லாமிற்கு மாற்றமான வழக்கங்களை நடைமுறைப்படுத்தும் வகையில் அமையவும் கூடாது.

மருமகனின் அழுத்தங்களுக்குப் பயந்தோ அல்லது பிள்ளைகளின்

வற்புறுத்தல்களின் பேரிலோ அன்பளிப்பு நிகழக்கூடாது. அவ்வாறு வழங்குவதை இஸ்லாம் அன்பளிப்பாகக் கருதுவதில்லை. இஸ்லாம் உருவாக்காத பிறமத கலாச்சாரங்களால் முஸ்லிம் சமூகத்தினுள் உருவாகிய சொத்து குறித்த பிழையான வழக்கங்களின் பின்னணியில் குடும்பம், திருமணம், சொத்துப் பங்கீடு என்பவற்றை நோக்குவது மிகவும் தவறாகும்.

சொத்துக்களை உயிரோடு இருக்கும்போதே ஏதோவொரு அடிப்படையில் பிள்ளைகளுக்கு மத்தியில் பிரித்துக் கொடுத்துவிட வேண்டும். இல்லையேல் பின்னர் பிரச்சினைகள் ஏற்படலாம் என்பது போன்ற கருத்துக்களை முஸ்லிம் சமூகத்தின் குடும்பங்களுக்கு மத்தியிலே மிகவும் பரவலாக பார்க்கலாம்.

இஸ்லாமிய சொத்துரிமைச் சட்டங்கள் குறித்த எந்தவித கல்வியறிவு அற்றவர்கள் மாத்திரமே இப்படிக் கருத்துத் தெரிவிக்க முடியும். இக்கருத்து மிகப் பரவலாக சமுதாய மட்டத்திலே காணப்படுவது இஸ்லாமிய சொத்துரிமை குறித்த அறிவு நமது சமூகத்திலே பூஜ்ஜிய நிலையிலுள்ளது என்பதை நம்மால் உணர்ந்து கொள்ள முடிகிறது.

எந்த மதத்தின் கொள்கைகளிலும் காணப்படாத ஒரு சிறப்பம்சமாக மரணித்தவரின் குடும்பச் சொத்துக்களுக்கு மிகவும் தெளிவான சட்டங்களைச் சொன்ன தனிச் சிறப்பம்சமும், பெருமையும் இஸ்லாமையே சாரும். இத்தகைய கண்ணியமிக்க இஸ்லாமை பிரதிநிதித்துவப்படுத்துகின்ற நாம் இப்படியாகக் கருதிக்கொள்வதும், பிழையாக நடந்துகொள்வதும் இஸ்லாமிய ஷரீஆவை விட்டும் நாம் வெகு தூரத்திலுள்ளோம் என்பதை உணர்த்துகிறது.

## தத்தெடுத்து வளர்க்கும் பிள்ளைகளுக்கு சொத்தில் பங்கு உண்டா?

ஜாஹிலிய்யா உருவாக்கிய அனைத்து பிழையான கலாச்சார மற்றும் சமூக ஒழுங்குகளை நீக்கிய அல்லது நெறிப்படுத்திய இஸ்லாம் பிள்ளைகளை தத்தெடுத்து வளர்க்கும் பிழையான மரபையும் தடைசெய்தது. தத்தெடுத்து பிள்ளைகளை வளர்ப்பதை தடைசெய்த

இஸ்லாம், அவர்கள் சொந்தப் பிள்ளைகளல்ல என்ற காரணத்தினால் அவர்களுக்கு குடும்பச் சொத்தில் எந்தப் பங்கும் கிடையாது என்பதையும் வலியுறுத்தியது. இஸ்லாம் பல நூற்றாண்டுகளுக்கு முன்னர் அழித்தொழித்த ஜாஹிலிய்யா மரபுகளை பின்பற்றிக்கொண்டு அவற்றை விட்டுக் கொடுக்காமல் இஸ்லாமை பின்பற்ற நினைப்பது மிகப் பெரும் தவறாகும்.

ஸூறதுல் அஹ்ஸாபிலே அல்லாஹு தஆலா தத்தெடுத்து வளர்ப்பதை தடைசெய்வது குறித்து பின்வருமாறு கூறுகிறான்:

**وَمَا جَعَلَ أَدْعِيَاءَكُمْ أَبْنَاءَكُمْ ۚ ذَٰلِكُمْ قَوْلُكُمْ بِأَفْوَاهِكُمْ ۖ وَاللَّهُ يَقُولُ الْحَقَّ وَهُوَ يَهْدِي السَّبِيلَ○ ادْعُوهُمْ لِآبَائِهِمْ هُوَ أَقْسَطُ عِنْدَ اللَّهِ ۚ فَإِنْ لَمْ تَعْلَمُوا آبَاءَهُمْ فَإِخْوَانُكُمْ فِي الدِّينِ وَمَوَالِيكُمْ ۚ وَلَيْسَ عَلَيْكُمْ جُنَاحٌ فِيمَا أَخْطَأْتُمْ بِهِ وَلَٰكِنْ مَا تَعَمَّدَتْ قُلُوبُكُمْ ۚ وَكَانَ اللَّهُ غَفُورًا رَحِيمًا○**

(அவ்வாறே உங்களுக்குப் பிறக்காத எவரையும் உங்கள் பிள்ளை என்றும்) நீங்கள் தத்தெடுத்துக் கொள்வதனால் அவர்களை உங்கள் (உண்மைச்) சந்ததிகளாக்கிவிட மாட்டான். இவை அனைத்தும் உங்கள் வாய்களால் கூறும் வெறும் வார்த்தைகளே (தவிர. உண்மையல்ல). அல்லாஹ் உண்மையையே கூறி, அவன் உங்களுக்கு நேரான வழியை அறிவிக்கிறான். ஆகவே, நீங்கள் (வளர்த்த) எவர்களையும் அவர்களுடைய (உண்மையான) தந்தைகளின் பெயர்களைக் கூறி (அன்னாரின் மகன் என்றே) அழையுங்கள். அதுதான் அல்லாஹ்விடத்தில் நீதமாக இருக்கிறது. அவர்களின் தந்தைகளை நீங்கள் அறியாவிட்டால், அவர்கள் உங்கள் மார்க்க சகோதரர்களாகவும் உங்கள் மார்க்க நண்பர்களாகவும் இருக்கின்றனர். (ஆகவே, அவர்களுடைய வயதுக்குத்தக்க முறையில் அவர்களை சகோதரர் என்றோ அல்லது நண்பரென்றோ அழையுங்கள்.

இவ்விஷயத்தில் இதற்கு முன்னர்) நீங்கள் ஏதும் தவறிழைத்திருந்தால் அதைப் பற்றி உங்கள் மீது குற்றமில்லை. (எனினும், இதன் பின்னர்) வேண்டுமென்றே நீங்கள் மனமார கூறினாலே தவிர (அதுதான் உங்கள் மீது குற்றமாகும்). அல்லாஹ் மிக மன்னிப்பவனாக, மகா கருணை உடையவனாக இருக்கிறான். (அல்குர்ஆன் 33 : 4-5)

சொத்துரிமை, பிள்ளைகளுக்கு மத்தியில் சொத்துக்களை பிரித்துக் கொடுத்தல், குடும்பச் சொத்துப் பங்கீடு என்பவை தொடர்பாக எழுந்த இஸ்லாமிய ஷரீஅத்துக்கு மாற்றமான கருத்துக்கள், நடை முறைகளைக் குறிப்பிட்டு, அவை பற்றிய இஸ்லாமிய ஷரீஆவின் நிலைப்பாட்டை விளக்கினோம்.

மேற்கூறிய இஸ்லாமிய பின்னணியில் நின்று பிள்ளைகளுக்கு மத்தியில் சொத்துக்களை பிரித்துக் கொடுத்தல் தொடர்பான இஸ்லாமிய ஷரீஆவின் நிலைப்பாட்டை ஆழ்ந்து கவனிக்க வேண்டியுள்ளது.

## குடும்பச் சொத்தை பங்கீடு செய்வது மற்றும் அன்பளிப்புச் செய்வது

உயிருடனிருக்கும்போது பிள்ளைகளுக்கு மத்தியில் சொத்துக்களை பிரித்துக் கொடுத்தலோடு தொடர்பான இரு வேறுபட்ட நிலைப்பாடுகள் இமாம்களுக்கு மத்தியில் நிலவுகின்றன.

(1) மாலிக் ﵀, ஷாஃபிஈ ﵀ மத்ஹபினரும், ஹனபி மத்ஹபைச் சேர்ந்த இமாம் அபூ யூஸுப் ﵀ போன்றோரும் பிள்ளைகளுக்கு மத்தியில் சொத்துக்கள் பாரபட்சமின்றி நீதியாக பகிரப்பட வேண்டும் என்ற கருத்தைக் கொண்டுள்ளனர்.

இக்கருத்துக்கு சார்பாக அவர்கள் பின்வரும் ஆதாரங்களை முன்வைக்கிறார்கள்:

இமாம் புகாரி ﵀ ஸஹீஹுல் புகாரியில் “பிள்ளைகளுக்கு அன்பளிப்புச் செய்தல்” என்ற தலைப்பில் ஒரு பாடம் அமைத்து அதில் பின்வருமாறு குறிப்பிடுகிறார்கள்: பிள்ளைகளில் சிலருக்கு

அன்பளிப்புச் செய்தல் கூடாது. மாறாக அவர்களுக்கு மத்தியில் நீதியாக நடந்து கொள்ள வேண்டும். எனவே, பிள்ளைகள் எல்லோருடனும் அதேபோன்று நடந்துகொள்ள வேண்டும். அநீதியாக நடக்கக்கூடாது.

நபி ﷺ அவர்கள் கூறினார்கள்:

اعْدِلُوا بَيْنَ أَوْلاَدِكُمْ فِي العَطِيَّةِ

அன்பளிப்புச் செய்வதில் உங்கள் பிள்ளைகளுக்கு மத்தியில் நீதம் செலுத்துங்கள்.[20]

**عَنْ عَامِرٍ قَالَ سَمِعْتُ النُّعْمَانَ بْنَ بَشِيرٍ رضي الله عنهما وَهُوَ عَلَى المِنْبَرِ يَقُولُ أَعْطَانِي أَبِي عَطِيَّةً فَقَالَتْ عَمْرَةُ بِنْتُ رَوَاحَةَ لاَ أَرْضَى حَتَّى تُشْهِدَ رَسُولَ اللهِ ﷺ فَأَتَى رَسُولَ اللهِ ﷺ فَقَالَ إِنِّي أَعْطَيْتُ ابْنِي مِنْ عَمْرَةَ بِنْتِ رَوَاحَةَ عَطِيَّةً فَأَمَرَتْنِي أَنْ أُشْهِدَكَ يَا رَسُولَ اللهِ قَالَ أَعْطَيْتَ سَائِرَ وَلَدِكَ مِثْلَ هٰذَا قَالَ لاَ قَالَ فَاتَّقُوا اللهَ وَاعْدِلُوا بَيْنَ أَوْلاَدِكُمْ قَالَ فَرَجَعَ فَرَدَّ عَطِيَّتَهُ**

நுஃமான் பின் பஷீர் ﵁ அவர்கள் மின்பரில் ஏறிச் சொன்னதை தான் செவிமடுத்ததாக இப்னு ஆமிர் ﵀ அவர்கள் கூறுகிறார்கள்: "எனது தந்தை எனக்கு அன்பளிப்பு ஒன்றை வழங்கினார். அப்போது அம்ரா பின்த் ரவாஹா ﵁ அவர்கள் கூறினார்கள்: இறைத் தூதரை நீங்கள் சாட்சியாக நிறுத்துகின்ற வரை நான் திருப்தியடைய மாட்டேன். அப்போது எனது தந்தை நபி ﷺ அவர்களிடம் வந்து "நான் அம்ராவின் மூலமாக கிடைத்த எனது மகனுக்கு ஓர் அன்பளிப்பை வழங்கினேன். அல்லாஹ்வின் தூதரே! எனது மனைவி உங்களை அதற்கு சாட்சியாக நிறுத்தும்படி ஏவினாள். அதற்கு நபி ﷺ அவர்கள் கேட்டார்கள்: இதே போன்று உன்னுடைய ஏனைய பிள்ளைகளுக்கும் கொடுத்தீர்களா? இல்லை எனக் கூறியதற்கு, நபியவர்கள் "நீங்கள்

20. பாபுல் இஷ்ஹாத் பில் ஹிபா - (ஸஹீஹுல் புகாரி)

அல்லாஹ்வைப் பயந்துகொள்ளுங்கள். உங்களது பிள்ளைகளுக்கு மத்தியிலே நீதியாக நடந்துகொள்ளுங்கள் என்று கூறினார்கள்.[21]

ஆகவே, பஷீர் ﵁ அவர்கள் தங்களது அன்பளிப்பை மகனிடமிருந்து திரும்ப வாங்கிக் கொண்டார்கள்.

ஸஹீஹ் முஸ்லிமில் பதிவுசெய்யப்பட்டுள்ள மற்றோர் அறிவிப்பில்

عَنِ النُّعْمَانِ بْنِ بَشِيرٍ ﵁ قَالَ أَتَى بِي أَبِي إِلَى رَسُولِ اللهِ ﷺ فَقَالَ إِنِّي نَحَلْتُ ابْنِي هَذَا غُلَامًا فَقَالَ أَكُلَّ بَنِيكَ نَحَلْتَ؟ قَالَ لَا قَالَ فَارْدُدْهُ

என்னை எனது தந்தை நபி ﷺ அவர்களிடம் அழைத்து வந்தார். மேலும், நிச்சயமாக நான் என்னுடைய இந்த மகனுக்கு ஒரு அடிமையை அன்பளிப்பாகக் கொடுத்தேன் என்று கூறினார். அதற்கு, நபி ﷺ அவர்கள் கூறினார்கள்: "உன்னுடைய ஆண் பிள்ளைகள் எல்லோருக்கும் (இதுபோன்று) நீ அன்பளிப்புக் கொடுத்தாயா?" அவர் இல்லை என்று கூறினார். அதற்கு, நபி ﷺ அவர்கள் கூறினார்கள்: "நீ அதை திரும்ப வாங்கிக் கொள்."[22]

எனவே ஏற்றத் தாழ்வாக வழங்கப்பட்ட அந்த அன்பளிப்பு திருப்பிப் பெறப்பட்டது.

ஸஹீஹுல் புகாரியிலே பதிவு செய்யப்பட்டுள்ள பின்வரும் சம்பவமும் இக்கருத்துக்கு ஆதாரமாக அமைகிறது.

நபி ﷺ அவர்கள் உமர் ﵁ அவர்களிடமிருந்து ஓர் ஒட்டகத்தை வாங்கி பின்னர் அதனை உமரின் மகன் அப்துல்லாஹ்வுக்கு அன்பளிப்புச் செய்துவிட்டு பின்வருமாறு கூறினார்கள்: "நீ விரும்பியதை அதன் மூலம் செய்."[23]

மேற்கூறிய சம்பவத்தை விளக்குகின்ற இமாம் இப்னு பத்தால் ﵀

---

21. ஸஹீஹுல் புகாரி 2587

22. அறிவிப்பாளர்: நுஃமான் இப்னு பஷீர் ﵄, நூல்: ஸஹீஹுல் முஸ்லிம் 1623

23. ஸஹீஹுல் புகாரி : 2586

அவர்களின் கருத்தை இமாம் இப்னு ஹஜர் அல் அஸ்கலானி ﵀ ஃபத்ஹுல் பாரியிலே குறிப்பிடுகிறார்:

அப்துல்லாஹ் இப்னு உமர் ﵄ அவர்கள் அறிவிக்கும் ஹதீஸுக்கும், இமாம் புகாரி இட்டுள்ள தலைப்புக்கும் இடையிலான தொடர்பு யாதெனில், நபி ﷺ அவர்கள் உமர் ﵁ அவர்களிடம், அவரின் மகன் அப்துல்லாஹ்வுக்கு ஒட்டகத்தை அன்பளிப்பாக வழங்கி விடுங்கள் என்று சொல்லியிருந்தால் உடனே அவர் அதனை நிறைவேற்றி இருப்பார். ஆனால், அது உமரின் ஏனைய பிள்ளைகளுக்கு மத்தியிலே நீதி செலுத்தியதாக இருக்காது. இதன் காரணமாக நபி ﷺ அவர்கள் உமரிடமிருந்து அதை விலைக்கு வாங்கி, பிறகு உமருடைய மகன் அப்துல்லாஹ்வுக்கு அதை அன்பளிப்புச் செய்தார்கள்.[24]

மேற்குறிப்பிடப்பட்ட ஹதீஸ்கள் பிள்ளைகளுக்கு மத்தியில் சொத்துக்களை அன்பளிப்புச் செய்யும்போது மிகவும் நீதியாக நடந்து கொள்ள வேண்டும் என்ற கருத்தை வலியுறுத்துகின்றன. அநீதியாக வழங்கப்பட்ட சொத்துக்களை மீளப் பெறுமாறும் நபி ﷺ அவர்கள் கட்டளையிட்டதையும் பார்க்கலாம். தக்வாவுள்ள எந்த முஃமினும் இதில் அநீதியிழைக்க மாட்டார்கள் என்ற உண்மையையும் நாம் புரிந்து கொள்கிறோம்.

இறைத்தூதர் ﷺ அவர்கள் கூறினார்கள்:

اِعْدِلُوا بَيْنَ أَوْلَادِكُمْ فِي النُّحْلِ كَمَا تُحِبُّونَ أَنْ يَعْدِلُوا بَيْنَكُمْ فِي الْبِرِّ وَاللُّطْفِ

அன்பளிப்புக் கொடுப்பதில் உங்கள் பிள்ளைகளுக்கு மத்தியில் நீதமாக நடந்து கௌ்ளுங்கள், அவர்கள் (உங்களுக்கு) நன்மை செய்வதிலும் கருணை காட்டுவதிலும் உங்களுக்கு மத்தியில் நீதமாக நடந்து கொள்ள வேண்டும் என்று நீங்கள் விரும்புவதைப் போன்று.[25]

24. ஃபத்ஹுல் பாரி 5-212

25. அறிவிப்பாளர்: நுஃமான் இப்னு பஷீர் ﵄, நூல்: அஸ்ஸுனன் அல்குப்ரா பைஹகீ 12003

மேற்குறிப்பிட்ட ஹதீஸ்களை ஆதாரமாகக் கொண்டு மாலிக், ஷாஃபிஈ மத்ஹபினரும், ஹனபி மத்ஹபின் சில இமாம்களும், பெரும்பாலான அறிஞர்களும் பிள்ளைகளுக்கு சொத்துக்களை அன்பளிப்புச் செய்யும்போது நீதி பேணப்பட வேண்டும் என்ற நிலைப்பாட்டை பெற்றுள்ளார்கள்.

**குறிப்பு:** பிள்ளைகளுக்கு மத்தியில் பங்கிடப்படும் சொத்து சமமாக இருத்தல் என்று கூறுவதை விட நீதியாக இருத்தல் என்பதே மிகவும் பொருத்தமானதாகும். ஏனெனில் நீதியும், சமத்துவமும் சிலவேளை வித்தியாசப்பட முடியும். பாதிக்கப்பட்ட பிள்ளைகள், குடும்பப் பொறுப்புக்களை மேற்கொண்டவர்கள் அன்பளிப்பாக அதிகம் பெறமுடியும். எனவேதான் இமாம்களான ஷாபிஈ, மாலிக், ஹனபி மத்ஹபினர் நன்கொடையில் சமத்துவமிருத்தல் என்பது கட்டாயமில்லை என்பதாகவும், அதில் நீதியான முறையில் ஏற்றத் தாழ்வு இருக்க முடியும் என்றும் அபிப்பிராயம் தெரிவிக்கின்றார்கள்.

(2) இமாம் அஹ்மத் பின் ஹன்பல் ﷺ அவர்களது மத்ஹபினர் முழுச் சொத்தையும் உயிருடன் இருக்கும்போது பிள்ளைகளுக்கு மத்தியில் பிரித்துக் கொடுக்க முடியாது என்றும், அவ்வாறு வழங்குவோர் அல்குர்ஆன் வரையறுத்த சொத்துரிமைச் சட்டத்தின் அடிப்படையில் சொத்துக்களை வாரிசுகளுக்கு மத்தியில் பகிர்ந்தளிக்க வேண்டும் என்ற கருத்தையும் கொண்டுள்ளார்கள். இமாம் இப்னு குதாமா ﵀ **المغني** முக்னி என்ற தனது நூலில் நீதி என்பதற்கு சமத்துவம் பேணவேண்டிய நிலையில் சமமாகவும் ஏற்றத்தாழ்வான சூழ்நிலைகளில் ஏற்றத்தாழ்வாகவும் நடந்து கொள்வது என்று வரைவிலக்கணப்படுத்துகிறார். ஹன்பலி மத்ஹபின் கருத்தை ஆதரித்து மிகவும் விரிவாக விளக்கியுள்ளார்கள். அவர்கள் குறிப்பிடும் ஆதாரங்களைச் சுருக்கமாக இங்கு தருகிறோம்:

(i) அல்லாஹு தஆலா குடும்பச் சொத்தை மிகத் தெளிவாக பகிர்ந்தளித்துள்ளான். பெண் பெறுவதைப் போன்று இரு பங்கை ஆண் பெறுவதாகவும் குறிப்பிட்டுள்ளான். உயிருடன் இருக்கும்

போது அன்பளிப்பாகச் சொத்துக்களைப் பகிர்வதும், மரணித்தப் பிறகு சொத்தைப் பங்கீடு செய்வதும் சமமாகும். இறப்பதற்கு முன்னர் முழுச் சொத்தையும் பிரித்துக் கொடுப்பதற்கும் இறந்த பின்னர் சொத்து பிரிக்கப்படுவதற்குமான இஸ்லாமிய சட்டம் ஒன்றாகவே இருக்கும். மரணிப்பதற்கு முன்பே சொத்துக்கள் பிரிக்கப்படுவதால் இறை சட்டத்தில் எந்த மாற்றமும் ஏற்படுவதில்லை. ஸகாத் கடமையாவதற்கு முன்னர் ஸகாத்தை வழங்குவோர் ஸகாதுக்குரிய நிஸாபைப் பேணியே அதனை வழங்க வேண்டும். முன்கூட்டியே வழங்குவதால் நிஸாபில் எந்த மாற்றமும் ஏற்படுவதில்லை. இதே இஸ்லாமிய சட்ட சிந்தனை சொத்துக்களை மரணிப்பதற்கு முன்னர் அன்பளிப்பாக வழங்குவோருக்கும் பொருந்தும். இந்த வகையில் சொத்துரிமைச் சட்டங்களுக்கேற்பவே சொத்துக்கள் உயிருடனிருக்கும் போது பங்கிடப்பட வேண்டும் என்பது தெளிவாகிறது.

(ii) பிள்ளைகளில் பெண்ணைவிட ஆண் கூடுதலாக சொத்துப் பெறுவதே மிகவும் நியாயமாகும். ஏனெனில், இஸ்லாம் அனைத்து செலவீனங்களையும் ஆணின் மீதே சுமத்தியுள்ளது. மஹர்[26], மனைவிக்குரிய ஆடைகள், வீடு, ஏனைய செலவீனங்கள், பிள்ளைகளுக்கான செலவீனங்கள் அனைத்தும் ஆணையே சாரும். எனவே, இந்த வகையில் அன்பளிப்பாக சொத்துக்களை பிள்ளைகளுக்கு மத்தியில் பிரித்துக் கொடுக்கும்போது சொத்துரிமைச் சட்டம் பின்பற்றப்படுமாயின் அங்கு ஆண் பெண்ணைவிட இருமடங்கு சொத்துக்களைப் பெற்றுக்கொள்கிறான். இது நீதமான சொத்துப் பங்கீடாக அமையும்.

(iii) ஸஹீஹுல் புகாரியில் பதிவுசெய்யப்பட்டுள்ள நுஃமான் பின் பஷீர் ﷺ அவர்கள் தொடர்பான சம்பவம் குறிப்பிட்டதொரு நிகழ்வாகும். ஒரு சந்தர்ப்பத்தில் நடந்த ஒரு நிகழ்வை மிகப் பொதுவான கருத்தாக வைத்து நோக்க முடியாது. அதேபோன்ற ஒரு நிகழ்வுக்கே இந்தத் தீர்ப்பு பொருந்தும். அதேவேளை பஷீருடைய பிள்ளைகள் ஆண்களா அல்லது பெண்களா என்பது கூட

26. மஹர் என்பது திருமணம் முடிக்கும்போது மனைவிக்கு கணவன் கொடுக்க வேண்டிய கட்டாயமான அன்பளிப்பாகும்.

தெளிவாக அறிய முடியாமல் உள்ளது. எனவே, இந்த ஹதீஸ் கூறுகின்ற கருத்தை பொதுவான சட்ட நிலைப்பாடாக எடுக்க முடியாது. இமாம் இப்னு குதாமா ﵀ ஹன்பலி மத்ஹபுடைய நிலைப்பாட்டையே பலமான கருத்தாகக் கொள்கிறார் என்பதும் குறிப்பிடத்தக்கது.[27]

மரணிப்பதற்கு முன்னர் சொத்துக்களை பிரித்துக் கொடுப்பதோடு தொடர்பான இரு வித்தியாசமான நிலைப்பாடுகளை ஆதாரங்களோடு நோக்கினோம். இங்கு ஒரு விஷயத்தை நாம் மிகவும் தெளிவாகப் புரிந்துகொள்ள வேண்டும். பெற்றோர் முழுச் சொத்தையும் வழங்காது சில பகுதிகளை பிள்ளைகளுக்கு அன்பளிப்புச் செய்வதாயின் நீதியின் அடிப்படையில் வழங்க வேண்டும் என்பது இமாம்களுக்கு மத்தியில் கருத்து வேறுபாடுகளில்லாத மிகத் தெளிவான விஷயமாகும். முழுச் சொத்தையும் பிரித்துக் கொடுப்பதாயின் இரு வித்தியாசமான பங்கீட்டு முறைகள் தோன்ற முடியும் என்பதையே மேற்கூறிய கருத்துக்களிலிருந்து நாம் பார்த்தோம்.

(i) **சொத்துரிமைச் சட்டங்களுக்கேற்ப பிரித்தல்**

(ii) **ஏற்றத்தாழ்வுகளின்றி சரிசமமாகப் பிரித்தல்.**

மரணிப்பதற்கு முன் முழுச் சொத்தையும் பிரித்துக் கொடுப்பதோடு தொடர்பான இரு வித்தியாசமான நிலைப்பாடுகள் நமக்கு முன்னால் உள்ளன. மார்க்கத்தில் கருத்து வேறுபாடுகள் தோன்றுவது தவிர்க்க முடியாதது. இவ்விரு நிலைப்பாடுகளும் தூய இஸ்லாமிய ஷரீஆவின் ஒளியில் மேற்கொள்ளப்பட்ட இஜ்திஹாதின் விளைவாகத் தோன்றிய கருத்துக்கள் என்பதை நாம் புரிந்து கொள்ள வேண்டும்.

எனினும், இங்கு ஒரு விஷயத்தைத் தெளிவாகப் புரிந்து கொள்ள வேண்டியுள்ளது. நமது சமூகத்தில் மரணத்திற்கு முன்னர் பிள்ளைகளுக்கு மத்தியில் முழுச் சொத்தையும் எழுதிக் கொடுத்தல் அல்லது பிரித்துக் கொடுத்தல் என்ற மரபு சமூக நிர்ப்பந்தங்களினால் தோற்றுவிக்கப்பட்டதாகும். இதனை பெற்றோர் பிள்ளைகளுக்கு

27. கிதாபுல் முக்னி 8 : 258.

அன்பளிப்பாகக் கொடுத்தல் என்று சொல்வது பொருத்தமாக இல்லை. ஏனெனில், அன்பளிப்பு என்பது இயல்பான சூழலில், மனம் விரும்பி இடம்பெறும் ஒரு சொத்துப் பரிமாற்றமாகும். ஆனால் இங்கு நிர்ப்பந்தமான காரணிகளினால் சொத்து பங்கு போடப்படுகின்றன.

இந்நிலையில் இமாம் இப்னு குதாமா ﵀ முக்னி என்ற தனது நூலில் ஆதாரங்களை முன்வைத்து விவாதிப்பது போன்று முழுச் சொத்தையும் மரணத்திற்கு முன் பிரித்துக் கொடுப்பதாயின் இஸ்லாமிய சொத்துரிமைச் சட்டங்களுக்கேற்ப பிரிப்பதே மிகவும் பலமான கருத்தாகத் தெரிகிறது.

இப்போதுள்ள நமது சமூக மரபுகளுக்கேற்ப முழுச் சொத்தையும் அன்பளிப்பாக நீதியடிப்படையில் வழங்க முடியும் எனும்போது இஸ்லாம் அனுமதிக்காத சீதனம், சமூக அநீதி என்பவற்றுக்கு மறைமுகமாக வழியமைப்பதாக அமைந்து விடுகின்றது. இந்த வகையில் இத்தகைய தீமைகளைத் தவிர்ப்பதற்கு முழுச் சொத்தையும் உயிருடன் இருக்கும்போது பிரித்துக் கொடுக்க வேண்டிய நிர்ப்பந்தங்கள் ஏற்படுமாயின் சொத்துரிமை சட்டங்களுக்கேற்ப பிரிப்பதே மிகவும் பலமான கருத்தாகக் கருதலாம்.

அல்லாஹு தஆலா மிகவும் நன்கறிந்தவன்.

----------------------

حَقِّيَّةُ إِرْثِ النِّسَاءِ وَعَدْلُ الْإِسْلَامِ

# பெண்களின் சொத்துரிமையும் இஸ்லாமின் நீதியும்

வரலாற்று நெடுகிலும் இஸ்லாமிற்கு எதிரான பல்வேறுபட்ட குற்றச் சாட்டுகள் அதன் எதிரிகளால் முன்வைக்கப்பட்டு வந்துள்ளன. நவீன காலத்தில் கொள்கைகளும், சிந்தனைகளும் தோற்றுவிக்கப்பட்டு அவற்றின் வழியாக புதிய பாணியில் இஸ்லாமின் போதனைகளை விமர்சனத்துக்கு உள்ளாக்கும் ஒரு மரபு உருவாகியுள்ளது. நவீனத்துவம், பின்நவீனத்துவம், உலகமயமாதல், பன்மைத்துவம், சுதந்திரம், ஜனநாயகம், பெண்ணியம் போன்ற சித்தாந்தங்கள் மேற்கத்திய சிந்தனைச் சூழலில் உருவாக்கப்பட்டு கட்டுப்பாடுகளையும், வரையறைகளையும் விரும்பாத மேற்கத்திய உலகமும் அதன் ஆதரவாளர்களும் இஸ்லாமின் போதனைகளை கடுமையான விமர்சனத்துக்கு உட்படுத்தியிருக்கிறார்கள்.

சம்பூரணமான வாழ்க்கைத் திட்டத்தை உள்ளடக்கிய இஸ்லாமின் குறிப்பிட்ட சில பகுதிகளை அதன் எதிரிகள் மிகவும் திட்டமிட்டு தாக்கி வருகின்றார்கள். ஜிஹாத், தஃவா, குற்றவியல் சட்டங்கள், பெண்ணுரிமைகள், செல்வப் பங்கீடு, ஹிஜாப் போன்ற இஸ்லாமிய கருத்துக்களை மிகவும் தவறாக உலக அரங்கில் பிரச்சாரம் செய்து வருகின்றார்கள். மேற்கத்திய நாகரிகம் மற்றும் அதன் கொள்கைகளால் கவரப்பட்டோர் கட்டுப்பாடுகளற்ற, ஒழுக்கங்களற்ற, மரியாதை கெட்ட, கீழ்த்தரமான சமூக அமைப்பொன்றை உருவாக்குவதற்கு அடித்தளமிட்டுக் கொண்டிருக்கிறார்கள்.

இஸ்லாம் குறித்த இத்தகைய புதிய விமர்சனச் சூழலில் இஸ்லாமிய ஷரீஆவை புதிய பார்வையில் ஆழமாக வாசிப்புச் செய்வதும், ஆதாரபூர்வமாகவும் தர்க்க ரீதியாகவும் நவீன விமர்சனங்களை எதிர்கொள்ளும் தரத்திலும் உரிய தெளிவையும், தகுந்த மறுப்பையும் வழங்க வேண்டிய கட்டாய சூழலிலே நாம் வாழ்கிறோம்.

“இஸ்லாம் பெண்களின் உரிமைகளை மறுக்கிறது, சொத்துப் பங்கீட்டில் அவர்களுக்கு அநீதியிழைக்கிறது, ஆணைவிட அரைப் பகுதி குறைவாகவே சொத்தில் பெண் உரிமை பெறுகிறாள், இஸ்லாம் செல்வப் பங்கீட்டில் பெண்ணுக்கு ஏற்றத்தாழ்வு காட்டியுள்ளது ஆணாதிக்கத்துக்கு வழிவகுக்கும் இஸ்லாம் பெண்ணுரிமைகளை அடக்கி வருகிறது” என்பன போன்ற குற்றச் சாட்டுகள் பெண்ணியல் வாதிகள், கட்டுப்பாடுகளை விரும்பாதவர்கள் மற்றும் அதிகம் பிற சமயத்தோடு சமரசத்தை நேசிப்போரால் முன்வைக்கப்பட்டு வருகின்றன.

இஸ்லாமிய சொத்துரிமைச் சட்டத்தில் பெண்ணுக்கு வழங்கப்பட்டுள்ள பங்குகளைப் புதிய பார்வையில் விளக்குவதின் வழியாக இவர்களது இத்தகைய குற்றச்சாட்டுகள் எவ்வளவு போலியானவை என்பதையும், இஸ்லாம் பெண்ணுக்களித்த கண்ணியத்தையும் புரிந்துகொள்ள முடியும். பெண்ணியல்வாத மற்றும் மேற்கத்திய பின்நவீனத்துவ சிந்தனைகள் ஆதிக்கம் பெற்றுவரும் நம் நாட்டுச் சூழலில் இஸ்லாமின் பெண்ணுரிமைகளுக்கு எதிரான விமர்சனங்களுக்கு ஆதாரப்பூர்வமான மறுப்பாக இவ்வத்தியாயம் பிரத்தியேகமாக இணைக்கப்பட்டுள்ளது.

நவீனகால இஸ்லாமிய சிந்தனையாளர்கள், மேற்கத்திய விமர்சனங்களுக்கு தகுந்த மறுப்புக்களை முன்வைத்து வரும் ஆய்வாளர்கள் இந்த தலைப்பில் ஆக்கபூர்வமான ஆய்வுகளை முன்வைத்துள்ளார்கள். இந்த வகையில் பெண்களின் சொத்துரிமை தொடர்பாக எகிப்தின் கெய்ரோ பல்கலைக்கழக தத்துவத்துறை விரிவுரையாளர் உஸ்தாத் அபுல் யஸீத் மற்றும் கலாநிதி முஹம்மத் உமாரா, கலாநிதி ஸலாஹுத்தீன் ஸுல்தான், கலாநிதி ரஃபீக்

யூனுஸ், கலாநிதி நாஸிர் ஸலாமா ஆகியோர் மிகவும் ஆழமான ஆய்வுகளை நவீன பாணியில் முன்வைத்துள்ளார்கள். இத்தகைய ஆய்வாளர்களின் ஆய்வுகளின் துணையோடு இப்பகுதியை விளக்க முயல்கிறோம்.

## ஆய்வு 1: கலாநிதி முஹம்மத் உமாரா

கலாநிதி முஹம்மத் உமாரா சொத்துக்கள் வாரிசுகளுக்கு மத்தியில் ஏற்றத்தாழ்வாக பங்கிடப்பட மூன்று காரணிகளை குறிப்பிடுகின்றார். ஆண், பெண் வாரிசுகள் மட்டும் சொத்துக்களை ஏற்றத்தாழ்வாகப் பெறவில்லை. ஆண்களுக்கிடையிலும் சொத்துக்கள் ஏற்றத்தாழ்வாக பகிர்ந்தளிக்கப்படுவதை காணலாம். அந்தவகையில் வாரிசுகளுக்கு மத்தியில் சொத்துப் பங்கீட்டில் வித்தியாசங்கள் காணப்பட மூன்று அளவுகோல்கள் காரணமாக அமைவதை பின்வருமாறு விளக்குகிறார்:

(i) மரணித்தவருக்கும் வாரிசுகளுக்கும் இடையிலான உறவின் தரம், மரணித்தவரோடுள்ள உறவின் நெருக்கம் அதிகரிப்பதற்கு ஏற்ப அவர் பெறும் பங்கு அதிகரிக்கும். இறந்தவரோடுள்ள உறவு தூரம் செல்லச் செல்ல குடும்பச் சொத்தில் அவர் பெற்றுக் கொள்ளும் பங்கு குறைவாக இருக்கும்.

(ii) **வாரிசாக இருப்பவர் மரணித்தவருக்கு வயதால் முந்திய நிலையிலுள்ளவரா அல்லது குறைவான நிலையிலுள்ளவரா என்பதைப் பொருத்தும் வேறுபடும்.**

மரணித்தவரின் வாரிசு வயதில் மூத்தவராயிருப்பின் வயதில் குறைந்தவரை விட குறைவான பங்குகளையே பெறுவார். இங்கு ஆண்-பெண் என்ற வேறுபாடுகள் பார்க்கப்படுவதில்லை. இந்த வகையில்தான் மகள், தாயைவிட அதிகமாக சொத்துக்களுக்குப் பங்காளியாகிறாள். இருவரும் பெண்களாக இருந்தும் வயதடிப்படையில் வித்தியாசப்படுவதால் வயதில் குறைந்த மகள் கூடுதலான பங்குகளைப் பெற்றுக்கொள்கிறாள். அது மாத்திரமன்றி தந்தையைவிட மகள் அதிகமாக சொத்துக்களைப் பெறுகிறாள்.

இங்கு ஆணைவிட பெண் கூடுதலான சொத்தைப் பெறுவதைப் பார்க்கலாம். அதேபோல் மகன் தந்தையைவிட அதிகமாக சொத்தில் பங்கு பெறுவார். தந்தை, மகன் ஆகிய இருவரும் ஆண்களாக இருந்தும் உறவின் பலம், வயது வேறுபாடு என்பவற்றின் காரணமாக மகன் கூடுதலான சொத்துக்கள் பெறுவதைப் பார்க்கலாம்.

(iii) வாரிசுகள் சிலரின் மீது இஸ்லாமிய ஷரீஅத் சுமத்திய பொருளாதார சுமை:

இஸ்லாம் செலவழிக்கும் பொறுப்பை ஆண்கள் மீதே சுமத்தியுள்ளது. இந்த வகையில் ஆண்கள், பெண்களைவிட சொத்தில் அதிகம் பங்கு பெறுவது நியாயம் என்பதை புரிந்து கொள்கிறோம். மனைவிக்குரிய வீடு, உடை மற்றும் அன்றாட செலவினங்கள், பிள்ளைகள் மற்றும் பெற்றோர்களுக்கான செலவினங்கள் போன்ற அனைத்து செலவுகளையும் இஸ்லாம் ஆண் மீது சுமத்தியுள்ளது. இந்த வகையில் குடும்பச் சொத்தில் பெண்ணைவிட ஆண் அதிகமான பங்குகளைப் பெறுவது மிகவும் நியாயமானது என்பதை புரிந்து கொள்கிறோம்.

கலாநிதி முஹம்மத் உமாரா முன்வைக்கும் வாரிசுகளுக்கு மத்தியில் பங்குகள் வித்தியாசப்பட ஏதுவாக அமையும் காரணிகளைப் புரிந்து கொள்வதன் மூலம் இஸ்லாமிய சொத்துரிமைச் சட்டத்தின் நீதியை ஆழமாக விளங்க முடியும்.

## ஆய்வு 2: கலாநிதி ஸலாஹுத்தீன் ஸுல்தான்

அதேவேளை கலாநிதி ஸலாஹுத்தீன் ஸுல்தான் இந்த தலைப்பில் ஆக்கபூர்வமான ஆய்வொன்றை மேற்கொண்டுள்ளார். இஸ்லாமிய சொத்துரிமைச் சட்டம் பெண்ணுக்கு உரிய இடத்தை வழங்கவில்லை என்ற குற்றச்சாட்டுக்கு தகுந்த மறுப்பாக அமைந்திருக்கக்கூடிய இந்த ஆய்வைக் காலத்தின் தேவை கருதி இங்கு தருகிறோம்.

இஸ்லாமிய சொத்துப் பங்கீட்டில் பெண்கள் பெற்றுக்கொள்ளும் பங்குகளை பின்வருமாறு நான்கு பிரதான பிரிவுகளாகப் பிரித்து நோக்குவோம்:

(1) பெண் < ஆணைவிட குடும்பச் சொத்தில் குறைவாகப் பங்குகளைப் பெற்றுக் கொள்ளும் நிலைகள்:

இஸ்லாமிய சொத்துரிமைச் சட்டத்தில் பெண் பெறுவதைப் போன்று இரு பங்குகளை ஆண் பெற்றுக்கொள்ளும் சந்தர்ப்பங்களை ஆழமாக நோக்கினால் நான்கு நிலைகளில் மாத்திரமே பெண்ணைப்போல இரு பங்குகளை ஆண் பெறுவதைப் பார்க்கலாம். அவற்றை சுருக்கமாக இங்கு தருகிறோம்:

### (i). மரணித்தவருக்கு மகனோடு மகள் இருத்தல்

ஆதாரம்:

يُوصِيكُمُ اللّٰهُ فِيٓ أَوْلَادِكُمْ ۖ لِلذَّكَرِ مِثْلُ حَظِّ الْأُنْثَيَيْنِ ۚ

உங்களது பிள்ளைகள் விஷயத்தில் (குடும்பச் சொத்தில்) ஓர் ஆணுக்கு இரு பெண்களுக்குரியது போன்ற பங்குண்டு என்று அல்லாஹு தஆலா உங்களுக்கு வஸிய்யத் செய்கிறான்.

(அல்குர்ஆன் 4 : 11)

தாய் அல்லது தந்தை மரணித்துவிட அவருக்கு மகன் இன்னும் மகள் ஆகிய இரு பிள்ளைகளும் இருந்தால் அவர்கள் பின்வருமாறு சொத்தை பெற்றுக் கொள்வார்கள்.

இறந்தவர் مـــــيـــــت **மக்ரஜ் 3**

| மகன் | மகள் |
|---|---|
| 2 | 1 |

2 + 1 = 3

முழுச் சொத்தையும் மூன்றாகப் பிரித்து அதில் இரண்டு பங்குகளை மகனும் ஒரு பங்கை மகளும் பெறுவார்கள்.

### (ii). மரணித்தவருக்கு பிள்ளைகள் மற்றும் கணவன் இல்லாமல், தாய், தந்தை மட்டும் இருப்பின் தந்தை பெறுவதில் அரைப் பங்கை தாய் பெறுவாள்.

ஆதாரம்:

فَإِنْ لَمْ يَكُنْ لَهُ وَلَدٌ وَوَرِثَهُ أَبَوَاهُ فَلِأُمِّهِ الثُّلُثُ ج

இறந்தவருக்கு பிள்ளைகளில்லாமல் பெற்றோர் மட்டும் வாரிசுகளாக இருப்பின் அவரது சொத்தில் தாய்க்கு மூன்றிலொன்று உண்டு. (மீதமுள்ள) இரு பாகமும் தந்தைக்குரியதாகும்.(அல்குர்ஆன் 4 : 11)

இறந்தவர் ميت **மக்ரஜ் 3**

| தாய் | தந்தை |
|---|---|
| 1/3 | அஸபா |
| 1 | 2 |

1 + 2 = 3

தாய் பெறுவதைப் போன்று இரண்டு பங்குகளைத் தந்தை பெறுவதைப் பார்க்கிறோம்.

(iii). **மரணித்தவரின் உடன் பிறந்த சகோதரி அல்லது தந்தைவழி சகோதரியோடு மரணித்தவரின் சகோதரன் அல்லது தந்தைவழி சகோதரன் இருப்பின் சகோதரி அல்லது தந்தைவழி சகோதரி, இறந்தவரின் சகோதரர்கள் பெறுவதில் அரைப்பங்கை பெறுவாள்.**

ஆதாரம்:

وَإِنْ كَانُوا إِخْوَةً رِجَالًا وَنِسَاءً فَلِلذَّكَرِ مِثْلُ حَظِّ الْأُنْثَيَيْنِ قلے

இறந்தவருக்கு சகோதரர்கள் மற்றும் சகோதரிகள் இருப்பின் ஆணுக்கு பெண்ணுக்குரியதைப் போல் இரு பங்குண்டு.(அல்குர்ஆன் 4 : 176)

இறந்தவர் ميت   மக்ரஜ் 3

| சகோதரன் | சகோதரி |
|---|---|
| 2 | 1 |

2 + 1 = 3

**(iv) கணவன், மனைவி ஆகிய ஒவ்வொருவரும் பெறும் பங்கைப் பார்க்கும்போது கணவனைவிட மனைவி அரைப்பகுதி குறைவாகப் பெறுவதைக் காணலாம்.**

இங்கு ஒரு விஷயத்தைக் கவனத்தில் கொள்க. ஒரே நேரத்தில் கணவனும் மனைவியும் இருக்க மாட்டார்கள். மாறாக கணவன் அல்லது மனைவி மரணித்தால் அவரின் சொத்து அடுத்தவருக்குச் செல்லும் அளவை ஒப்பிட்டு நோக்கும்போது கணவனை விட மனைவி அரைப் பங்கைக் குறைவாகப் பெறுவதைப் பார்க்க முடியும்.

இறந்தவருக்குப் பிள்ளை இருந்தால்:

| கணவன் | மனைவி |
|---|---|
| 1/4 கால் பங்கு | 1/8 எட்டில் ஒரு பங்கு |

இறந்தவருக்குப் பிள்ளை இல்லையென்றால்

| கணவன் | மனைவி |
|---|---|
| 1/2 அரைப் பங்கு | 1/4 கால் பங்கு |

------------------------

إِرْثُ النِّسَاءِ فِي الشَّرِيعَةِ الْإِسْلَامِيَّةِ

# இஸ்லாமிய ஷரீஅத்
# பெண்ணுக்கு வழங்கிய சொத்துரிமை

இஸ்லாமிய ஷரீஅத் பெண்ணுக்கு வழங்கிய சொத்துரிமை குறித்த முழுமையான பார்வையில்லாமல் குறிப்பிட்டதொரு பகுதியை மேலோட்டமாக நோக்கியதன் விளைவாகவே பெண் புறக்கணிக்கப் படுகிறாள் என்ற குற்றச்சாட்டு முன்வைக்கப்பட்டதை இப்போது புரிந்துகொள்கிறோம். வெறுமனே பெண்ணுக்குரிய முழு சொத்துரிமை பங்கிலும் நான்கு சந்தர்ப்பங்களில் மட்டும் பெண்ணைப் போன்று ஆண் இரு பங்குகளை அதிகமாகப் பெற்றுக் கொள்ளும் நிலைகளை கவனித்துவிட்டு பெண் அநீதியிழைக்கப்படுகிறாள் என்று குற்றம் சுமத்துவது மிகவும் பிழையானது என்பதை இரண்டு வகையில் புரிந்துகொள்ள முடியும்.

1. இஸ்லாம் நான்கு சந்தர்ப்பங்களில் பெண்ணை விட ஆணுக்கு சொத்துப் பங்கீட்டில் அதிகமாக வழங்கியது ஏனெனில், செலவினங்கள் அனைத்தும் ஆணின் மீதே சுமத்தப்பட்டுள்ளது. மனைவிக்கான மஹர், வீடு, ஆடை மற்றும் ஏனைய செலவுகள், அதேபோன்று பிள்ளைகள், பெற்றோர், உறவினர்களுக்கான செலவுகளும் ஆண் மீது சுமத்தப்பட்டுள்ளது. அதேவேளை எத்தகைய செலவுப் பொறுப்பையும் பெண் மீது இஸ்லாம் சுமத்தவில்லை. எனவே, அதிகமான குடும்பப் பொறுப்புகளையும், செலவினங்களையும்

மேற்கொள்ளவேண்டிய ஆணுக்கு இத்தகைய நான்கு சந்தர்ப்பங்களில் பெண்ணைவிட அதிகமான சொத்துக்களை இஸ்லாமிய ஷரீஅத் வழங்கியுள்ளது.

2. இஸ்லாமிய சொத்துரிமைப் பங்கீட்டில் பெண் பெற்றுக் கொள்ளும் ஏனைய பங்குகள் குறித்த முழுமையான பார்வை உள்ளவர்கள் பெண்ணை இஸ்லாம் எவ்வளவு தூரம் கண்ணியப்படுத்தியுள்ளது என்பதை புரிந்துகொள்ள முடியும். பெண் பெறுகின்ற ஏனைய பங்குகளை தொடர்ந்து வரக்கூடிய பகுதிகளில் விரிவாக நோக்குவோம்.

## 1. பெண் = ஆணுக்குச் சமமாக

சொத்துப் பங்கீட்டில் ஆண் பெற்றுக்கொள்ளும் அதே அளவை பெண்ணும் பெற்றுக்கொள்ளும் நிலைகள்:

சொத்துரிமை கணக்குகளை ஆழ்ந்து நோக்கும்போது பெண் ஆணுக்கு சமமான பங்குகளைப் பெற்றுக்கொள்ளும் சந்தர்ப்பங்கள் அதிகமாகக் காணப்படுவதைக் காணலாம். உதாரணங்களோடு இதனை நிரூபிக்கிறோம்.

### (i) தாய் = தந்தைக்குச் சமமாக

மரணித்தவருக்கு பிள்ளைகளிருப்பின் தாயும் தந்தையும் சமமாகவே சொத்தில் பங்கு பெறுவார்கள்.

**உதாரணம்: 1**

இறந்தவர் **مــــــيــــــت** **மக்ரஜ் 6**

| தாய் | தந்தை | மகன் |
|---|---|---|
| 1/6 | 1/6 | அஸபா |
| 1 | 1 | 4 |

1 + 1 + 4 = 6

**உதாரணம்: 2**

இறந்தவர் **ميـــــــــــــت** **மக்ரஜ் 6**

| தாய் | தந்தை | இரண்டு பெண் பிள்ளைகள் |
|---|---|---|
| 1/6 | 1/6 + அஸபா | 2/3 |
| 1 | 1 | 4 |

1 + 1 + 4 = 6

உதாரணம் 2 இல் மீதமுள்ளதைப் பெறக்கூடிய அஸபாவாக தந்தை காணப்படுகிறார். ஆனாலும், வாரிசுகளுக்கு மத்தியில் பங்குகள் வழங்கப்பட்டதன் பிறகு எந்தப் பங்கும் எஞ்சவில்லை. எனவே தாய் பெறும் அதே அளவையே தந்தை பெற்றுக்கொள்கிறார்.

**உதாரணம்: 3**

இறந்தவர் **ميـــــــــــــت** **மக்ரஜ் 12 | 13**

| கணவன் | தந்தை | தாய் | மகள் |
|---|---|---|---|
| 1/4 | 1/6 | 1/6 | 1/2 |
| 3 | 2 | 2 | 6 |

3 + 2 + 2 + 6 = 13

இந்தக் கணக்கு “அவ்ல்” வகையைச் சேர்ந்ததாகும்.

உதாரணம் 3 இலும் தாய்க்குச் சமமாக தந்தை இருப்பதைக் கவனிக்கலாம்.

(ii) **தாயின் தாய் = தந்தைக்குச் சமமாக**

மேற்கூறிய நான்கு சந்தர்ப்பங்களில் தாய் தந்தைக்குச் சமமாக சொத்தை பெற்றுக்கொள்கிறாள் என்பது தெளிவாகிறது. தாயின் தாயும் தந்தைக்கு நிகராக சொத்தில் பங்கு பெறுவதை இஸ்லாமிய சொத்துரிமைச் சட்டத்தில் காணமுடியும்.

### (iii) தாய்வழி சகோதரி = தாய்வழி சகோதரனுக்குச் சமமாக

தாய்வழி சகோதரர்கள் மற்றும் சகோதரிகள் சொத்துப் பங்கீட்டில் தங்களுக்குள் சம அளவையே பெற்றுக்கொள்வார்கள்.

**ஆதாரம்:**

وَإِنْ كَانَ رَجُلٌ يُورَثُ كَلَالَةً أَوِ امْرَأَةٌ وَلَهُ أَخٌ أَوْ أُخْتٌ فَلِكُلِّ وَاحِدٍ مِنْهُمَا السُّدُسُ ۚ فَإِنْ كَانُوا أَكْثَرَ مِنْ ذَٰلِكَ فَهُمْ شُرَكَاءُ فِي الثُّلُثِ ۚ

இறந்தவருக்கு பெற்றோர், பிள்ளைகளில்லாமல் தாய்வழி சகோதரன் அல்லது தாய்வழி சகோதரி இருப்பின் அவ்விருவரில் ஒவ்வொருவருக்கும் இறந்தவர் விட்டுச் சென்றதில் ஆறில் ஒன்று கிடைக்கும். அவர்கள் ஒருவரைவிட அதிகமாக இருப்பின் அவர்களனைவரும் மூன்றிலொன்றில் சம பங்காளிகளாக இருப்பார்கள். (அல்குர்ஆன் 4 : 12)

**உதாரணம்: 1 : 1**

இறந்தவர் مـــــــيـــــــت மக்ரஜ் 6

| கணவன் | தாய் | தாய்வழி சகோதரன் |
|---|---|---|
| 1/2 | 1/3 | 1/6 |
| 3 | 2 | 1 |

3 + 2 + 1 = 6

**உதாரணம்: 1 : 2**

இறந்தவர் مـــــــيـــــــت மக்ரஜ் 6

| கணவன் | தாய் | தாய்வழி சகோதரி |
|---|---|---|
| 1/2 | 1/3 | 1/6 |
| 3 | 2 | 1 |

3 + 2 + 1 = 6

உதாரணம் 1ல் காணப்படும் இரண்டு உதாரணங்களையும் கவனித்தால் தாய்வழி சகோதரன், தாய்வழி சகோதரி ஆகிய இருவரும் சமஅளவு சொத்தைப் பெறுவதைக் காணலாம்.

**உதாரணம்: 2**

இறந்தவர் **مــــــــيــــــــت** **மக்ரஜ் 6**

| கணவன் | தாய் | தாய்வழி சகோதரர்கள், சகோதரிகள் |
|---|---|---|
| 1/2 | 1/6 | 1/3 |
| 3 | 1 | 2 |

3 + 1 + 2 = 6

உதாரணம் 2ல் தாய்வழி சகோதரர்கள் மற்றும் சகோதரிகள் இருவரும் 1/3 மூன்றில் ஒரு பங்கை சமமாக பங்கு பெறுகின்றனர். அந்த வகையில் அவர்கள் பெற்றுக்கொள்ளும் இரண்டு பங்குகளில் ஆணும் பெண்ணும் சமமாக பங்கு பெறுவார்கள். இந்த வகையில் தாய்வழி சகோதரன் தாய்வழி சகோதரி இருவரும் சமமாவார்கள்.

**(iv) தாய்வழி சகோதரி = உடன் பிறந்த சகோதரனுக்குச் சமமாக**

சொத்துரிமை கணக்கில் தாய்வழி சகோதரி சொத்தில் பங்குபெறும் அதேவேளை உடன்பிறந்த சகோதரன் எந்தப் பங்கையும் பெறாத நிலை காணப்படும். இதனை பின்வரும் உதாரணம் தெளிவுபடுத்துகிறது.

**உதாரணம்: 1**

இறந்தவர் **مــــــــيــــــــت** **மக்ரஜ் 6**

| தாய் | தாய்வழி சகோதரிகள் | கணவன் | உடன் பிறந்த சகோதரன் |
|---|---|---|---|
| 1/6 | 1/3 | 1/2 | அஸபா |
| 1 | 2 | 3 | 0 |

1 + 2 + 3 = 6

உதாரணம் 1ல் உடன்பிறந்த சகோதரன் மீதமுள்ளதை பெறும் அஸபாவாக இருக்கின்றான். ஆனால், மேற்கூறிய உதாரணத்தில் வாரிசுகளுக்கு பங்கை வழங்கியதன் பிறகு எப்பகுதியும் உடன்பிறந்த சகோதரனுக்கு எஞ்சவில்லை என்பதை பார்க்கிறோம். எனவே, இப்படியான சந்தர்ப்பத்தில் உமர் ﷺ, ஸைத் பின் ஸாபித் ﷺ, உஸ்மான் ﷺ ஆகியோர் 1/3 மூன்றில் ஒன்றைப் பெறும் தாய்வழி சகோதரிகளோடு, உடன்பிறந்த சகோதரனையும் சேர்த்து சரிசமமான பங்குகளை வழங்க வேண்டும் என்ற தீர்ப்பை முன்வைத்தார்கள். பங்கு பெறாமலிருக்கின்ற உடன்பிறந்த சகோதரனை 1/3 மூன்றில் ஒரு பங்கில் இணைத்ததின் காரணமாக இதை இஸ்லாமிய சொத்துரிமைப் பாடத்தில் **مسألة مشتركة** "மஸ்அலா முஷ்தரிகா" அதாவது "கூட்டுச் சேறும் கணக்கு" என்று அழைக்கப்படும். இந்த வகையில் உதாரணம் 1இல் காணப்பட்ட கணக்கு பின்வருமாறு மாற்றம் பெறுகிறது.

இறந்தவர் **ميت** **மக்ரஜ் 6**

| தாய் | தாய்வழி சகோதரிகள் 2, உடன் பிறந்த சகோதரன் | கணவன் |
|---|---|---|
| 1/6 | 1/3 | 1/2 |
| 1 | 2 | 3 |

1 + 2 + 3 = 6

எனவே, மேல் குறிப்பிட்ட உதாரணத்தில் தாய் வழி சகோதரிகள் உடன்பிறந்த சகோதரனுக்குச் சமமாக இருப்பதை பார்க்கலாம். அதாவது, மூன்றில் ஒன்றாகிய இரண்டு பங்குகளில் தாய்வழி சகோதரிகள் ஒரு பங்கையும், உடன் பிறந்த சகோதரன் ஒரு பங்கையும் பெற்றுக் கொள்வார்கள். எனவே, தாய்வழி சகோதரிகள் உடன் பிறந்த சகோதரனுக்குச் சமமாக இவ்விடத்தில் இருக்கிறார்கள்.

### (v) ஒரு பெண் வாரிசு மட்டும் = ஓர் ஆண் வாரிசுக்குச் சமமாக

அதாவது, மரணித்தவருக்கு ஓர் ஆண் அல்லது ஒரு பெண் வாரிசு மட்டும் இருப்பின் அனைத்து சொத்துக்களையும் ஆண் அல்லது

பெண் வாரிசு பெற்றுக்கொள்வார். அந்த வகையிலும் பெண் ஆணுக்குச் சமமாகக் காணப்படுகிறாள்.

ஆண் அஸபா என்ற வகையில் வாரிசுகள் யாரும் இல்லாதபோது அனைத்து சொத்துக்களையும் பெற்றுக்கொள்வார். பெண் முதலில் தனக்குரிய ஃபர்ழான பங்கை பெற்றுக்கொண்டதன் பிறகு வாரிசுகள் யாரும் இல்லாமையினால் மீதமுள்ளதை மீண்டும் பெறுதல் என்ற ரத்து உடைய சட்டத்தின் பிரகாரம் பெற்றுக்கொள்வார். இவ்வாறு, மீண்டும் சொத்துக்களை பெற்றுக்கொள்வதை சொத்துரிமைப் பாடத்தில் “அர்ரத்து” என அழைக்கப்படும். இந்த உண்மையைப் பின்வரும் அட்டவணை தெளிவுபடுத்துகிறது.

⏭

| ஆண் வாரிசுகள் | பங்குகள் | பெண் வாரிசுகள் | பங்குகள் |
|---|---|---|---|
| தந்தை | அனைத்தையும் அஸபாவாகப் பெறுவார். | தாய் | 1/3 + மீதமுள்ளதை மீண்டும் பெறுவார் |
| மகன் | அனைத்தையும் அஸபாவாகப் பெறுவார். | மகள் | 1/2 + மீதமுள்ளதை மீண்டும் பெறுவார் |
| சகோதரன் | அனைத்தையும் அஸபாவாகப் பெறுவார். | சகோதரி | 1/2 + மீதமுள்ளதை மீண்டும் பெறுவார் |
| கணவன் | 1/2 +மீதமுள்ளதை மீண்டும் பெறுவார் | மனைவி | 1/4 + மீதமுள்ளதை மீண்டும் பெறுவார் |
| தாயின் சகோதரன் | மீதமுள்ள அனைத்தையும் உறவினர் என்ற வகையில் பெறுவார். | தாயின் சகோதரி | மீதமுள்ள அனைத்தையும் உறவினர் என்ற வகையில் பெறுவார். |
| தந்தையின் சகோதரன் | அனைத்தையும் அஸபாவாகப் பெறுவார். | தந்தையின் சகோதரி | மீதமுள்ள அனைத்தையும் உறவினர் என்ற வகையில் பெறுவார். |

மேலுள்ள அட்டவணை வாரிசுகள் இல்லாதபோது ஆண் மட்டும் அல்லது பெண் மட்டும் இருப்பின் அனைத்து சொத்துக்களையும் அஸபாவாக அல்லது அர்ரத்து என்ற வகையில் பெற்றுக்கொள்வதைக் காட்டுகிறது.

## ஆண், பெண் ஆகிய இருவரும் குடும்பச் சொத்தில் சமமாகப் பங்குகளைப் பெறும் வேறு சில நிலைகள்

### (i) உடன் பிறந்த சகோதரி = உடன் பிறந்த சகோதரனுக்குச் சமமாக

மரணித்தவரின் சகோதரனும் சகோதரியும் சமமாக சொத்துப் பெறும் நிலைகள்:

**உதாரணம்: 1 : 1**

இறந்தவர் مـــــــيـــــــت மக்ரஜ் 2

| கணவன் | சகோதரன் |
|---|---|
| 1/2 | அஸபா |
| 1 | 1 |

**உதாரணம்: 1 : 2**

இறந்தவர் مـــــــيـــــــت மக்ரஜ் 2

| கணவன் | சகோதரி |
|---|---|
| 1/2 | 1/2 |
| 1 | 1 |

இங்கு உதாரணம் 1:1 இல் மீதமுள்ள 1/2 ஐ அஸபாவாக பெறுகிறான். உதாரணம் 1:2இல் சகோதரி ஃபர்ழாக 1/2 ஐ பெறுகிறாள். எனவே மேற்கூறிய இரண்டு உதாரணங்களிலும் சகோதரன் அஸபாவாக பெறுவதும், சகோதரி ஃபர்ழாகப் பெறுவதும் சமமாக அமைவதைக் கண்டோம்.

**உதாரணம்: 2 : 1**

| இறந்தவர் ت—————ي—————م | | **மக்ரஜ் 4** |
|---|---|---|
| கணவன் | மகள் | சகோதரன் |
| 1/4 | 1/2 | அஸபா |
| 1 | 2 | 1 |

1 + 2 + 1 = 4

**உதாரணம்: 2:2**

| இறந்தவர் ت—————ي—————م | | **மக்ரஜ் 4** |
|---|---|---|
| கணவன் | மகள் | சகோதரி |
| 1/4 | 1/2 | அஸபா |
| 1 | 2 | 1 |

1 + 2 + 1 = 4

உதாரணம் 2:1 இல் சகோதரன் மீதமுள்ளதை அஸபாவாகப் பெறுகிறான். உதாரணம் 2:2 இல் மகள் இருப்பதால் சகோதரி அஸபாவாக மீதமுள்ளதைப் பெறுகிறாள். எனவே இங்கும் சகோதரி = சகோதரனுக்குச் சமமாகக் காணப்படுவதை பார்க்கலாம்.

### (ii) தாய்வழி சகோதரி ஒருத்தி = உடன்பிறந்த சகோதரன் ஒருவனுக்குச் சமமாக

இறந்தவருக்கு தாய்வழி சகோதரி ஒருவரும், உடன் பிறந்த சகோதரனும் இருப்பின் சரிசமமாக இருவரும் சொத்தில் பங்கு பெறுவார்கள்.

**உதாரணம்:**

இறந்தவர் ت ـــــــــــــــــيـــــــــــــــــ م மக்ரஜ் 6

| கணவன் | தாய் | தாய்வழி சகோதரி | சகோதரன் |
|---|---|---|---|
| 1/2 | 1/6 | 1/6 | அஸபா |
| 3 | 1 | 1 | 1 |

3 + 1 + 1 + 1 = 6

இங்கு சகோதரன் மீதமுள்ளதைப் பெற்றாலும் தாய்வழி சகோதரி பெறுகின்ற அதே அளவை பெறுவதைக் காணலாம்.

**(iii) குடும்பச் சொத்தை எந்நிலையிலும் பெறும் பெண்களின் எண்ணிக்கை = குடும்பச் சொத்தை எந்நிலையிலும் பெறும் ஆண்களின் எண்ணிக்கைக்குச் சமமாக இருப்பது.**

வாரிசுகளுக்கு மத்தியில் சொத்தை எந்நிலையிலும் தவறாமல் பெறக்கூடியவர்கள் ஆறு நபர்கள் ஆவர். அவர்களில் மூவர் பெண்களாகவும் மூவர் ஆண்களாகவும் காணப்படுகிறார்கள். இந்த வகையிலும் பெண்கள் ஆண்களுக்கு சமமாகின்றார்கள்.

**(iv) ذوو الأرحام தவுல் அர்ஹாமில் பெண் = ஆணுக்குச் சமமாக இருப்பாள்.**

இஸ்லாமிய சொத்துரிமைச் சட்டத்தில் **أصحاب الفروض** அஸ்ஹாபுல் ஃபுரூழ் (கட்டாயமான குறிப்பிடப்பட்ட பங்குகளை பெறக்கூடியவர்கள்.), **عصبة** அஸபா (கட்டாயமான பங்குகளை கொடுத்ததற்குப் பின் மீதம் உண்டான சொத்தை பெறக்கூடியவர்கள்) ஆகிய இரு பிரிவுகளில் அடங்காத ஏனைய இரத்த உறவினர்களை **ذوو الأرحام** தவுல் அர்ஹாம் என அழைக்கப்படும்.

இவர்கள் அஸ்ஹாபுல் ஃபுரூழ், அஸபாக்கள் இல்லாதபோது குடும்பச் சொத்தில் உரிமை பெறுவார்கள். எனினும், இவர்களுக்கு மத்தியிலே சொத்துக்களை பங்கீடு செய்யும் முறையில் இஸ்லாமிய சட்டத்துறை

அறிஞர்களுக்கு மத்தியில் கருத்துவேறுபாடுகள் இருப்பினும் அவர்களில் பெண்களும் ஆண்களும் சமமாகவே பெற்றுக் கொள்கிறார்கள் என்பதும் குறிப்பிடத்தக்க ஒரு கருத்தாகும். இந்த சட்டத்தின்படி பின்வருமாறு அவர்களுக்குரிய பங்குகள் அமைகின்றன.

**உதாரணம்:**

இறந்தவர் ميت

| மகளின் மகள் | மகளின் மகன் | தாயின் சகோதரர் | தந்தையின் சகோதரி |
|---|---|---|---|
| 1 | 1 | 1 | 1 |

முழுச் சொத்தையும் நான்காகப் பிரித்து அனைவருக்கும் சமமாகப் பங்கிடப்படும். இந்த வகையிலும் பெண்கள் ஆண்களுக்குச் சமமாக இருக்கின்றார்கள்.

## 2. பெண் > ஆணைவிட அதிகமாக பெறுதல்

ஆணைவிட பெண் சொத்துக்களை அதிகமாக பெற்றுக் கொள்ளும் நிலைகளும் உள்ளன.

அவற்றை பின்வரும் அட்டவணையின் மூலமாக அறியலாம்.

⏭

## அல்குர்ஆன் மற்றும் சுன்னாவில் கூறப்பட்ட பங்குகளும் அவற்றுக்கு உரியவர்களும்

| 2/3 | 1/2 | 1/3 | 1/6 | 1/4 | 1/8 |
|---|---|---|---|---|---|
| 1, இரண்டு மகள்கள் அல்லது அதிகமானவர்கள் | 1. ஒரு மகள் | 1. தாய் | 1. தாய் | 1. கணவன் | 1. மனைவி |
| 2, மகனின் இரண்டு மகள்கள் அல்லது அதிகமானவர்கள் | 2. மகனின் ஒரு மகள் | 2. தாய்வழி சகோதரிகள் | 2. பாட்டி | 2. மனைவி | x |
| 3. இரண்டு சகோதரிகள் அல்லது அதிகமானவர்கள் | 3. உடன் பிறந்த ஒரு சகோதரி | 3. தாய்வழி சகோதரர்கள் | 3. மகனின் மகள் | x | x |
| 4. தந்தைவழி இரண்டு சகோதரிகள் அல்லது அதிகமானவர்கள் | 4. தந்தைவழி ஒரு சகோதரி | x | 4. தந்தைவழி ஒரு சகோதரி | x | x |
| x | 5. கணவன் | x | 5. தாய்வழி ஒரு சகோதரி<br>6. தாய்வழி ஒரு சகோதரன்<br>7. தந்தை<br>8. தந்தையின் தந்தை | x | x |

## அட்டவணையிலிருந்து சில முடிவுகள்

1. அல்குர்ஆன் வழங்கிய மிகவும் கூடுதலான பங்கு 2/3 மூன்றில் இரண்டு ஆகும். அதனை எந்த ஆணும் பெறுவதில்லை. பெண்கள் மட்டுமே பெறுகின்றார்கள்.

2. 1/2 அரைப் பங்கு. இதை ஆண்களில் கணவனைத் தவிர வேறு யாரும் பெறுவதில்லை. பெண்களில் நான்கு சாரார் 1/2 அரைப் பங்குக்கு உரியவர்களாக இருக்கின்றார்கள்.

3. 1/3 மூன்றில் ஒரு பங்கு. இதை பெண்கள் மாத்திரமே பெறுவதைக் காணலாம்.

4. 1/6 ஆறில் ஒரு பங்கு. இதை எட்டுப்பேர் பெறுகிறார்கள். அவர்களில் ஐந்து நபர்கள் பெண்கள் ஆவார்கள்.

5. 1/8 எட்டில் ஒரு பங்கு. இதை மனைவி மட்டும் பெறுகிறாள்

ஃபர்ழாகப் பெறும் பங்குகளில் அதி கூடுதலான பங்குகளை ஆண்களை விட பெண்களே பெற்றுக்கொள்கிறார்கள். அல்குர்ஆன் மற்றும் ஸுன்னா 23 சாராருக்கு ஃபர்ழான (-வரையறுத்த குறிப்பிட்ட) பங்குகளை வழங்கியுள்ளன. அவற்றில் 17 பதினேழு சாரார் பெண்களாகவும் 6 ஆறு சாரார் ஆண்களாகவும் காணப்படுகிறார்கள். இந்த வகையில் ஆண்களை விட கூடுதலான ஃபர்ழுகளை பெண்கள் பெற்றுக்கொள்கிறார்கள் என்ற உண்மையை புரிந்துகொள்கிறோம்.

### (i) ஆண் அஸபாவாக இருந்து பெறுகின்ற பங்குகளின் அளவைவிட பெண் பெறுகின்ற ஃபர்ழான பங்குகளுடைய அளவு அதிகமாக இருப்பது.

மரணித்தவருக்கு 60 ஏக்கர் நிலம் இருப்பதாக வைத்துக் கொள்வோம் அவர் கணவன், தந்தை, தாய், இரண்டு பெண் பிள்ளைகள் வாரிசுகளாக விட்டுச் செல்வாராயின் அவர்கள் ஒவ்வொருவரும் பெற்றுக்கொள்ளும் பங்கு யாது?

**உதாரணம்: 1 : 1**

இறந்தவர் مـــــــيـــــــت **மக்ரஜ்** **12 | 15**

| கணவன் | தந்தை | தாய் | மகள்கள் 2 |
|---|---|---|---|
| 1/4 | 1/6 | 1/6 | 2/3 |
| 3 | 2 | 2 | 8 |

3 + 2 + 2 + 8 = 15

உதாரணம் 1:1 இல் குறிப்பிடப்பட்டுள்ள கணக்கு அவ்ல் வகையாகும். எனவே, முழுச் சொத்தையும் பிரிக்கப் பயன்படுத்திய மக்ரஜ் ஆகிய 12ல் பிரிக்காமல் 15ல் பிரிக்க வேண்டும். அதாவது, பங்குகளுக்கேற்ப பிரிக்க வேண்டும். எனவே, 60 ஏக்கர் நிலத்தை 15 இனால் வகுத்தால் ஒருபங்கு 4 ஏக்கராகும்.

60/15 =4

| வாரிசுகள் | பங்கு விகிதம் | ஒரு பங்கு | மொத்த பங்கு |
|---|---|---|---|
| கணவன் | 3 x | 4 | = 12 |
| தந்தை | 2 x | 4 | = 8 |
| தாய் | 2 x | 4 | = 8 |
| மகள்கள் 2 | 8 x | 4 | = 32 |
| | | மொத்தம் | 60 |

இதே 60 ஏக்கர் நிலத்தை 2 பெண் பிள்ளைகளுக்கு பகரமாக 2 ஆண் பிள்ளைகள் இருந்தால் 2 ஆண் பிள்ளைகள் பெறுகின்ற ஏக்கரின் அளவு என்ன?

**உதாரணம்: 1 : 2**

இறந்தவர் **ميت** **மக்ரஜ் 12**

| கணவன் | தந்தை | தாய் | 2 ஆண் பிள்ளைகள் |
|---|---|---|---|
| 1/4 | 1/6 | 1/6 | அஸபா |
| 3 | 2 | 2 | 5 |

$$3 + 2 + 2 + 5 = 12$$

உதாரணம்: 1:2 இல் 60 ஏக்கர் நிலத்தை 12ஆல் வகுப்பதால் ஒரு பங்கின் அளவு 5 ஆகும்.

$$60/12 = 5$$

இந்த வகையில் ஆண் பிள்ளைகள் இருவரும் பெறும் ஏக்கர்களின் எண்ணிக்கை 5 **x** 5 = 25 ஆகும்.

மேற்குறிப்பிட்ட உதாரணங்கள் இரண்டையும் நோக்கினால் 2 ஆண் பிள்ளைகளை விட 2 பெண் பிள்ளைகள் அதிகம் சொத்துக்களை பெறுவதனைக் காணலாம். 2 பெண் பிள்ளைகளும் 32 ஏக்கர்களைப் பெறுகின்ற நேரத்தில், அந்த இடத்தில் 2 ஆண் பிள்ளைகள் இருந்தால் அவர்கள் வெறும் 25 ஏக்கர்களைப் பெற்றுக் கொள்வதை பார்க்க முடியும். எனவே, ஃபர்ழாக 2/3 மூன்றில் இரண்டைப் பெறுகின்ற பெண், அஸபாவாக பெறுகின்ற ஆணின் பங்கை விட அதிகமாக பெறுகிறாள் என்பதையே இது நமக்கு உணர்த்துகிறது. இந்த வகையில்தான் பெண் > ஆணைவிட அதிகமாக பங்கு பெறுகிறாள்.

### (ii) 1/2 அரைப் பங்கைப் ஃபர்ழாகப் பெற்றுக்கொள்ளும் பெண், அஸபாவாக பங்கு பெறும் ஆணைவிட சொத்தில் அதிகமாக பங்கு பெறுவது.

மரணித்தவருக்கு 156 ஏக்கர் காணி (-நிலம்) இருப்பதாக வைத்துக் கொள்வோம். அவர், பின்வருவோரை வாரிசாக விட்டுச்செல்வாராயின்

அவர்கள் ஒவ்வொருவரும் பெறும் பங்கைக் குறிப்பிட்டு, மகளின் பங்கை வேறுபடுத்திக் காட்டுக?

**உதாரணம்: 1 : 1**

| இறந்தவர் ميت | | | மக்ரஜ் 12 \| 13 |
|---|---|---|---|
| கணவன் | தாய் | தந்தை | மகள் |
| 1/4 | 1/6 | 1/6 | 1/2 |
| 3 | 2 | 2 | 6 |

3 + 2 + 2 + 6 = 13

உதாரணம்: 1:1 ல் உள்ள கணக்கு அவ்ல் வகையாகும். எனவே, முழுச் சொத்தையும் 12 ஆல் பிரிக்காமல் பங்குகளின் அளவான 13ல் வகுக்க வேண்டும். 156 ஏக்கர் நிலத்தை 13ல் வகுப்பதாயின் ஒரு பங்கின் அளவு 12 ஆக அமையும்.

156/13 = 12.

வாரிசுகள் பெற்றுக்கொள்ளும் ஏக்கரின் அளவு பின்வருமாறு அமைகிறது.

| வாரிசுகள் | பங்கு விகிதம் | ஒரு பங்கு | மொத்த பங்கு |
|---|---|---|---|
| கணவன் | 3 x | 12 = | 36 |
| தாய் | 2 x | 12 = | 24 |
| தந்தை | 2 x | 12 = | 24 |
| மகள் | 6 x | 12 = | 72 |
| | | மொத்தம் | 156 |

உதாரணம்: 1 : 1 இல் மகள் பெற்றுக்கொள்ளும் ஏக்கர்களின் எண்ணிக்கை 72 ஆகும்.

**உதாரணம்: 1 : 2**

மேலுள்ள கணக்கில் மகளுக்குப் பகரமாக மகன் வாரிசாக இருப்பின் வாரிசுகள் பெறும் பங்கைக் குறிப்பிட்டு மகனின் பங்கை வேறுபடுத்திக் காட்டுக!

இறந்தவர் **ميت** **மக்ரஜ் 12**

| கணவன் | தந்தை | தாய் | மகன் |
|---|---|---|---|
| 1/4 | 1/6 | 1/6 | அஸபா |
| 3 | 2 | 2 | 5 |

3 + 2 + 2 + 5 = 12

உதாரணம்: 1:2 இன்படி 156 ஏக்கர் நிலத்தை 12 ஆல் வகுப்பதாயின் ஒரு பங்கின் அளவு 13ஆகக் காணப்படும். எனவே வாரிசுகள் பெறும் ஏக்கர்களின் அளவு பின்வருமாறு அமைகிறது:

| வாரிசுகள் | பங்கு விகிதம் | ஒரு பங்கு | மொத்த பங்கு |
|---|---|---|---|
| கணவன் | 3 x | 13 | = 39 |
| தந்தை | 2 x | 13 | = 26 |
| தாய் | 2 x | 13 | = 26 |
| மகன் | 5 x | 13 | = 65 |
| | | மொத்தம் | 156 |

மகன் பெற்றுக்கொள்ளும் மொத்த ஏக்கர்களின் எண்ணிக்கை 65 ஆகும். இங்கு அதே கணக்கில் மகள் இடம்பெறும்போது அவள் 72 ஏக்கர் நிலத்தைப் பெற்றுக்கொள்ளும் அதேவேளை மகன் 65 ஏக்கரைப் பெற்றுக்கொள்வதை கவனிக்கிறோம். எனவே 1/2 அரைப் பங்கை ஃபர்ழாகப் பெறும் மகள் அஸபாவாக பெறும் மகனைவிட சொத்தில் அதிக பங்குகளைப் பெறுகிறாள் என்ற உண்மையை இதிலிருந்து புரிந்துகொள்கிறோம்.

**(iii) 1/3 மூன்றில் ஒரு பங்கை ஃபர்ழாகப் பெற்றுக்கொள்ளும் பெண் அஸபாவாகப் பங்கு பெறுகின்ற ஆணைவிட சொத்தில் அதிகமாக பங்கு பெறுவது.**

பின்வரும் உதாரணம் இதனைத் தெளிவுபடுத்துகிறது.

**உதாரணம்: 1**

இறந்தவர் **مـــــــــــيـــــــــــت** **மக்ரஜ் 12**

| மனைவி | தாய் | தாய்வழி சகோதரிகள் | 2 சகோதரர்கள் |
|---|---|---|---|
| 1/4 | 1/6 | 1/3 | அஸபா |
| 3 | 2 | 4 | 3 |

3 + 2 + 4 + 3 = 12

இங்கு 1/3 மூன்றில் ஒரு பங்கை ஃபர்ழாகப் பெறுகின்ற தாய்வழி சகோதரிகள் மீதமுள்ளதை அஸபாவாகப் பெறுகின்ற சொந்த சகோதரர்களை விட சொத்தில் அதிகமாக பங்கு பெறுவதை பார்க்க முடியும்.

ஆணைவிட பெண்ணுக்கு குடும்பச் சொத்தில் அதிகம் பங்குண்டு என்பதையே மேலுள்ள உதாரணங்கள் விளக்கின. பெண் சொத்துப் பங்கீட்டில் அதிகமாகப் பெற்றுக்கொள்ளும் சில சந்தர்ப்பங்களையே உதாரணங்களோடு நிறுவினோம். இஸ்லாமிய ஷரீஆவின் சொத்துரிமைச் சட்டத்தை ஆழ்ந்து நோக்கும்போது பத்துக்கும் அதிகமான சந்தர்ப்பங்களில் ஆணைவிட அதிகமாகப் பெண் சொத்தில் பங்குபெறுகிறாள் என்பதை பார்க்க முடியும்.

இந்த வகையில், இஸ்லாம் சொத்துரிமையில் பெண்ணுக்குப் போதிய உரிமை வழங்கவில்லை என்பது மிகவும் போலியான குற்றச்சாட்டு என்பது நிரூபணமாகிறது.

**(iv) சமதரத்திலுள்ள ஆணும் பெண்ணும் வாரிசுகளாக இருந்து, ஆணுக்கு பங்கு கிடைக்காத நிலையில், பெண்ணுக்கு மட்டும் பங்கு கிடைப்பது.**

ஆணும் பெண்ணும் சமதரத்திலுள்ள போது சில சந்தர்ப்பங்களில் சொத்தில் பெண்ணுக்கு பங்குசெல்லும் அதேவேளை ஆணுக்கு பங்கு கிடைக்காத சந்தர்ப்பங்களும் உண்டு. பின்வரும் உதாரணங்கள் மூலம் அவற்றை விளக்கலாம்.

**உதாரணம்: 1 : 1**

இறந்தவர் **ميت** **மக்ரஜ் 12 | 15**

| கணவன் | தாய் | தந்தை | மகள் | மகனின் மகள் |
|---|---|---|---|---|
| 1/4 | 1/6 | 1/6 | 1/2 | 1/6 |
| 3 | 2 | 2 | 6 | 2 |

3 + 2 + 2 + 6 + 2 = 15

உதாரணம்: 1:1 அவ்ல் வகையைச் சேர்ந்த கணக்காகும். எனவே சொத்தைப் பங்குகளின் மொத்த எண்ணிக்கையில் இருந்து பிரிக்க வேண்டும். அதாவது 15ல் பிரித்து பங்குகள் வழங்கப்பட வேண்டும்.

இங்கு மகனின் மகள் 1/6 ஆறில் ஒரு பங்கைப் பெற்றுக்கொண்டதைக் கவனத்தில் கொள்க.

**உதாரணம்: 1 : 2**

இறந்தவர் **ميت** **மக்ரஜ் 12 | 13**

| கணவன் | தந்தை | தாய் | மகள் | மகனின் மகன் |
|---|---|---|---|---|
| 1/4 | 1/6 | 1/6 | 1/2 | அஸபா |
| 3 | 2 | 2 | 6 | 0 |

3 + 2 + 2 + 6 = 13

உதாரணம்: 1:2 இல் அஸபாவாக மீதமுள்ளதைப் பெற தகுதியுடைய மகனின் மகனுக்கு சொத்துப் பங்கீட்டில் எதுவும் மீதமாகவில்லை. அதேநேரம் உதாரணம் 1:1 இல் சமதரத்திலுள்ள மகனின் மகள்

1/6 ஆறில் ஒரு பங்கைப் பெற்றுக்கொள்வதைப் பார்த்தோம். இந்த வகையில்தான் இஸ்லாமிய சொத்துரிமைச் சட்டத்தில் சிலசமயம் சமதரத்திலுள்ள ஆணுக்கு பங்குகள் இல்லாதபோதும் பெண்ணுக்கு பங்குண்டு என்பதை மிகத் தெளிவாகப் புரிந்துகொள்ள முடியும்.

**உதாரணம்: 2**

இறந்தவர் **ميت** **மக்ரஜ் 6**

| | |
|---|---|
| தாயின் தாய் | தாயின் தந்தை |
| 1/6 + அஸபா | X |
| 1+5 | 0 |

இங்கு தாயின் தாய் சொத்தில் 1/6 ஆறில் ஒரு பங்கைப் பெற, தாயின் தந்தைக்கு சொத்தில் எந்தப் பங்கும் வழங்கப்படவில்லை என்பதைக் காணலாம். ஏனெனில், தாயின் தந்தை அஸ்ஹாபுல் ஃபுரூழ் என்ற பிரிவில் அடங்கவில்லை. எனவே இங்கு இருவரும் சமதரத்திலுள்ள போதிலும் தாயின் தாய் மட்டும் சொத்தில் பங்குபெறுவதை கவனிக்கலாம்.

இதுவரை இஸ்லாமிய சொத்துரிமைச் சட்டத்தில் பெண்ணுக்குரிய உரிமைகளை நான்காக வகுத்து ஓரளவு விரிவாக உதாரணங்களோடு விளக்கினோம். மேலுள்ள புள்ளி விபரங்களையும் தரவுகளையும் ஆழமாக நோக்குவோமாயின் நான்கு நிலைகள் தவிர ஏனைய சந்தர்ப்பங்களில் பெண், ஆண் பெறுகின்ற பங்கைப் பெறுகின்றாள். அல்லது, ஆணைவிட அதிகமான பங்குகளைப் பெண் பெறுகிறாள் என்பதை பார்க்க முடியும். முப்பதிற்கும் அதிகமான சந்தர்ப்பங்களில் இஸ்லாமிய சொத்துரிமைச் சட்டத்தில் பெண், ஆணுக்குச் சமமாக அல்லது ஆணைவிட கூடுதலாக சொத்தில் பங்கு பெறும் பெரிய உண்மையை சொத்துரிமை குறித்த மேலுள்ள புள்ளி விபரங்கள் நமக்கு தெளிவுபடுத்துகின்றன.

இந்த வகையில் இஸ்லாமில் சொத்துப் பங்கீடு மிகவும் நீதியாக இடம் பெற்றுள்ளதை அறிவுபூர்வமாக புரிந்துகொள்ள முடியும்.

உறவின் தரம், மரணித்தவருக்கு வயதால் குறைந்தவர், செலவுப் பொறுப்பை சுமப்பவர் என்பவற்றை கவனத்தில் கொண்டு இஸ்லாமிய ஷரீஆவில் சொத்துப் பங்கீட்டில் வாரிசுகளுக்கு மத்தியில் ஏற்றத் தாழ்வுகள் காணப்பட்ட போதிலும், வாரிசுகள் யாரும் அங்கு அநீதியிழைக்கப்படவில்லை என்பதையும், குறிப்பாக இஸ்லாம் சொத்துரிமையில் பெண்ணுக்கு உரிய கௌரவத்தை வழங்கி கண்ணியப்படுத்தியிருப்பதையும் ஆழமாக அறிந்து கொள்கிறோம்.

-----------------------

# اَلْـمَرَاجِعُ

# தொகுக்க உதவிய நூல்கள்


1. ஸஹீஹுல் புகாரி - இமாம் புகாரி ﵀
2. ஃபத்ஹுல் பாரி - இமாம் இப்னு ஹஜர் அல் அஸ்கலானி ﵀
3. ஜாமிஉத் திர்மிதி - இமாம் திர்மிதி ﵀
4. ஸுனன் இப்னு மாஜா - இமாம் இப்னு மாஜா ﵀
5. ஸுனன் தாரகுத்னி - இமாம் தாரகுத்னி ﵀
6. கிதாபுல் முக்னி - இமாம் இப்னு குதாமா ﵀, பதிப்பு: 2 (1992), பதிப்பகம்: ஹிஜ்ர், கெய்ரோ
7. அஸ்ஸிராஜி ஃபில் மீராஸ் **-** இமாம் சிராஜுத்தீன் முஹம்மது இப்னு அப்துர் ரஷீத்.
8. அல் ஃபிக்ஹுல் மன்ஹஜி அலா மத்ஹபில் இமாம் ஷாஃபிஈ - கலாநிதி முஸ்தஃபா ஹின், கலாநிதி முஸ்தஃபா புஹா, பதிப்பு: 5 (2003) பதிப்பகம்: தாருல் கலம், திமிஷ்க்.
9. அல் மீராஸ் பிஷ்ஷரீஆ அல் இஸ்லாமிய்யா, உஸ்தாத் அலி ஹஸ்புல்லா, பதிப்பு: 5 (1981)
10. அஹ்காமுத் தரிகாத் வல் மவாரீஸ் - இமாம் முஹம்மத் அபு ஸஹ்ரா ﵀, பதிப்பு: (1963), பதிப்பகம்: தாருல் பிக்ர் அல் அரபி, கெய்ரோ
11. அல் மவாரீஸ் பிஷ்ஷரீஆ அல் இஸ்லாமிய்யா, ஃபீ ழவ்யில் கிதாப், வஸ்ஸுன்னா, அஷ்ஷெய்க் முஹம்மத் அலி அஸ்ஸாபூனி ﵀, பதிப்பு: (1995), பதிப்பகம்: தாருல் இல்ம் அல் அரபி, சிரியா.

12. ஃபிக்ஹுஸ் ஸுன்னா - அஷ்ஷெய்க் ஸெய்யித் ஸாபிக் ﵀, பதிப்பு: 2 (1998), பதிப்பகம்: தாருல் பிக்ர்.

13. அல் ஆஸுருல் இக்திஸாதிய்யா லி நிழாமில் மீராஸ் பிஷ்ஷீஆ அல் இஸ்லாமிய்யா - கலாநிதி நாஸிர் ஸலாமா, பதிப்பு: 1 (2009), பதிப்பகம்: இமாதுத்தீன், ஒமான்.

14. புஹூஸ் பில் மவாரீஸ் - கலாநிதி ரபீக் யூனுஸ், பதிப்பு: 2 (2010), பதிப்பகம்: தாருல் மக்தபி, சிரியா

15. அல் அஹ்வால் ஷஹ்ஸிய்யா - இமாம் முஹம்மத் அபூ ஸஹ்ரா ﵀, பதிப்பு: 3 (1957), பதிப்பகம்: தாருல் பிக்ர் அல் அரபி, கெய்ரோ

16. ஃபீ ஃபிக்ஹில் அகல்லிய்யாத் அல் முஸ்லிமா - கலாநிதி யூஸுஃப் அல் கர்ளாவி, பதிப்பு: 1 (2001), பதிப்பகம்: தாருஷ் ஷுரூக், கெய்ரோ.

17. அல் முஜ்தமஃ சஞ்சிகை - இதழ் 1945

18. மீராஸுல் மர்ஆ வகழிய்யதுல் முஸாவாத் - கலாநிதி ஸலாஹுத்தீன் ஸுல்தான், பதிப்பு: 2 (2010)

19. அல் ஈஜாஸ் ஃபில் ஃபராயிழ் -முஹம்மது இப்னு அப்துல்லாஹ் இப்னு அல்லப்பான் அஷ்ஷாஃபியீ ﵀.

-----------------------